மார்ச் '94 | அமுதசுரபி | மலர் : 46
ஸ்ரீமுக-பங்குனி | எங்கள் தமிழ்மொழி எங்கள் தமிழ்மொழி என்றென்றும் வாழியவே - பாரதியார் | இதழ் :11



● பதிப்பாளர் : ஏ.வி.எஸ். ராஜா. ● கௌரவ இலக்கிய ஆலோசகர் : என்.வி. சுப்பிரமணியன் ஐ.ஆர்.டி.எஸ். ● ஆசிரியர் : கலைமாமணி விக்கிரமன் ● இதழ் ஆப்செட் அமைப்பு : சிவகுமார் ● விலை ரூ. 6/- ● அட்டையில் : வண்ண நிழற்படமாக மைசூர் அரண்மனை வாசல். போட்டோ : யு. ராஜகோபாலன்.

அடுத்த இதழ்

## புத்தாண்டுச் சிறப்பிதழ்

சென்னை மாநகர முன்னணி எழுத்தாளர்களின் சிறுகதைகள்

ரூ. 10,000/- பரிசு பெற்ற ராஜேந்திரகுமாரின் 'தனி மரத் தோப்பு' தொடர் ஆரம்பம்

நகர்வலம்

மற்றும்

இளைய அமுதம்,
பாவை பக்கங்கள்,
நாணயம் - சிறப்புப் பகுதி
தொழில் வளம்,
இலக்கியம், ஆன்மிகம்
கவிதை, சோதிடம், கலை

# மனம் விட்டுப் பேசுவோம்

◆ அட்டையில் ஸ்ரீமஹா பெரியவர்கள் தரிசனம் தருவார் என்ற எண்ணத்துடன் 'அமுத சுரபி' அஞ்சலுறையைக் கழற்றிய வனுக்கு ஏமாற்றம்! ஆனால் வருத்த ஏமாற்றமாக இன்றி மகிழ்ச்சி ஏமாற்றமாக ஸ்வாமி பாபாவின் அழகிய பாதுகா பூஜை தரிசனம். ஸாயி ஸம்ஸ்தானத்தின் ஏடாகிய 'ஸநாதன ஸாரதி'யில்கூட வராத அரிய படம் 'அமுதசுரபி' யில் அமுதம் சுரந்திருக்கிறது. பாதுகைப் பிரதிஷ்டை குறித்த அழகான, அளவான கட்டுரையில் '108 ஜோடி தங்கப் பாதுகைகள்' என்றிருப்பது 'வெள்ளி' என்று இருக்க வேண்டும். புட்டபர்த்தி பிரசாந்தி மந்த்ரத்தில் பிரதிஷ்டை ஆகியுள்ள ஒரு ஜோடி மட்டுமே தங்கத்தாலானது. நாட்டின் வேறு பல இடங்களில் 108-ம் வெள்ளியே!

ரா. கணபதி, சென்னை 81.

◆ அமரர் சின்னி கிருஷ்ணன் நினைவுச் சிறுகதைப் போட்டியில் பரிசு பெற்ற மூன்று சிறுகதை களும் மூன்று கோணங்களில் சமு தாய யதார்த்த நிலையைப் பிரதி பலித்தன. ஆநிரைகளைக் காக்க வேண்டிய கோபாலனே அவை களின் இறப்புக்குக் காரணமாக அமைகிறான் என்பதும், கடவுள் ஒவ்வொன்றையும் ஒரு காரணத் தோட, அர்த்தத்தோடதான் செய் கிறார் என்பதையும் நிதர்சனமாகக் காட்டியிருக்கிறார் ஜி. நாரா யணன். 'ஊர்வலத்தில்' பந்தலை 40 அடி உயரத்தில் போடுவதன் மூலம் எம்மதத்தின் ஊர்வலத்திற் கும் பங்கம் இல்லாமல் ஆசிரியர் காட்டுவது மனித மனமும் மிக உயரத்தில் உயர்ந்த சிந்தனையில் நினைத்தால் ஜாதி, மத வேறுபாடு கள் - பகை வருவதில்லை என் பதை கோடிட்டுக் காட்டுகிறார் பானுமதி ராஜகோபாலன். தன் னைக் கொன்று இதயத்தை எடுத்துச் செல்லும் மகன் வழியில் கல் தடுக்கிக் கீழே விழும்போது 'மகனே பார்த்துச் செல்லக் கூடாதா?' என்று தாயின் இதயம் கேட்டதாம். அதுபோல எவ்வளவு தான் கெட்டவனாக இருந்தாலும் அவனுக்கு ஆதரவாக குரல் கொடுக்கும் ஓர் ஆன்மா தாய் என்பதை உத்தமசோழன் அருமை யாகக் காட்டுகிறார். மூன்று சிறு கதைகளும் சிறப்பாக அமைந்து விட்டன. தேர்ந்தெடுத்த நடுவர் களுக்குப் பாராட்டுகள்.

புலவர் கருமலைத் தமிழாழன், ஒசூர் 635109.

◆ டாக்டர் கி. வேங்கட சுப்பிரமணியம் எழுதும் திருக் குறளில் மானேஜ்மெண்ட்; டாக்டர் தி. முத்து கண்ணப்பர் எழுதும் தமிழில் தவறுகளை அறிவோம் என்பன நான் விரும்பிப் படித்து சிந்தனையில் இருத்த நினைக்கும் பொருள்களாகும்.

சு. ராமநாதன், சென்னை 97.

◆ 'பாவை பக்கங்கள்' மக ளிருக்கு மிகவும் பயன்தரும் பகுதி. 'இளைய அமுதம்' பெயர் தரும் போட்டியில் முடிவை விரைவில் அறிவித்து சூட்டியதற்காகவும் நன்றி. மோதிரத்தில் கல் பதித் தாற்போல் பரிசுகள் பெற்ற சிறு கதைகளை ஒரே இதழில் படிக்க தக்கதோர் வாய்ப்பருளிய தங்க ளுக்கு இதயம் கனிந்த நன்றி. சங்கப் பலகைக்கு மூன்று பக் கங்கள் - சிறப்புமிகு சேவை.

கே. ஜகந்நாதன், சேலம் 15.

◆ இளைய அமுதத்திலுமா சினிமா பகுதி வேண்டும்? தயா ரிப்பாளர் குண்டுமணி யோசிக்க வேண்டும் என கேட்டுக் கொள் கிறேன்.

சிம்மவாஹினி, சென்னை 39.

◆ 'அமுதசுரபி'யை இனி 'நவ ரச மஞ்சரி' என்றுகூட சொல்ல லாம். 6 ரூபாய்க்கு நல்ல விருந்து.

திருமதி சுகந்தி நாராயண், மதுரை 625 011.

◆ குறிப்பிட்ட சமூகத்தாரை வைத்து கதையெழுதும் உத்தி குறைந்து விட்ட இந்த நாளிலும் துணிந்து, பிராமணச் சமுதாய வாழ்வை தொடர்கதையாக்கும் துணிச்சல் பி.வி. ஆருக்கு வர - பரிசு கொடுத்து, பிரசுரித்து ஆத ரிக்கும் பெருங்குணம் 'அமுத சுரபி'க்கு வர - வாசகர்கள் மற்று தமிழுக்கும் 'காலமெல்லாம் வீசும் காற்றாடி'யாக பி.வி.ஆரின் 'வான மெல்லாம் ஆசைக் காற்றாடி' வலம் வந்தது.

வாசுதேவன், இராயப்பேட்டை.

◆ பி.எச்டி ஆய்வுப்பட்டம் என்ற இலட்சியக் கனவை சுமந்த வளுக்கு உலகில் இதைவிட பல அரிய செயல்களை விளம்பரமின்றி செய்யும் சாதாரணமானவர்களைக் கொண்டு உணர்த்துவது மிக மிக அருமை. ஒவ்வொரு மாதமும் என்று வரும் என. எதிர்பார்க்கும் திருப்பங்கள், தடுமாற்றமற்ற அழகான தமிழ் நடை, இவை களை அளித்த அமுதசுரபிக்கும் பி.வி.ஆர். அவர்களுக்கும் பாராட்டுகள்.

கே. கண்ணன் தேவன், திருச்சி.

◆ ஆரம்பத்தில் கேரள சரித் திரம், நாகரிகம், பழக்க வழக் கங்கள், மலையாளம் கலந்த தமிழ், பாரதி வளர்ந்த முறை, அபிலாஷைகள் அனைத்தும் அழகான நடையில் சித்தரிக்கப் பட்டு, எப்பொழுது அடுத்த இதழ் வரும் என்று எதிர்பார்க்கும் அளவு சுவாரசியமாக இருந்தது. பாரதி யின் தந்தை 'மௌலி' வரவழைக் கப்பட்டு பாரதி பி.எச்டி. அடிப் படையில் புறக்கணிக்கப்பட ஆரம் பத்திலிருந்து சற்றே சுவாரசியங் குன்றி காணப்படுகிறது. மேலும் அழகான குடும்ப சித்திரமாக, பாரதியின் சரித்திரத்தைத் தொடர்ந்திருக்கலாமே? இவ்வளவு சுருக்கமாக கதையை முடித்தது சற்றே ஏமாற்றமாகவுள்ளது.

திருமதி ஸுஜாதா ராகவன், சூளைமேடு.

◆ 'மகாநதி' பட விமர்சனத்தை அமுதசுரபி அலசி விமர்சித்தது போல் வேறு எந்த பத்திரிகையும் விமர்சிக்கவில்லை என்பதை நினைக்க அமுதசுரபியின்மேல் அபிமானம் கூடுகிறது.

அ. செபாஸ்டின், களியல் 629 101.



இலக்கியம்

# சங்கப் பலகை

## வ.வே.சு. ஐயர் அரசியல்-இலக்கியப் பணிகள்

(ஆசிரியர் : பெ.சு. மணி. வெளியீடு : உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை - 600 113. விலை : ரூ. 45/-. பக் : 276)

"குளத்தங்கரை ஆலமரம்", "மங்கையர்க்கரசியின் காதல்" போன்றவை மூலம் சிறுகதை முன்னோடியாகவும், "கேட்டீரோ தமிழர்களே நம்மில் மிக்க கீர்த்தி கொண்ட தமிழரின் வீழ்ந்த செய்தி?..." என்று கருத்து மாறுபட்ட நிலையிலும் பாரதிதாசன் அவர்களால் போற்றப்பட்டவருமான தேசியச் சிந்தனைமிக்க வ.வே.சு. ஐயருடைய வாழ்க்கை வரலாற்றை, பண்பாட்டை மிகச் சிறப்பாக வடித்துத் தந்துள்ளார் நூலாசிரியர் பெ.சு. மணி. ஆய்வுச் செழுமையுள்ள இந்நூலில் பாரதி பற்றிய தகவல்களும் தக்க ஆதாரங்களுடன் எடுத்தாளப்பட்டுள்ளன.

"காந்தியையும், வீரசாவர்க்காரையும் சந்தித்த ஆறு மாதத்திற்குள் தன் அருமை மகளைக் காப்பாற்ற பாபநாசம் அருவியில் விழுந்து சுழலில் சிக்கி மகளுடன் இறந்தார்". இப்படி எத்தனை எத்தனையோ தகவல்கள். இந்தியர்கள் வரலாற்றைத் தெரிந்து கொள்ளாவிட்டாலும் நம்மவர்கள் வரலாற்றையாவது நாம் தெரிந்து கொள்ள வேண்டாமா? வாங்கிப் படியுங்கள்.

## சித்த மருத்துவம்

(ஆசிரியர் : டாக்டர் சுப. சதாசிவம். வெளியீடு : வானதி பதிப்பகம், சென்னை - 17. விலை : ரூ. 30/-. பக் : 200)

தேரையர், போகர், திருமூலர், அகத்தியர் போன்ற சித்தர்களின் பாடல்களை ஆங்காங்கே சுட்டிக் காட்டி, சித்த மருத்துவத்தின் மகத்துவத்தைக் கூறும் இந்நூலில் தமிழ் நாட்டில் ஹெச்.ஐ.வி. (எய்ட்ஸ்) பரிசோதனை செய்யுமிடங்களும் பட்டியல் போட்டுக் காட்டப்பட்டுள்ளது.

## சிந்துப் பாடல்களின் யாப்பிலக்கணம்.

(ஆசிரியர் : முனைவர் இரா. திருமுருகன். வெளியீடு : பாவலர் பண்ணை. 62, மறைமலை அடிகள் சாலை, புதுச்சேரி - 1. விலை : ரூ. 70/-. பக் : 222)

சிந்துப் பாடல்களுக்கு புலவர் குழந்தை, கி.வா. ஜகந்நாதன், ம.ரா. பூபதி, சரவணத் தமிழன் ஆகியோர் வகுத்த இலக்கணங்களை விளக்கி அதற்குமேலே ஒருபடி சென்று புதிய இலக்கணம் வகுத்துள்ளது ஆசிரியருக்கு மட்டுமல்ல, தமிழுக்கே பெருமை சேர்ப்பதாகும். தொல்காப்பியர் முதல் அண்மைக் காலம் வரை இயற்பா, இசைப்பா இவற்றின் கூறுகளை விளக்கி இறுதியாக யாப்பிலக்கணம் வகுத்துள்ளது தமிழிலக்கணத்திற்குப் புத்தொளி வீசுவதாக உள்ளது.

இலக்கிய, இலக்கண மேற்கோள்களைக் கொண்ட இவ்வாய்வு நூல் சராசரி மனிதன்கூட எளிதில் படித்து இன்புறத்தக்க வகையில் எழுதப்பட்டுள்ளது மற்றோர் சிறப்பாகும்.

## நடன முத்திரை

(ஆசிரியர் : நாட்யாசார்யா ஸ்ரீ.எஸ். பாலசந்த்ரராஜு. வெளியீடு : சிவரஞ்சனி பப்ளிகேஷன்ஸ், 12-A, சக்தி நகர் 2ஆவது தெரு, சென்னை - 94. விலை : ரூ. 22/-. பக் : 132)

ஐந்தாம் வேதமாம் நாட்டியக் கலையின் நான்கு வகை அபிநயங்களை விளக்கி அவற்றுள்ளும் "அசம்யுத முத்திரைகள்" "சம்யுத முத்திரைகள்" என்று கைகளுக்குள்ள முத்திரைகள் பற்றி விளக்கமாக படங்களுடன் உருவாக்கப்பட்டுள்ளது இது. "அசம்யுத முத்திரைகள்" - 36, "சம்யுத முத்திரைகள்" - 37 ஆக 73 முத்திரைகள், செய்முறை விநியோகத்துடன் கூடிய இந்நூல் நாட்டியம் பயில்வோருக்கு, ஆர்வலர்களுக்கு பயனுள்ள நூல்.

## தமிழஞ்சலி

(ஆசிரியர் : புலவர் என்.வி. கலைமணி. வெளியீடு : தமிழ் அரசி நூலகம், 84, டி.டி.கே. சாலை, சென்னை - 18. விலை : ரூ. 30/-. பக் : 217.)

நடைச்சித்திரம் தீட்டுவதில் வ.ரா, இளங்கோவன், கலைமணி என்று விந்தன் அவர்களால் புகழப்பட்ட இவ்வாசிரியர், "அப்பன் நீ அம்மை நீ, ஐயனும் நீ, அன்புடைய மாமனும் மாமியும் நீ" என்று அப்பர் பெருமான் பாடியதுபோல, "அன்பு நீ அறிவு நீ பண்பு நீ பைந்தமிழின் சீரிளமைத் திறம் நீ" என்று அண்ணாவுக்கு அஞ்சலி செலுத்தியிருப்பது ஆழ்ந்த புலமையையும் அண்ணாவின் மீது கொண்டுள்ள பெருமதிப்பினையும் காட்டுகிறது. வளமான செறிவான இலக்கியம்.

## தமிழ்த்திரைப்பட வரலாறு

(ஆசிரியர் : முக்தா. வி. சீனிவாசன். வெளியீடு : கங்கை புத்தக நிலையம், சென்னை - 600 017. விலை : ரூ. 100/-. பக் : 365)

தமிழறிஞர் சாமி. சிதம்பரனாரால் அரசியல் மேடை ஏறி, திரு எம்.ஏ. வேணு அவர்களால் திரைப்பட இயக்குநராக்கப்பட்டு, வீணை பாலசந்தரிடம் திரைப்படத் தொழில் நுட்பக் கலையைக் கற்று, தமையனார் வி. ராமசாமி அவர்கள் மூலம் திரைப்படத் துறையில் நுழைந்து சுமார் 46 ஆண்டு காலமாக திரையுலகப் பணியாற்றி வரும் முக்தா வி. சீனிவாசன் அவர்களின் வரலாறும் இதில் அடக்கம். திரைப்படத் துறையில் எவர் பெயரும் விட்டுவிடக் கூடாது என்ற நோக்கில் அனைவரையும் திருப்திப்படுத்தும் வகையில் இந்நூல் சிறப்பாக தயாரிக்கப்பட்டுள்ளது.

## நாட்டுப்புற நிகழ்கலைகள்

(ஆசிரியர் : டாக்டர் கே.ஏ. குணசேகரன். வெளியீடு : நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட், சென்னை - 98. விலை : ரூ. 18/-. பக் : 112)

நாட்டுப்புற நிகழ்கலைகளையும், கலைஞர்களையும் பற்றிய இந்நூலில் தமிழ்நாடு இயல் இசை நாடக மன்றத்தில் நாட்டுப் புறக் கலைத்துறை என்ற தனிப் பிரிவு இயங்க வேண்டியதன் தேவையையும், அவசியத்தையும் உணர்த்தும் ஆசிரியர், இக்கலை வடிவங்கள் அழிவதற்கான காரணங்களையும் ஆழ்ந்து சிந்தித்துள்ளார். நாட்டுப்புறவியல் பற்றிய நல்ல ஆய்வு நூலிது.

## மனித தெய்வம்

(ஆசிரியர் : சரயு. வெளியீடு : சரயு பதிப்பகம், B-4, பிரபாத் அபார்ட்மெண்ட்ஸ், 1, கமலாபாய் தெரு, சென்னை – 17. விலை : ரூ. 22/-. பக் : 164)

சிரவண பெலகோளாவில் உள்ள கோமதீஸ்வரரின் உருவம் போல பாத்திரங்களை உயர்வாகப் படைத்து அவர்கள் மூலம் அன்றாட வாழ்க்கைப் பிரச்னைகளைச் சித்திரித்துக் காட்டுவதன் மூலம் தன்னையும் ஓர் உயர்ந்த கதாசிரியை என்பதை நிரூபித்துள்ளார் சரயு. மாயை வலையில் விழுந்த குமரப்பன் முதல், மனித தெய்வம் தேசிகாச்சாரி வரை எல்லோருமே நாம் சந்திக்கக் கூடியவர்கள். படிப்பினையைத் தரக்கூடிய பாத்திரங்கள்.

## காதலாகிக் கசிந்துருகி...

(ஆசிரியர் : இந்திரா சௌந்தர் ராஜன். வெளியீடு : கங்கை புத்தக நிலையம், சென்னை – 17. விலை : ரூ. 22/-. பக் : 172)

மானுட அன்பின் புதிய பரிமாணத்தை ஏற்படுத்தும் ஆற்றல் காதலுக்கு மட்டுமே உள்ளது என்பதை தன் இரு குறுநாவல்கள் மூலமும் (இதில் 'காதலெனும் வானவில்' என்ற தலைப்பில் ஏற்கனவே வாஸந்தியின் நாவல் வெளிவந்துள்ளது) வெளிப்படுத்தியுள்ளார் இந்திரா சௌந்தர் ராஜன். "சுகம் அது துன்பமான இன்பமானது" என்ற திரைப் பாடலின் மறுபதிப்பாக "காதல் என்பது இன்பம் போன்ற துன்பம்" என்று சற்று வித்தியாசமாகக் கையாளப்பட்டுள்ளது.

## பார்வை நேரம்

(ஆசிரியர் : ராஜ். வெளியீடு : சூர்யா பப்ளிகேஷன்ஸ், 75, மோபரீஸ் சாலை, சென்னை – 18 விலை : ரூ. 25/-. பக் : 164)

எழுத்துலகில் இருப்பவர்களை விட வெளியே சிறந்த கற்பனைவாதிகள் இருக்கிறார்கள் என்ற யதார்த்தத்தை ஒப்புக் கொள்கின்ற பெருந்தன்மை ராஜ் அவர்களிடம் உள்ளது என்பதற்கு இந்நூலே அத்தாட்சி. கவிதையில் பாடு பொருளாக எதையும் கொள்ளலாம் என்பதுபோல வாழ்க்கையில் எந்தப் பொருளுமே அற்புதம் நிறைந்த ஆனந்தம் விளைவிக்கக் கூடிய பொருள்தான் என்ற மனப்பக்குவத்தின் முதிர்ச்சி இக்கதைகளுக்கு அடித்தளமாக விளங்குகிறது. கதைகளை சுவைத்து மகிழலாம்.

—பின்னலூர் மு. விவேகானந்தன்

## யோகா சிகிச்சையும் செய்முறையும்

(ஆசிரியர் – மானோஸ். வெளியீடு – குமரன் பதிப்பகம், 2, முத்துக்கிருஷ்ணன் தெரு, தி.நகர், சென்னை – 17). பக்கங்கள் 232. விலை ரூ. 30/-.

யோகாசன முறைகள் மூலம் நோயைப் போக்கும் யோக சிகிச்சை வழிகளையும் – யோக சிகிச்சையில் போதிக்கப்படும் யோகாசனம், பிராணாயாமம், உடற்பயிற்சி, உணவு, ஒழுக்கம், மசாஜ், பிராண சக்தி அளித்தல், தன்மொழி, மனச்சோதனை, துதி சிகிச்சை முறைகளையும் விளக்குகிறது இந்நூல்.

## சாஸ்திரபடி நீங்களும் சொந்த வீடு கட்டுங்கள்

(ஆசிரியர் – ராஜன். வெளியீடு – சங்கீத வாணி, 91, வி.எம்.தெரு, மயிலாப்பூர், சென்னை – 600 004. பக்கங்கள் – 100. விலை – ரூ. 12.50).

சொந்தவீடு கட்டுவதற்கு தயார் செய்துவிட்ட நிலையில், ஒவ்வொருவரின் ராசி, லக்னபடி முறையாக சாஸ்திர சம்பிரதாயப்படி தொடங்குவதற்கு வேண்டிய வழி முறைகள் அனைத்தும் இந்நூலில் மிக தெளிவாகக் கூறப்பட்டுள்ளன. அதுமட்டுமில்லாமல் எந்த முறையில் கட்டலாம்? என்ன கலரில் வர்ணம் பூசலாம் என்பதையும் இந்நூல் ஆசிரியர் ராஜன் குறிப்பிட்டுள்ளார். வீடு கட்டுவதற்கு முன் படித்துப் பயன்பெற இந்நூல் உதவும்.

நாகு

## இராமாநுசர்பிள்ளைத்தமிழ்

(எழுதியவர் – வாரஸ்ரீ. வெளியீடு – மாயன் பதிப்பகம், 3 ஏ. டி.பி.கோயில் 2 ஆவது தெரு, திருவல்லிக்கேணி, சென்னை – 5. விலை – ரூபாய் 12.00).

பேராசிரியர் டாக்டர். மதி சீனிவாசன் அவர்களுடைய அழகிய அணிந்துரையுடன் இப்பிள்ளைத் தமிழ் தொடங்குகிறது. தொண்டை நாட்டில் திருப்பெரும்புதூரில் பிறந்து ஆயிரம் பிறை கண்டு அவனி முழுவதும் வைணவம் தழைக்க வாழ்ந்து திருநாடு அடைந்த மோட்ச முனிவர் ஸ்ரீ இராமாநுசரைப் பிள்ளைத் தமிழில் வைத்துப் பாடியுள்ளார், நூலாசிரியர். பத்துப் பருவப் பாடல்களும் நற்றமிழ் முத்துத் தவமும் பாடல்கள். தமிழும் வைணவமும் ஒன்றோடு ஒன்று இழைந்து இனிய பாக்களாக மலர்ந்துள்ளன. வைணவர் அனைவர் இல்லத்திலும் இருக்க வேண்டிய நூல்.

—தாமரைக்கண்ணன்

## வைணவ வழித்தோன்றல் வரலாறு

(ஆசிரியர் – டாக்டர். மா. வரத ராஜன். வெளியீடு – அனந்த் பதிப்பகம், 14/86, பத்மாவதிபுரம், திருச்சானூர் ரோடு, திருப்பதி – 517 503. பக்கங்கள் – 68. விலை – ரூ. 12.00).

வைணவ பூர்வ ஆசாரிய பரம்பரை மணவாள மாமுனிகளுடன் நிறைவு பெறுகிறது. தெளிவான எழுத்து அவரது நூல்களுக்குள்ள தனிச்சிறப்பு. அவர் அருளிய உபதேச ரத்தின மாலை, ஆழ்வார்கள் ஆசாரியர்கள் பற்றிய பிறந்த நாள் மற்றும் சிறப்புகளை 73 பாடல்களில் சுருக்கமாகத் தெரிவிப்பதாகும்.

பாரதி சுராஜ்




அரசியலில் பரபரப்பாக அடிபட்ட பெயர் கொண்ட படத் தலைப்பு. 'சுப்ரமணியக் கடவுளுக்கு இரண்டு பொண்டாட்டி. படத்தில் நாயகனைச் சுற்றி இரண்டு பெண்கள் (ப்ரியாராமன், ஊர்வசி) அதனால் இப்படி ஒரு பெயரை வைத்தேன்' என்று தனது இயக்கத்தில் படத்தை நகைச்சுவை ஆக்கியிருக்கிறார், படக் கதாநாயகன் பாண்டியராஜன்.

ஆனால் படத்திற்குள் ஒரு செய்தியை 'செய்யும் தொழிலே தெய்வம்' என்கிற வாசகத்தை அழுத்தமாய் ஊன்றியிருக்கிறார்.

சுப்ரமணிய சுவாமி பட விமர்சனத்திற்காக இம்முறை தம்பதி சகிதமாய் வந்தவர்களிடம் கருத்துகளைக் கேட்டு இங்கே தொகுத்துள்ளோம்.

---

**திருமதி வித்யா சுரேஷ் (அனுக்ரஹ் மார்க்கெட்டிங் அட்வர்டைஸிங்)**

---

கதை அளவில் அழுத்தம் அதிகம் இல்லை. வள்ளியாக வரும் ப்ரியாராமன் பளிச்சிடுகிறார். பாண்டியராஜன் தன் காதலியைப் பற்றிச் சொல்லும் காட்சியில் ஊர்வசி நம்மை உருக்குகிறார். ஆர். சுந்தர்ராஜனின் காமெடி கலந்த முரட்டுத்தனம் ரசிக்கும்படியாக இருக்கிறது.



தேவாவின் இசையில் பாடல்கள் கேட்கும்படியாக இருக்கின்றன. காமிரா அருமை. சார்லி, லூஸ் மோகன் காமெடி சுமார். மொத்தத்தில் பாஸ் மார்க் கொடுக்கலாம்.

---

**திருமதி பத்மாவதி ஜீவரத்தினம் (தமிழ்நாடு சர்க்கரைக் கழக நிறுவனம்)**

---

சுப்ரமணிய சுவாமி ஒரு முழு நீள நகைச்சுவைப் படம். குழந்தைகள் முதல் பெரியவர் வரை பார்க்கக் கூடிய குடும்பப் படம். சிரிப்பு நடிகர்களான சார்லி, மண்ணாங்கட்டி, லூஸ் மோகன் ஆகியோர் சினிமா தொடக்க முதல் கடைசி வரை சிரிக்க வைக்கிறார்கள்.

வேலை தேடி வந்த வேலாயுதம் தெய்வம் தந்த தொழிலாக சவரத் தொழிலை ஏற்றுக் கொள்வதும், தாய்மாமன் சுந்தர்ராஜனின்



வாய்ச்சொல் பலித்து அவருக்கே ஷேவிங் செய்வது தெய்வத்தின் செயல் என்று கூறுவதும் ஏற்கக் கூடியதாக இருக்கிறது.

---

**திருமதி கார்த்திகை குமரேசன் (தமிழக அரசுத் துறை ஊழியர்)**

---

படம் காமெடி கலந்த சீரியஸ் படமாக இருக்கிறது. படத்தின் பெயர் சாமி படமோ என்று தோன்றியது; படத்தை



பழநியில் நன்கு படமாக்கி இருக்கிறார்கள். க்ளைமாக்ஸ் காட்சி நல்லபடியாக முடிந்திருக்கிறது.

---

**திருமதி கோமதி சுந்தரம் (பர்ஃபெக்ட் பெனிஃபிட் ஃபண்ட்)**

---

சார்லி, மண்ணாங்கட்டி சுப்ரமணியத்தின் நெஞ்சை மட்டும் தொடவில்லை, படம் பார்க்கும் எல்லோர் நெஞ்சையும் தொட்டு விட்டனர். 10 ரூபாய் செலவில்



பழநி சென்று வந்த திருப்தி. நல்லவேளை இந்த சுப்ரமணிய சுவாமி இரண்டில் ஒன்று போதும் என்ற முடிவோடு இருந்து விட்டார்.

தொகுப்பு : நாகராஜகுமார்



அறந்தாங்கி ரோட்டரி சங்கமும், சிவம் மருத்துவமனையும் இணைந்து நடத்திய விழாவில் டாக்டர் சுப. சதாசிவம் எழுதிய 'சித்த மருத்துவம்' நூலை குன்றக்குடி அடிகளார் வெளியிட்டார். கலைமாமணி விக்கிரமன் விழாவிற்குத் தலைமை தாங்கி முதல் பிரதியைப் பெற்றுக் கொண்டு சிறப்புரை ஆற்றினார்.





## வாலீஸ்வரர் கோயிலுக்கு நடராஜர் விக்கிரகம்

மயிலாப்பூர் அருள்மிகு பெரிய நாயகி சமேத வாலீஸ்வரர் திருக்கோயிலுக்கு கோலவிழி மாலா என்ற பக்தையின் முயற்சியால் பஞ்சலோகத்தால் செய்யப்பட்ட நூதன . பிரம்மாண்டமான நடராஜப் பெருமான் விக்கிரகம் காணிக்கையாக வழங்கப்பட்டது. ஆருத்ராவை முன்னிட்டுச் சிறப்பு மகா அபிஷேகமும், ஆருத்ரா தரிசனமும் நடைபெற்றது. விழாவிற்கான ஏற்பாடுகளை கோயில் நிர்வாக அதிகாரி ராஜுவும், வாலீஸ்வரர் பக்தஜன சபையினரும் சிறப்பாகச் செய்திருந்தனர். இக்கோயில் 12 ஆம் நூற்றாண்டு திருக்கோயில் என்பதும், மயிலையைச் சுற்றியுள்ள ஏழு முக்கிய சிவாலயங்களில் ஒன்று என்பதும் குறிப்பிடத்தக்கது.

புது டில்லியில் 31.1.94 அன்று தேசிய கலாசார ஸ்தாபனம் பக்திப் பரவசத்துடன் ஸ்ரீதியாகராஜர் 147ஆவது ஆராதனை விழாவை நடத்தியது. இதில் பல கலைஞர்கள் பங்கெடுத்துக் கொண்டனர். குமாரி சுவேதா கோபாலனின் பரதநாட்டிய அரங்கேற்றம் விமரிசையாக நடந்தது. ஸ்ரீதியாகராஜர் கிருதிகளுக்கு சுவேதா அழகாக அபிநயம் செய்தார்.

## ஐஸ்வர்யா நாகராஜன்

மேடையில் விநாயகரைத் துதித்து விட்டு இரண்டாம் ஐட்டத்திற்குப் போகும்போதே அத்தனை பேர் கவனமும் அந்தச் சிறுமியிடம் பிடிபட்டுவிட்டது. வயது எட்டு! உருவமும் மெல்லிசு! நிறைய எதிர்பார்க்கக்கூடாது என்று நினைத்தது போக, நிறையவும் கொடுத்து இன்னும் என்ன எதிர்பார்க்கிறோம் என்று கேட்பது போலிருந்தது, அந்தச் சிறுமியின் நாட்டியம்.



கானடாவில் ஜதிஸ்வரம் ஆகட்டும், 'ஆயர் சேரியை' என்ற பாடலாகட்டும் அத்தனை பாவங்களும், அபிநயனங்களும் எல்லாம் எலெக்ட்ரானிக் வேகங்களில் வருகின்றன. எங்கேயாவது தயக்கமோ, பிசிறோ இருக்க வேண்டுமே! சுத்தமாக ஒரு பரிசுத்த நடனத்தை ஆடினாள் செல்வி ஐஸ்வர்யா நாகராஜன். சிறுமி சிறுமியாக இல்லை, தனிஉலகில் சஞ்சரிப்பது போல் தோன்றி விட்டாள். அப்படி ஒரு மெய் மறப்பு, லயிப்பு, களிப்பு.



பார்ப்பவர் எல்லோருக்கும் இதனால் ஆனந்தம் பரிமளிப்பு!

பிரபல பத்மினி குழுவைச் சேர்ந்த சந்திரகலாவுக்கு நிச்சயம் இந்த சீடப்பெண் நிறையப் புகழ் வாங்கிக் கொடுத்து விட்டாள். அன்று பாடியவரின் குரலும் நாட்டியப் பரிமளிப்புக்கு நன்கு உதவியது.

## ஜி. ஆர். பப்ளிகேஷன்ஸ்

ஆங்கிலம் கற்க இரண்டு சிறந்த புத்தகங்களை சென்னையைச் சேர்ந்த G.R.P. நிறுவனம் வெளியிட்டுள்ளது. இதுவரை வெளிவந்த மூன்று பதிப்புகளும் மிகக் குறுகிய காலத்தில் விற்பனையாகிவிட்டன. ஒரு டியூஷன் டீச்சர் வீட்டிற்கே வந்து பாடங்களைச் சொல்லிக் கொடுப்பதைப் போல அமைக்கப்பட்டுள்ள பாடங்கள் தான் இப்புத்தகங்களின் சிறப்பு அம்சமாகும்.

இன்னும் தொழில்நுட்பக் கலை, சமையற் கலை, வீட்டுப் பராமரிப்புக் கலை, குழந்தை வளர்ப்புக் கலை, வீட்டுப் பிராணிகள் வளர்ப்புக் கலை, தோட்டக் கலை, தையற் கலை, ஓவியக் கலை, உரையாடற் கலை போன்ற பல்வேறு கலைகளைச் சொல்லிக் கொடுக்கும் புத்தகங்களை ஜி.ஆர். பப்ளிகேஷன்ஸ் விரைவில் வெளியிட இருக்கிறது.

தம் பணியைப் பற்றித் தகவல் தொடர்புச் சாதனங்கள் மூலம் விளம்பரப்படுத்தும் முயற்சியில் டி.வி.யில் வெளியிடத் தயாரித்துள்ள படச்சுருளை டைரக்டர் எஸ்.பி. முத்துராமன் அவர்கள் வெளியிட்டார். எழுத்தாளர் திருமதி. இந்துமதி அவர்கள் படச்சுருளை அவரிடமிருந்து பெற்றுக் கொண்டார்.

# பாவை பக்கங்கள்
(அமுதசுரபி வழங்கும் பெண்கள் பகுதி)

தொகுப்பு –
கிரிஜா ராகவன்

படம் :
ஸ்ரீராம் ராகவன்

## எண்ணிப் பார்க்கலாம் பெண்ணே!

அன்புச் சகோதரிகளே!

ஒரு பெண்ணுக்குப் பலவிதமான முகங்கள் உண்டு. ஒரே குடும்பத்தில் அம்மாவாய், மனைவியாய், அண்ணியாய், மருமகளாய் இப்படி இன்னும் பலவாய் ஒரே நேரத்தில் அவள் இருக்கும்படி ஆகிறது.

எந்த முகமாய் இருந்தாலும், அந்தக் குடும்பத்தின் ஆதார சுருதிக்கு அவள் முகம் அன்பாய்த் தெரிய வேண்டியிருக்கிறது.

கணவனிடம் கனிவாய் இருந்துவிட்டு, நாத்தனாரிடம் சுள்ளென்று விழுந்துவிட்டால் நாளெல்லாம் வீட்டில் கலகம்தான். மாமியாருக்காக மாங்கு மாங்கென்று வேலை செய்து நல்ல பெயர் வாங்கிவிட்டு, மகனை நாலு சாத்து சாத்தினால் அவன் சாப்பிட அழுது அடம் பிடித்து ஏக ரகளைதான்.

இப்படி ஒருத்தருக்கு மட்டுமென்றில்லாது வீட்டில் அனைவருக்கும் இன்முகம் காட்டுவது ஒரு பெண்ணின் அத்தியாவசியக் கடமையாகி விடுகிறது. மற்றவர்களுக்கு என்று மட்டுமில்லாது, தன்னுடைய நிம்மதிக்காகவும் ஒரு பெண் இதைச் செய்ய வேண்டியது மிக அவசியம்.

ஆனால் இது ஒன்றும் அத்தனை சுலபமான வேலையில்லை. அம்மானை ஆடுவது போல் அத்தனை பேருக்கும் ஈடுகொடுப்பது ரொம்ப சிரமம். அதிலும், வேலைக்குப் போகும் பெண்களாக இருந்துவிட்டால் இன்னும் கஷ்டம்தான்.

இருந்தாலும், வார்த்தைகளில் நயமும், முகத்தில் முறுவலும் நிரந்தரமாக இருந்துவிட்டால் ஒரு பெண்ணுக்கு அதைவிடச் சிறந்த கவசம் எதுவும் இல்லை.

கவசம் என்று இவைகளைக் குறிப்பிட முக்கியக் காரணம் உண்டு. ஏதேனும் குற்றம் கண்டு பிடித்து வேண்டுமென்றே வம்புக் கிழுக்க வரும் எதிராளிகூட இந்தக் கவசத்தை எதிர்நோக்கியதும் கூர் மழுங்கித் திரும்பிச் சென்று விடுவான்.

நான் குழந்தையாக இருந்த போது என் பாட்டியைப் பார்த்திருக்கிறேன். ஒரு டஜன் பெரியவர்களும் ஏழெட்டுக் குழந்தைகளும் நிரந்தரமாக இருந்து கொண்டிருந்த குடும்பத்தில், துர்வாச தாத்தாவை வைத்துக்கொண்டு, அடிக்கடி அரிசிக்கும் பருப்புக்கும் கையைப் பிசைந்து கொண்டிருந்த காலத்திலும் காலையில் ஐந்து மணியிலிருந்து படுக்கப் போகும் வரை அப்போதுதான் குளித்து விட்டு வந்தாற்போன்று ஒரு நேர்த்தியான புடைவைக்கட்டுடன் நெற்றிக் குங்குமம் கொஞ்சம்கூடப் பிசிறாமல் நிரந்தரமான புன்னகையுடன் இருந்ததுதான் – அந்தக் குடும்பம் சண்டை சச்சரவு இல்லாமல் இன்று கிளைவிட்டுப் பரவி இருப்பதன் காரணம் என்று இன்று என்னால் விவரமாகப் புரிந்து கொள்ள முடிகிறது.

இன்றைய அவசர வாழ்வில் இது சாத்தியமா என்றால், சாத்தியப்படுத்திக் கொள்ள வேண்டியது ஒவ்வொரு பெண்ணின் கடமை.

மனசில் அமைதியைக் கொண்டு வர ஆண்டவன் முன்னால் பத்து நிமிடமாவது உட்காருவது துணைபுரியும். எந்த விதத்திலாவது இந்த அமைதியை மனதுக்குள் கொண்டு வந்து இன்சொல்லும், இளநகையும், கைவசப்பட்டால், – பிறகென்ன, குடும்பம் ஒரு கோலாகலம்தான்.

பாவை பக்கங்களில், சமையலுக்கு இடமில்லையா என்று சிலர் கருத்துத் தெரிவித்திருந்ததால் சமையலுக்கும் இந்த இதழில் ஒரு பக்கம் ஒதுக்கியிருக்கிறோம். வாசகர்களின் கருத்துகளையும் ஈடுபாட்டையும் மேலும் எதிர்பார்க்கிறோம்.

நட்புடன்
கிரிஜா ராகவன்



### புதுமையான கோலப்போட்டி

இந்த மாதம் பரிசு பெறும் கோலம் இதோ! 6 புள்ளி 6 வரிசை. டி. லலிதா, திருநெல்வேலி.

★ வாசகர்கள் இந்த இடம் பிடித்துப் பரிசு வாங்க இதுவரை வெளிவராத புதுமையான சிறந்த கோலம் கறுப்பு மையினால் போட்டு உடனே அனுப்பவும். தேர்ந்தெடுக்கப்படும் கோலத்துக்குப் பரிசு ரூ. 50/-.

# உங்கள் குழந்தைகளின் கோபத்தை எப்படிச் சமாளிக்கிறீர்கள்?

("என் புள்ள ரொம்பப் படுத்த றாம்ப்பா. எதுக்கெடுத்தாலும் கோபம்" என்றோ, "கோவிச்சின்டான்னா சாப்பிடவே மாட்டான். சமாதானப்படுத்தறதுக்குள்ள உயிர் போறது" என்றோ தாய்மார்கள் தங்கள் குழந்தைகளின் கோபத்தைப் பற்றி அடிக்கடி அலுத்துக் கொள்வார்கள். இங்கே சில அம்மாக்கள் தங்கள் புத்திர சிகாமணிகளின் கோபத்தை எப்படிச் சமாளிக்கிறோம் என்று சொல்கிறார்கள்).



என் பையன் "அத்வைத்" இரண்டு வயதுதான். அழகாக விளையாடிக் கொண்டிருப்பான். திடீரென்று அடுத்த குழந்தை கையில் வைத்துக் கொண்டிருக்கும் பொருள் வேண்டும் என்று அடம் பிடிப்பான். கொடுக்காவிட்டால் கோபம் வந்துவிடும்.



ஒருநாள் அவன் தாத்தா (டி.வி. வெங்கட்ராமன்) கையில் வைத்துக் கொண்டிருக்கும் 'கார் சாவி' வேண்டுமென்று ஒரே அடம். கொடுக்கவில்லை என்று ஒரே கோபம்.

'காக்கா ஓஷ்' என்றெல்லாம் ஒளித்துப் பார்த்தோம். தாத்தா பின்னாடி போய், கார் சாவியை ஒளித்து வைத்துக் கொண்டிருப்பதைக் கண்டு பிடித்துவிட்டான். பிறகு வீட்டு பீரோ சாவி கொடுத்தால் அதையும் வேண்டாம் என்று தூக்கி எறிந்தான். 'கார் சாவி தான்' வேண்டும் என்று புரண்டு புரண்டு அழுதான்.

நல்லவேளை அவன் அப்பா கார் ஹாரன் வாசலில் கேட்டது. 'டாடி வந்து' என மழலையில் மிழற்றி வாசலில் ஓடினான்.

அவன் அப்பா "டாட்டா, கூட்டிக் கொண்டு போகிறேன்" என்று காரில் ஒரு ரவுண்டு அழைத்துப் போய் அவனை மாற்றினார்.

சிறு குழந்தைகளுக்குக் கோபம் வந்தால் அடித்துத் திட்டக்கூடாது. அதனுடைய கவனத்தை மாற்ற வேண்டும் என்று அன்று நான் புரிந்து கொண்டேன் என்று கூறுகிறார் 'அத்வைத்தின்' தாய் பிரதிபா ராம்குமார்.

என் மகன் கௌதம் கார்த்திக், ஒரு டென்னிஸ் விளையாட்டு வீரன். பதினேழு வயது ஆகும் அவன் தமிழ்நாட்டில் முதல் இடம் வகிக்கிறான்.

மாட்ச் ஆடப் போகும் நாள்களில் அவனுக்கு ஒரு கோபம் வரும் பாருங்கள்! வீட்டில் இருப்பவர்களால் தாங்க முடியாது!

"என் டென்னிஸ் மட்டை எங்கே? என் சாக்ஸை ஏன் தோய்த்து வைக்கவில்லை! கை துடைக்கும் டவல் எங்கே? என்னுடைய டென்னிஸ் பாண்ட் ஏன் அழுக்காயிருக்கிறது!" ஏகத்திற்குக் கூச்சல்!

என் பையனின் 'மாட்ச்' முடிந்த மறுநாள் சாந்தமாக எடுத்துக் கூறுவேன், "உன் வேலையை நீயே செய்யக் கற்றுக்கொள்ள வேண்டும்; உன் சாமானை நீயே முதல் நாள் எடுத்து வைத்துக் கொள்ள வேண்டும்" என்று. அப்பொழுது அவன் நான் சொல்வதை ஏற்றுக் கொள்கிறான். அவன் கோபமாக இருக்கும்போது, நானும் கோபத்தைக் காட்டி, அவனை மனச் சோர்வு அடையச் செய்வதில்லை என்று கூறுகிறார் கலா பால சுப்ரமணியன்.

என் மகள் மதுமிதா தேஜஸ்வி. வயது ஆறு. அவளுக்குத் தம்பி, அனுருத் ராம்நாத் பிறந்த பிறகு அவள் மனநிலையில் ஒரு மாறுதல். அவளுக்கும் இவனுக்கும் இரண்டரை வயதுதான் வித்தி



# "சேவை" செய்யலாம் வாருங்கள்

எல்லோருக்குமே அரிசியில் சேவை செய்யத் தெரிந்திருக்கும். இல்லையென்றாலும் இருக்கவே இருக்கிறது ரெடி சேவை.

அந்த சேவையில் புதுசாக என்னவெல்லாம் செய்யலாம் என்பதற்குச் சில சாம்பிள்கள்.

## சேவை சர்க்கரைப் பொங்கல்

தேவையானப் பொருட்கள் :

சேவை – 200 கிராம்.

பொடிசெய்த வெல்லம் – 300 கிராம்.

பயத்தம் பருப்பு – 50 கிராம்.

ஏலக்காய் – 5 கிராம்.

முந்திரிப்பருப்பு – 25 கிராம்.

நெய் – 2 டேபிள் ஸ்பூன்

பச்சைக் கற்பூரம் – 1 சிட்டிகை.

செய்முறை:

பயத்தம் பருப்பைச் சிவக்க வறுத்து நன்றாக வேக வைக்கவும். பொடி வெல்லத்தை இதனுடன் சேர்த்து நன்றாகக் கொதிக்க வைக்கவும். சேவையைத் தனியாகத் தயாரித்து எடுத்து வைத்துக் கொள்ளவும். எல்லாவற்றையும் ஒன்றாகக் கலந்து நெய்யில் வறுத்த முந்திரிப்பருப்பு, ஏலக்காய், பச்சைக் கற்பூரம் சேர்த்து எடுத்து வைக்கவும்.



## ப்ருட் ஸாலட் சேவை

தேவையானப் பொருட்கள் :

சேவை – 250 கிராம்

சர்க்கரை – 1 கப்

பால் – அரை லிட்டர்

வாழைப்பழம் – 1

ஆப்பிள் – 1

கொய்யா – 1



விதை நீக்கிய திராட்சை – 50 கிராம்

முந்திரி, பிஸ்தா, பாதாம் பருப்பு (சேர்த்து ஒன்றிரண்டாகப் பொடித்தது) – 1 கப்

செர்ரி பழம் – 10.

செய்முறை:

சேவையைத் தயார் செய்து எடுத்து வைக்கவும். பழங்களை எல்லாம் சிறிது பால் சேர்த்து மிக்ஸியில் அரைக்கவும். பாலைக் கொதிக்கவிட்டு இதில் அரைத்த பழக்கலவை, சர்க்கரை, ஏலப் பொடி சேர்த்து 5 நிமிடங்கள் கிளறவும். பிறகு இதில் சேவையைச் சேர்த்து முந்திரி, பிஸ்தா, பாதாம் பருப்பு சேர்க்கவும். பறிமாறும்போது அலங்காரமாக செர்ரி பழம் சேர்க்கவும்.



## சேவை சூப்

தேவையான சாமான்கள்

சேவை – 200 கிராம்

தக்காளி – 50 கிராம்

காரெட் – 50 கிராம்

உருளைக்கிழங்கு – 50 கிராம்

வெங்காயம் – 50 கிராம்.

பூண்டு – 8 பருப்பு

மிளகு – 6

கிராம்பு – 4

லவங்கம் – 1 துண்டு

சோளமாவு – 3 ஸ்பூன்

வெண்ணெய் – 100 கிராம்

செய்முறை :

சேவையை முதலில் தயார் செய்து எடுத்து வைக்கவும். தக்காளி, தோல் சீவி நறுக்கிய காரெட், உருளைக்கிழங்கு, வெங்காயம் இவற்றுடன் எல்லா மசாலாக்களையும் சேர்த்து வேக வைக்கவும். பின் இந்த நீரை வடிகட்டி எடுத்துக் கொள்ளவும். இத்துடன் கொஞ்சம் தண்ணீர் சேர்த்து நன்றாகக் கொதிக்க வைத்துக் கொஞ்சம் சோள மாவு சேர்க்கவும். பிறகு அடுப்பில் இருந்து இறக்கி வேக வைத்துள்ள சேவையை அதில் சேர்த்து வெண்ணெய் சேர்க்கவும். பிறகு தேவையான உப்பு மிளகுப் பொடி சேர்த்து சாப்பிடச் சுவையாக இருக்கும்.

– கீதா சுவாமிநாதன்



• பெண்கள் மணத்தக்காளிக் கீரையை பாசிப்பருப்புடன் சேர்த்து வேக வைத்து வெங்காயம் பச்சை மிளகாய் தாளித்துக் கூட்டு செய்து வாரத்துக்கு மூன்று அல்லது நான்கு முறை சாப்பிட்டு வந்தால் மார்பகங்கள் நன்றாக வளர்ந்து எழிலுடனும் கவர்ச்சியுடனும் காட்சி தரும்.

• கடலைமாவு, புளித்த மோர் இவை இரண்டையும் கலந்து ஒரு நாள் இரவு பூராவும் ஊற வைத்து மறுநாள் தலையில் தேய்த்து அரைமணி நேரம் ஊறினால் பொடுகு குறையும்.

– என். கமலா

யாசம். இப்பொழுது அவனுக்கு வயது மூன்றரை ஆகிறது.

அவன் குழந்தை என்பதால் வீட்டில் அவனுக்குச் சலுகை அதிகம். கோபம் வந்தால் அவளுக்குத் தம்பிதான் வடிகால். வீட்டில் யாராவது "உட்கார்ந்து, படி, ஏன் ஹோம் வொர்க் செய்யவில்லை" என்று கடிந்து கொண்டால், "தம்பியைப் படிக்கச் சொல், அவன் மாத்திரம் படிக்க வேண்டாமா, நான் மாத்திரம்தான் படிக்கணுமா?" என்று 'ஓ'வென்று அழுகிறாள். அவள் கோபத்தை எப்படிச் சமாளிப்பது என்று தெரியவில்லை.

வீட்டில் பெரியவர்கள், 'அது போகப் போகச் சரியாகிவிடும்' என்று கூறுகிறார்கள். இப்பொழுதெல்லாம் வீட்டில் இவளுக்கும் முக்கியத்துவம் கொடுத்து நடந்து கொள்வதால், கோபத்தில் தம்பியை அடிப்பதில்லை என்று கூறுகிறார் மதுமிதாவின் தாய், கலா கணபதி.

— கலா பாலசுப்பிரமணியன்

மருத்துவம்

# ஊமைக் குழந்தைகளைப் பேசவைக்க முடியுமா?

காது - மூக்கு - தொண்டை நோய் சிகிச்சையில் இன்று இந்திய அளவில் மட்டுமின்றி, சர்வதேச அளவில் புகழ்பெற்றவர் டாக்டர் கே.கே. ராமலிங்கம் அவர்கள். மேலை நாட்டு சொகுசுக்கும், சுகத்திற்கும் ஆசைப்பட்டு பல நல்ல டாக்டர்கள் வெளிநாட்டிற்குச் சென்றுவிடும் (இந்திய அரசுதான் இதற்குக் காரணமோ) இந்த நாளில், இவர் அமெரிக்கப் பணியைத் துறந்து, சொந்த மண்ணிற்கும் - மக்களுக்கும் சேவை செய்ய சென்னைக்குக் குடியேறிய சிறப்பைப் பாராட்ட வார்த்தைகள் இல்லை! காது - மூக்கு - தொண்டை நோய் தொடர்பான பல சந்தேகங்களுக்கு அவர் அளித்த பதிலை இங்கே படைப்பதில் மகிழ்ச்சி அடைகிறோம்.

*காது கேட்காமல் போவதற்குக் காரணம் என்ன டாக்டர்?*

சாதாரணமாகக் காதில் ஏற்படுகின்ற சீழ் காரணமாகச் செவிப்பறை (ஜவ்வு) சேதமடைந்து காது கேளாமல் போகலாம். அது மட்டுமின்றி காதின் நடுப்பகுதியில் அரிசி அளவிலான சிறிய எலும்பு ஒன்று வளர்ந்து - வெளியிலிருந்து சப்தம் உட்செல்ல முடியாமல் தடுக்கும். இதனாலும் செவிட்டுத் தன்மை ஏற்படுகின்றது. காதில் அழுக்கு சேர்ந்து அடைபட்டாலும் கேட்கும் சக்தி குறையும்.

*இவ்வாறெல்லாம் ஏற்படும் குறையைச் சிகிச்சை செய்து குணமாக்கி விட முடியுமா?*

நிச்சயமாக முடியும். எதையும் ஆரம்ப நிலையிலேயே கவனித்து விட்டால் ஆபத்தில்லை. காதில் ஏதாவது பிரச்னை என்றால் உடனடியாக அருகிலுள்ள (ஈ.என்.டி.) காது, மூக்கு, தொண்டை நிபுணரைச் சந்தித்துவிட வேண்டும்.

*காதினுள் எலும்பு வளர்ந்து செவிட்டுத் தன்மையை ஏற்படுத்துவதாகச் சொல்கிறீர்கள். அதைச் சரிப்படுத்தி மீண்டும் கேட்கும் சக்தியை ஏற்படுத்த முடியுமா?*

கண்டிப்பாக மீண்டும் 'கேட்கும் சக்தி'யைப் பெற முடியும். இதற்கென இப்பொழுது நவீன அறுவை சிகிச்சை முறை உள்ளது. இந்த மிக நுண்ணிய அறுவைச் சிகிச்சையின் மூலம் காதினுள் வளர்ந்துள்ள அந்த எலும்பை அகற்றிவிட்டு, அந்த இடத்தில் 'டெப்லான் பிஸ்டன்' என்னும் நுண்ணியக் கருவியைப் பொருத்தி விடுவோம். இத்தகைய சிகிச்சைக்கென பல லட்ச ரூபாய் மதிப்புள்ள நவீன சாதனங்களைப் பயன்படுத்துகின்றோம். ஒன்றரை சென்டி மீட்டர் அகலம் உள்ள காது துளையினுள் கருவியைச் செலுத்திச் செய்யப்படும் இந்தச் சிகிச்சையைப் வீடியோவில் அப்போது பார்க்கலாம்.

*இந்த அறுவை சிகிச்சை முடிந்து எத்தனை நாள் கழித்து மீண்டும் காது கேட்கும்?*

எத்தனை நாளா? அதற்கெல்லாம் இடமில்லை! அறுவை சிகிச்சை முடிந்த உடனேயே கேட்கும் சக்தி கிடைக்கும்.

*ஊமைகளையோ - ஊமைக் குழந்தைகளையோ பேச வைத்து விட முடியுமா?*

- யாது! ஊமைகளாகவும் யாரும் பிறப்பதில்லை! வாய் பேசாதவர்கள் - 'கேட்கும் சக்தியை' இழந்திருப்பதால்தான் பேச முடிவதில்லையே தவிர, வாயில் ஏற்படும் எந்தக் கோளாறினாலும் அல்ல. 'பேச்சு' என்னும் ஒலியை பற்றி அவர்களால் எதுவுமே அறிய முடியாத நிலையில்தான் பேச முடிவதில்லை. முறைப்படி இதை ஆராய்ந்து தக்க சிகிச்சையினை மேற்கொண்டால் பேச வைத்துவிடலாம்.

*சில ஆண்கள் - பெண்களைப் போலக் 'கீச்சு'க் குரலிலும், பெண்கள் - ஆண்களைப் போலக் 'கட்டை'க் குரலிலும் பேசுகின்றனர். இதை உங்களால் மாற்ற முடியுமா?*

முடியும்! இப்படி இயற்கையிலேயே குரல் மாறுபாடு உள்ளவர்களுக்குத் தொண்டையில் சிறிய அறுவை சிகிச்சை ஒன்றைச் செய்து - அவர்களே அசந்து போகுமளவு அற்புதமாகவும், அழகாகவும் குரலை மாற்றிவிடலாம். குரல் சம்பந்தமான கோளாறுகளை நீக்குவது மிகச் சுலபமானது.

*அதே போன்று குறட்டை விடும் பழக்கத்திற்குச் சிகிச்சை அளிக்க முடியுமா?*

ஒரு சிறிய சிகிச்சையின் மூலம் 'குறட்டை'யைப் போக்கிவிடலாம்.

*காதில் அழுக்கு எடுப்பதாகக் கூறிக்கொண்டு நிறைய பேர் சுற்றுகின்றனர். அவ்வாறானவர்களிடம் பலரும் (குறிப்பாக கிராமப் பகுதிகளில்) காது குடைந்து கொள்கின்றனர். இது சரியானதா?*



முழுக்க முழுக்கத் தவறானதாகும். இதனால் செவிப்பறைக்குச் சேதம் ஏற்பட்டு, செவிடாகும் அபாயம் உள்ளது. காதில் அரிப்போ, கசடோ இருப்பதாக உணர்ந்தால் ஈ.என்.டி. டாக்டரிடம் காண்பித்துச் சிகிச்சை பெறுதலே முறையானது.

*தூங்கும்போது காதினுள் எறும்போ, பூச்சியோ நுழைந்து விட்டால் சிறிது தண்ணீரில் உப்பைக் கரைத்து காதில் சில சொட்டுகள் ஊற்றுவது பழக்கமாக உள்ளது. இது சரியானதுதானா?*

அப்படிச் செய்வது சரியானதுதான். உப்பு நீரினால் எறும்போ, பூச்சியோ சில நொடிகளில் செத்து, நீருடன் வெளியே வந்து விடும்.

சந்திப்பு :
எம்.ஏ.வி. ராஜேந்திரன்

பாவை பக்கங்கள்

# இளைய அமுதம்

தயாரிப்பு: குண்டுமணி

## மூன்று அதிசயப் பொருள்கள்!

பெரும் பணக்காரர் வீர பாண்டியனுக்கு ஒரு பெரிய பழத் தோட்டம் இருந்தது. அந்தப் பழத் தோட்டத்தில் ஓர் ஆப்பிள் மரம் மட்டும் தங்க ஆப்பிள்களைக் காய்த்துத் தந்தது. வீரபாண்டியன் தன் மூன்று புதல்வர்களை அனுப்பி அந்தத் தோட்டத்தைக் காவல் காக்க வைத்தான்.

மூன்று புதல்வர்கள் காவல் காத்தும் யாரோ ஒருவன் தங்க ஆப்பிளைப் பறித்துச் செல்வதாகப் பணக்காரர் வீரபாண்டியனுக்கு ஐயம் எழுந்தது! இதனால் அவர் உணவு உட்கொள்ளாமல் கவலையுடன் இருந்தார்.

"அப்பா! இனி நாங்கள் மூவரும் தினம் ஒருவர் கண் விழித்திருந்து ஜாக்கிரதையாகப் பழத் தோட்டத்தைக் காக்கிறோம். கவலைப்படாதீர்கள்!" என்று மூன்று புதல்வர்களும் வாக்குக் கொடுத்தனர்.

முதல் நாள் மூத்த புதல்வன் பழத் தோட்டத்தைக் கண்ணுங் கருத்துமாகக் காவல் காத்து விட்டு வந்தான்!

"எனக்கு நல்ல சேதி கொண்டு வந்தாயா? தங்க ஆப்பிளை யார் பறிக்கிறார் என்ற உண்மை தெரிந்ததா?" என்று கேட்டார் தந்தை வீரபாண்டியன்.

"அப்பா! நான் இரவு முழுதும் கண் விழித்துப் பார்த்தேன்! எந்தத் திருடனும் ஆப்பிள் மரத்தைத் தீண்டவில்லை!" என்றான் மூத்த புதல்வன்.

இரண்டாவது புதல்வனும் காவல் காத்துவிட்டு வந்து அதே பதிலைச் சொன்னான். கடைசிப் புதல்வன் தீரன் அன்று தோட்டக் காவலுக்குச் சென்றான்.

தீரனுக்குத் தூக்கம் வரும் போது தன் முகத்தில் நீரைத் தெளித்துக் கொண்டு விழிப்புடன் இருந்தான். நடு இரவில் ஒரு வெளிச்சம் தோட்டத்தில் படுவதை உணர்ந்தான் தீரன். பிறகு ஒரு கிளி ஆப்பிள் மரத்தில் பழத்தைக் கொத்துவதைக் கண்டான் தீரன். உடனே தீரன் பாய்ந்து சென்று அந்தக் கிளியைப் பற்றிக் கொண்டான்.

### பேராசிரியர் கல்கியின் யோசனை!

இளைஞர் ஒவ்வொருவரும் ஒவ்வொரு வஸ்தாத் ஆகப் பயில வேண்டும். மூளையை வறட்டிக் கொண்டு படித்துப் பரீட்சையில் முதன்மையாகத் தேறுவதினால்



மட்டும் என்ன பயன்? பெண்டாட்டி பிள்ளைகளைக் கயவரிடமிருந்து காப்பாற்றிக் கொள்ள முடியாதவர்கள் எத்தனை படித்து எத்தனை கெட்டிக்காரர்களாயிருந்து தான் என்ன பிரயோசனம்?

ஆனால் அந்தக் கிளி தீரனின் கையில் ஓர் இறகைப் பறி கொடுத்துவிட்டுத் தப்பிச் சென்று விட்டது!

மறுநாள் காலையில் தந்தை வீரபாண்டியன் வழக்கம் போல், "திருடனைப் பிடித்தாயா!" என்று கேட்டார்.

"அப்பா! திருடனைப் பிடிக்கவில்லை. ஆனால் திருடன் யார் என்று கண்டுபிடித்து விட்டேன்! அது ஒரு கிளிதான்!" என்றான் தீரன்.

தன் மகன் தீரன் ஒருவாறு திருடன் யார் என்று கண்டு பிடித்த பிறகு வீரபாண்டியன் உணவு உட்கொள்ளத் தொடங்கினார்! தன் மூன்று புதல்வர்களையும் அழைத்து, "நீங்கள் மூவரும் போய்த் தங்க ஆப்பிள்களைத் திருடும் கிளியைப் பிடித்துக் கொண்டு வர வேண்டும்!" என்று கட்டளையிட்டார்.

மூவரும் தனித் தனியாகத் தங்கள் வழியே அந்தத் திருட்டுக் கிளியைப் பிடிக்கச் சென்றனர்!

கடைசிப் புதல்வன் தீரன் காட்டுக்கு வந்தான்! அங்கே ஒரு வன தேவதை பசியால் துடித்துக் கொண்டிருந்தது! அதைக் கண்டதும் மனமிரங்கி, தன்னிடமிருந்த உணவுப் பொருளை அதற்குக் கொடுத்தான்! வன தேவதை பசி அடங்கியதும், "உன் நல்ல மனதைப் போற்றுகிறேன். நான் இந்தக் காட்டின் வனதேவதை. உனக்கு என்ன வேண்டுமானாலும் கேள், தருகிறேன்!" என்றது.

"வன தேவதையே! எங்கள் தங்க ஆப்பிள் தோட்டத்தில் ஒரு கிளி பல தங்க ஆப்பிள்களைத் திருடிச் சென்று விட்டது! அதனைப் பிடித்து

வரக் கிளம்பியிருக்கிறேன்!" என்றான் தீரன்.

"அப்படியா? நான் உனக்குப் பறக்கும் குதிரையாக மாறி உனது முயற்சிக்கு உதவுகிறேன்!" என்றது வன தேவதை.

பறக்கும் குதிரையில் ஏறிக் கொண்டான் தீரன். வாயுவேக மனோவேகமாகச் சென்றது பறக்கும் குதிரை.

ஒரு பெரிய தீவுக்குச் சென்றதும் பறக்கும் குதிரையாக இருந்த வன தேவதை, "தீரனே! கவனமாகக் கேள். அந்த அல்லி நாட்டு அரண்மனைச் சுவரின் மேல் ஏறிக் கொள். எல்லா காவலர்களும் நன்கு தூங்கிக் கொண்டிருப்பார்கள்! ஒரு மணிக்கூண்டில் தங்கக் கூண்டு இருக்கும். அதில்தான் உங்கள் தோட்டத்து ஆப்பிள்களைத் திருடிய கிளி இருக்கிறது. இந்தத் தங்கக் கூண்டைத் தொடாமல் கிளியை மட்டும் பிடித்துக் கொண்டு வந்துவிடு!" என்று யோசனை கூறியது வன தேவதை.

சுவர் மீது ஏறி தீரன் அல்லி அரண்மனையில் குதித்து, தூங்கிக் கொண்டிருந்த காவலர்களைக் கடந்து மணிக்கூண்டில் போய்த் தங்கக் கூண்டைப் பார்த்தான்! அதில் அந்தக் கிளி இருந்தது! தங்கக் கூண்டின் பளபளப்பு தீரனின் மனத்தை மயக்கியது!

"ஆஹா! இந்தத் தங்கக் கூண்டை விட்டுவிட்டு எப்படிச் செல்வது?" என்று மனத்துக்குள் எண்ணிக் கொண்டான் தீரன்.

வன தேவதை கூறிய எச்சரிக்கைகளை மறந்து விட்டான் தீரன். தங்கக்கூண்டைத் தீரன் தொட்ட கணம் மிகப் பெரிய ஓலம், தம்பட்ட ஓசை, மணிகளின் ஒலி காவலர்களை எழுப்பிவிட்டன.

தீரனைப் பிடித்துக் கொண்ட காவலர்கள் அவனைத் தங்கள் அல்லி நாட்டு அரசியின் முன் கொண்டு நிறுத்தினர்.




ஒன்றிலிருந்து ஒன்பது வரையில் எண்ணிக்கைகள் மறைந்துள்ளன! கண்டு பிடியுங்கள்!

அல்லி நாட்டு இளவரசி கேட்டாள் : "நீ எதற்காகக் கிளியைத் திருடினாய்?"

"இளவரசியே! இந்தக் கிளிதான் எங்கள் தந்தை வீர பாண்டியன் தோட்டத்தில் தங்க ஆப்பிள்களைத் திருடியது. ஆகவே அதைப் பிடித்துப் போக வந்தேன்!" என்றான் தீரன்.

"நீ செய்த திருட்டுக்குப் பரிகாரம் தேட வேண்டுமானால் அடுத்த நாட்டில் ஒரு தங்கக் குதிரை இருக்கிறது. அதைக் கொண்டு வந்து கொடுத்தால் இந்தக் கிளியையும் தங்கக் கூண்டையும் தந்து விடுகிறேன்!" என்றாள் அல்லி நாட்டு இளவரசி.

தீரன் தான் கொண்டு வந்து தருவதாக அல்லி நாட்டு இளவரசியிடம் வாக்குறுதி பெற்று நழுவினான்.

இந்தப் படத்தில் எட்டு குதிரைகள். இரண்டே இரண்டு குதிரைகள் மட்டுமே ஒரே விதமான புள்ளிகளுடன் காணப்படுகின்றன. அதைக் கண்டு கொள்ளுங்கள்.



## அதிசயப் போட்டி

ஸ்பானிய நகரமான லோகோலேனோவில் ஒரு மீட்டர் 20 சென்டிமீட்டர் தூரத்துக்கு ஐந்து நிமிட நேரத்துக்கு ஓர் ஓட்டப் பந்தயம் நடைபெற்றது. என்ன



இவ்வளவு குறைந்த தூரப் பந்தயம் என்று வியக்கிறீர்களா? போட்டி நத்தைகளுக்குத்தானே!

அரண்மனைக்கு வெளியே இருந்த வன தேவதை, "என் எச்சரிக்கையை மறந்து தங்கக் கூண்டைத் தொட்டாய். அதனால் உனக்குப் புதிய முயற்சியில் ஈடுபடும்படி ஆயிற்று!" என்றது தீரனிடம்.

"என்னை மன்னித்து விடு, தேவதையே!" என்று கெஞ்சினான் தீரன்.

"சரி! என் முதுகில் ஏறிக் கொள்!" என்று பறக்கும் குதிரை வடிவமெடுத்து அழைத்துச் சென்றது வன தேவதை.

தங்கக் குதிரையுள்ள அரண்மனைக்கு வன தேவதை கொண்டு சேர்த்தது!

"இதோ அரண்மனையில் அந்தத் தங்கக் குதிரை இருக்கிறது. என்ன காரணத்தினாலும் அதன் மீது பூட்டியுள்ள தோல்பிடிகளைத் தொட்டு விடாதே!" என்றது வன தேவதை.

தீரன் வன தேவதையின் எச்சரிக்கையைக் கேட்டுக் கொண்டு, தங்கக் குதிரை இருந்த இடத்துக்குச் சென்றான். ஆனால் அந்த இடத்துக்குப் போனதும் வன தேவதையின் வார்த்தைகளை மறந்து விட்டான்!

தீரன் அவனையுமறியாமல் அந்தத் தோல்பிடிகளைக் குதிரையில் தொட்டபோது, அந்த அரண்மனை முழுதும் பயங்கரச் சத்தம் எழுந்தது! காவலர்கள் தீரனைப் பிடித்து விட்டார்கள்.

அந்த நாட்டு அரசனின் முன்னால் தீரனைக் கொண்டு நிறுத்தினார்கள்.

"நீ எதற்காகத் தங்கக் குதிரையைத் திருட நினைத்தாய்?" என்று அரசன் கேட்டான்.

கிளித் திருடனைப் பிடிக்கப் போன இடத்தில் மாட்டிக் கொண்டதும், அந்த இளவரசி தன்னைத் தங்கக் குதிரை கொண்டு வரும்படி பணித்ததைச் சொன்னான் தீரன்.

"சரி! நீ என்னிடமிருந்து விடுதலை பெற வேண்டுமானால் அடுத்த காஷ்மீர் நாட்டில் ஓர் அழகிய இளவரசி இருக்கிறாள். அவளை என்னிடம் சேர்ப்பித்தால் உனக்குத் தங்கக் குதிரை தருகிறேன்!" என்றான் மன்னன்.

மறுபடியும் வெளியே வந்து வன தேவதையிடம் வசவு வாங்கிக் கட்டிக் கொண்டான். வன தேவதையும் அவனுக்குக் கடைசித் தடவை உதவ முன்வந்தது! ஆனால் இந்தத் தடவை வன தேவதையே தீரனுக்குப் பதிலாகச் சென்று அந்த அழகிய ராஜகுமாரியைக் கைப்பற்றிக் கொண்டு வந்தது.

அழகிய ராஜகுமாரியுடன் தீரன் வன தேவதையிடம் வந்த போது, "இவ்வளவு அழகிய ராஜகுமாரியை நாம் அந்த அரசனுக்குக் கொடுக்க வேண்டுமா?" என்று கேட்டான்.

"கவலைப்படாதே! நீயும் ராஜகுமாரியும் அரண்மனைக்கு வெளியே காத்திருங்கள்! நான் ராஜகுமாரி வேஷத்தில் போய் அங்கு சிங்க உருவமாக மாற



தன் குடிசைக்குப் போக வழி தெரியாமல் தவித்துக் கொண்டிருக்கிறது முயல். அதற்கு வழி காட்டுங்கள்!



அரசனை மிரட்டி, தங்கக் குதிரையைப் பெற்று வந்து விடுகிறேன்!" என்றது வன தேவதை.

அரசனை மிரட்டி, வன தேவதை சிங்க உருவமெடுக்கவே, தங்கக் குதிரையை மன்னன் பேசாமல் கொடுத்து விட்டான்.

அழகிய இளவரசி, தங்கக் குதிரை கிடைத்ததில் தீரனுக்கு மகிழ்ச்சி! ஆனால் அல்லி நாட்டு இளவரசிக்குத் தங்கக் குதிரை கொடுத்தால்தானே, அந்தத் திருட்டுக் கிளியைப் பெற முடியும்?

வன தேவதை தீரனின் உதவிக்கு மறுபடியும் இசைந்தது! வன தேவதை தங்கக் குதிரை வேஷத்தில் போய் அல்லி நாட்டு இளவரசியிடமிருந்து அந்தக் கிளியை அபகரித்துக் கொண்டு வந்து விட்டது.

அழகிய இளவரசி, தங்கக் குதிரை, திருட்டுக் கிளி எல்லாம் கிடைத்த மகிழ்ச்சியில் தன் ஊருக்குத் திரும்பினான்! ஆனால் வனதேவதைக்குத் தீரன் நன்றி சொல்வதை மறந்து விடவே, வனதேவதை தீரனுக்கு ஒரு பாடம் கற்பிக்க விரும்பியது.

ஒரு சத்திரத்தில் தீரன் தன் விலை மதிப்பற்ற பொருள்களுடன் தூங்கும்போது அவனது இரண்டு சகோதரர்களும் திருட்டுக் கிளி கிடைக்காத துக்கத்தில் அந்தச் சத்திரத்துக்கு வந்து தங்கினர். தன் கடைசிச் சகோதரன் மூன்று அதிசயப் பொருள்களை வைத்திருப்பதைப் பார்த்ததும் அவன் தூங்கும்போது பறித்துச் சென்று தன் பணக்காரத் தந்தையிடம் பெருமைப்பட்டுக் கொண்டனர்! தீரன் தூங்கி விழித்ததும் தன் மூன்று அதிசயப் பொருள்களும் போய் விட்டதைக் கண்டு ஆறாத் துயர் அடைந்தான்! தான் தனக்குப் பேருதவி செய்த வன தேவதையை நன்றி சொல்லி வாழ்த்த மறந்ததால்தான் தனக்கு இந்த இழப்பு ஏற்பட்டது என்றுஉணர்ந்தான்!

காட்டுக்குச் சென்று வன தேவதையிடம் மன்னிப்புக் கோரினான். "உங்கள் உதவி இல்லாவிட்டால் இத்தனை சாதனைகளைப் புரிந்திருக்க முடியாது! உங்கள் உதவிகளைப் பாராட்டாததால்தான் இத்தனை இழப்பும் எனக்கு நேர்ந்தது!" என்று அழத் தொடங்கினான்.

வன தேவதை அவனைத் தேற்றிப் பறக்கும் குதிரையாக மாறி, அவனைத் தன் ஊருக்கு அழைத்துச் சென்றது. வீர பாண்டியன் மாளிகையில் மூத்த சகோதரர்களுக்கு மூன்று அதிசயப் பொருள்களைக் கொண்டு சேர்த்ததற்காக விருந்தும் உபசாரமும் அமர்க்களப்பட்டன!

வன தேவதை தீரனை அவனது தகப்பனாரிடம் அழைத்துச் சென்று, "உன் இரு மூத்த புதல்வர்களும் இவனிடமிருந்து பறித்துக் கொண்டவை இந்த அதிசயப் பொருள்கள். இவையே சாட்சி சொல்லும்!" என்றது.

திருட்டுக் கிளி, "என்னை வன தேவதையின் உதவியினால் பிடித்தது தீரன்தான்!" என்றது.

"நானும் தீரனுக்கு உரியவன். வன தேவதையின் பெருமுயற்சியால் கிடைக்கப்பட்டவன்!" என்றது தங்கக் குதிரை.

"எனக்கு உரியவன் தீரனே! அவனையே நான் மணம் முடிப்பேன்!" என்றாள் அழகிய ராஜகுமாரி.

வன தேவதையின் முன்னால் தீரனுக்கும் அழகிய ராஜகுமாரிக்கும் சிறப்பாகத் திருமணம் நடத்தி வைக்கப்பட்டது! திருட்டுக் கிளி தான் தங்க ஆப்பிள்களைத் திருடுவதற்குப் பதில் காத்துத் தருவதாக வாக்களித்தது. தங்கக் குதிரை தீரனையும் ராஜகுமாரியையும் அழைத்துக்கொண்டு உலகம் முழுதும் சுற்றிக் காண்பித்தது!

தீரனும் ராஜகுமாரியும் வன தேவதையின் காலில் விழுந்து ஆசிபெற்றதும், "என் பணி முடிந்து விட்டது! நீங்கள் க்ஷேமமாக வாழுங்கள்!" என்று கூறி விட்டுக்காட்டுக்குள் மறைந்தது.

பணக்காரர் வீரபாண்டியன் அத்தனை பொறுப்புகளையும் தன் கடைசிப் புதல்வன் தீரனிடம் ஒப்படைத்தார்.

தங்களுக்குத் தந்தை உதவாததால் கோபமுற்ற இரு சகோதரர்களும் வீட்டை விட்டு ஓடிவிட்டனர்.

# கங்காபுரிக் காவலன்

## 9. பஞ்சவன்மாதேவி யாத்திரை

வீரமாதேவி, நீராடி, திருநீறணிந்து புத்தாடை உடுத்தி சிற்பி மாணிக்க சேகரனைக் காண மருத்துவ மனைக்கு வந்தாள். மாணிக்க சேகரன் படுத்திருக்கும் குடிலின் கதவருகே வந்தபோது திகைத்து நின்றாள்.

உள்ளே இருந்து இனிய குரல் கேட்டது.

மந்திர மாவது நீறு வானவர் மேலது நீறு
சுந்தரம் ஆவது நீறு துதிக்கப் படுவது நீறு
தந்திரம் ஆவது நீறு சமயத்தில் உள்ளது நீறு
செந்துயர் வாய் உமை பங்கன் திருஆலவாயன்
திருநீறே

முத்தி தருவது நீறு முனிவர் அணிவது நீறு
சத்தியம் ஆவது நீறு தக்கோர் புகழ்வது நீறு
பக்தி தருவது நீறு பரவ இனியது நீறு
சித்தி தருவது நீறு திருஆல வாயன் திருநீறே

என்ற, திருஞானசம்பந்தப் பெருமானின் தேவாரப் பாடலை மாணிக்க சேகரன் மெல்லிய குரலில் பாடிக் கொண்டிருந்தான். மாணிக்க சேகரனின் இனிய தோற்றத்திற்கு ஏற்பக் குரலும் மிக இனிமையாக இருப்பது கேட்டு அவள் வியந்தாள்.

சித்தர் கொடுத்த மருந்து கைமேல் பலனைத் தந்து விட்டது. அதற்கு மேலாக சித்தரின் வாக்கான, 'இன்னும் இரு நாள்களில் சிற்பி குதித்து எழுந்து விடுவார் பெண்ணே!' என்பது பலித்து விட்டது.

வியப்பு மேலிட வீரமாதேவி, சிறிது நின்று பார்த்தாள். மாணிக்க சேகரன் இது வரையில் படுத்திருந்த மஞ்சத்தில் உட்கார்ந்து கொண்டு, விழிகளை மூடியவாறு பாடிக் கொண்டிருந்தான்.

நெற்றியில் திருநீறு. கடும் காய்ச்சலால் பல நாள்களாக வளர்ந்து விட்ட மீசையும் தாடியும் முனிவர் போன்ற தோற்றத்தைத் தந்தன. அவன் அருகே யாருமில்லை.

வீரமாதேவி மெல்ல அவன் அருகே வந்தாள். அவள் வந்ததையும் கவனிக்காமல், சிவபெருமானின் புகழ் பாடும் பதிகத்தை மெல்லப் பாடிக் கொண்டிருந்தான். மெலிந்திருந்த உடலுக்குள்ளிருந்து கம்பீரமாக, இனிமையாகக் குரல் ஒலித்துக் கொண்டிருந்தது.

"சிற்பியாரே!" என்று மெல்லக் குரல் கொடுத்தாள், அவன் கவனம் சிதறவில்லை. பாடிக் கொண்டே இருந்தான்.

வீரமாதேவி மெல்லத் தொண்டையைக் கனைத்தாள். ஹூஹூம், சிற்பி திரும்பிப் பார்க்கவில்லை.

வீரமாதேவி, அந்தப் பாடலுக்கு ஏற்பக் கர தாளம் இடலானாள்.

தாளமும், பாடலும் இணைந்தன.

வீரமாதேவி சட்டெனத் தாளத்தை நிறுத்தினாள். மாணிக்க சேகரன், இமைகளைத் திறந்து பார்த்தான்.

"யார்... இளவரசியா?

வீரமாதேவியா...

வாருங்கள், வாருங்கள்.

வந்து நேரமாகிறதா?

நின்று கொண்டிருக்கிறீர்களே!"

என்று கூறி பரபரப்புடன் இருக்கையில் இருந்து எழ முயன்றான்.

எழ வேண்டாம் என்று வற்புறுத்திய வீரமாதேவி, சிற்பியின் உடல் நிலையில் முன்னேற்றம் ஏற்பட்டதற்குப் பாராட்டி, அதற்குக் காரணமான சித்தரைப் புகழ்ந்து, விழிகளை மூடியவாறு சித்தருக்கு நன்றி கூறினாள்.

மாணிக்க சேகரன், வீரமா தேவியின் கருணையைப் பாராட்டி, "சித்தர் என்னைக் காப்பாற்றியதற்குத் தங்கள் பிரார்த்தனையும், நல்ல உள்ளமும் காரணம்" என்றான்.

விக்கிரமன்

"நாம் இன்றே இங்கிருந்து புறப்படுகிறோம்" என்று உற்சாகமாகக் கூறினான் மாணிக்க சேகரன்.

'இன்னும் சிறிது நாள்கள் ஓய்வு எடுத்து வரலாம்' என்று, வீரமாதேவி உபசாரத்துக் காவது சொல்லவில்லை. நாளையே சிற்பப் பணிகளைத் தொடங்க வேண்டும் என்ற ஆவல் அவள் உள்ளத்தில் நிறைந்திருந்தது.

சித்தர் கூறியவற்றை, மாணிக்க சேகரனிடம் தெரிவித்த வீரமாதேவி, "இப்பொழுது எனக்கு முழு நம்பிக்கை ஏற்பட்டு விட்டது. எந்தச் சக்தியும் இனி நம் பணியைத் தடுக்க முடியாது" என்று உற்சாகமாகப் பேசினாள்.

அரசி பஞ்சவன் மாதேவி, பரிவாரங்களுடனும், பாதுகாவலுடனும் வடக்கு நோக்கிப் புறப்பட்ட செய்தியைப் பற்றி அவள் அறிய ஆவல் கொள்ளவில்லை.

வீரமாதேவியின் பணிகளை இனித் தடுக்க முடியாது என்றுணர்ந்த அரசு அதிகாரிகள் வீரமா தேவியைப் புகழத் தொடங்கினர்.

"நல்ல வேளையாக, அரசர் அழைப்பு வந்ததனால் தங்களுக்கு நேரவிருந்த இடையூறுகள் நீங்கின" என்று ஆதரவுக் குரல் கொடுத்தனர்.

எந்தெந்த விதங்களில், அரசியும் அவள் கட்டளையை ஏற்றவர்களும் தன் சிற்பப் பணிக்கு இடையூறு செய்ய முற்பட்டனர் என்ற விபரம் அறிந்த வீரமாதேவி, இறைவன் கருணையை எண்ணி மகிழ்ந்தாள். இறைவனுக்கு நன்றி தெரிவித்தாள். சிறு வயது முதல், தில்லையம்பதி நடராசரை அவள் கண்கண்ட தெய்வமாகக் கருதி வழிபட்டு வந்தாள். பிறகு அவள் நெஞ்சில் நிறைந்த இராசேந்திரனும் நடராசப் பெருமானைக் குலதெய்வமாகக் கொண்டிருக்கிறார் என்பதை அறிந்தவுடன் தில்லையம்பதியானைக் கணம் கூட மறவாத சிந்தை உடையவளானாள்.

இறைவனுக்குத் தன் நன்றியை எவ்வாறு தெரிவிப்பது என்று சிந்தித்தாள். இப்பொழுது எடுத்திருக்கும் கோயில் திருப்பணியை மிக விரைவில் முடித்து, நடராசரின் திருத்தாண்டவங்களைக் கோயில் திருச்சுற்றில் சிற்பமாக வடிவமைக்க உறுதி கொண்டாள்.

"சிற்பியாரே! சிவபெருமான் கருணைக்கு நாம் நன்றி தெரிவிக்க வேண்டும். இறைவனுக்கு நம் காணிக்கையைத் தக்க முறையில் அளிக்க வாய்ப்பளித்திருக்கும், சக்கரவர்த்தி இராசேந்திர சோழ தேவருக்கு நாம் முதலில் நன்றி தெரிவிக்க வேண்டும்" என்றாள் வீரமாதேவி உணர்ச்சிப் பெருக்குடன்.

"நானும் அப்படித்தான் நினைக்கிறேன். உலகிலேயே அழியாத சின்னம் கல்வெட்டு, பட்டயம், சிற்பம், திருக்கோயில். கல்வெட்டும் பட்டயமும் அளிக்க நமக்கு உரிமையில்லை. ஆனால் சிற்பம் சமைப்போம். சக்கரவர்த்தியின் திரு உருவத்தைப் படைப்போம். உங்களுக்கு நினைவிருக்கும் என நினைக்கிறேன். சில திங்களுக்கு முன்பு கட்டப்படும் பதிய கோயிலில் சக்கரவர்த்திக்கு உரிய இடத்தை, அளிக்க முடிவு செய்தோமே – நினைவிருக்கிறதா?" என்று மாணிக்க சேகரன் கேட்டான்.

வீரமாதேவி சிறிது நேரம் மௌனமாக இருந்தாள். பிறகு, "ஆம்; நினைவுக்கு வருகிறது. சிவபெருமான் நம் சக்கரவர்த்திக்கு அருள்வதுபோல் சிவபெருமான் சிற்பம் ஒன்று – வரிவடிவமாகத் தாங்கள் செங்கோட்டில் வரைந்த கோட்டோவியம் – குடிலில் ஓரிடத்தில் இருக்க வேண்டும். அதைத் தேடி எடுத்து அதைப் போன்ற சிற்பம் ஆக்குவோம். விரைந்து செயல்படுவோம். கருவூர் தேவர் அருள் நமக்குப் பூரணமாக உண்டு. சித்தர் திருமுன்பு குடமுழுக்கு நடைபெறச் செய்ய வேண்டும். இரவு பகல் பாராமல் பணியாற்றுவோம்" என்று உணர்ச்சிப் பெருக்கால் கூறும் போது, குரலில் கம்பீரம் மிளிர்ந்தது.

பஞ்சவன் மாதேவி, தன் பணியாள்களும் பாங்கியரும் அதிகாரி காவல் வீரர்களும் புடைசூழ இராசேந்திரன் தங்கியிருந்த கிருஷ்ணை நதிக்கரையை நோக்கிப் புறப்பட்டாள்.

அரிந்தவன் மாதேவி உடல்நலங்குன்றி எழமுடியாமல் படுத்திருந்தாள். அதனால் பழையாறையில் அவள் தங்கி விட்டாள். புறப்படும் முன்பு அவள் சொன்

னாள்: "தேவி என்னைத் தனியே விட்டுத் தாங்கள் செல்கிறீர்கள். அங்கு சென்றுதான் ஆக வேண்டுமா! அப்படியென்றால் வீரமா தேவியின் பணிகளைத் தடுக்க முடியாது போய்விடுமே. அவள் வெற்றி பெற்று விடு வாளே" என்று குரல் தழுதழுக்கக் கூறி னாள்.

அவளை அன்புடன் அணைத்து, அரசி பஞ்சவன்மாதேவி, கூறுவாள்: "என் இனிய வளே! கவலை இல்லாமல் இரு. நெடுந் தூரம் பயணம், உன் உடலுக்கு ஏற்காது. வயதால் தளர்ந்துவிட்ட என்னாலும் வெகு தொலைவு பயணப்பட முடியுமா என்பது சந்தேகமே. ஆனால், சக்கரவர்த்தி அழைக் கிறார்கள். பட்டத்து இளவரசியுடன் இணைந்தே நீராட வேண்டுமாம்; அதுவே பெரும் புண்ணியமாம். யுத்த பூமிக்கா நான் செல்கிறேன்? புண்ணிய கங்கையில் நீராடச் செல்வது முன் பிறவிப் பேறன்றோ? கிருஷ்ணை, கோதாவரி, மகாநதி என்று பல புண்ணிய நதிகளிலும் நாங்கள் இணைந்து நீராடுவோம். இந்தப் பேறு வீரமா தேவிக்குக் கிடைக்குமா? சக்கர வர்த்திகளுடன் நெருங்கி இருக்கப் பெரும் வாய்ப்பு. மோக வலை வீசி அரசரைத் தன் கைப்பாவையாக ஆக்கிக் கொண்ட வீரமா தேவியின் பிடியிலிருந்து சக்கரவர்த்தியார் விடுபட இது ஒரு நல்ல வாய்ப்பு! அரிந் தவன் தேவி, நீ கவலைப்படலாமா! சிறந்த



மருத்துவர்கள் உன் அருகே இருந்து, நோயைத் தீர்க்க உதவுவார்கள். நாங்கள் திரும்பி வரும்போது, நீ உற்சாகத்துடன் வரவேற்க வேண்டும்" என்று ஆறுதல் கூறினாள்.

எலும்பும் தோலுமாய், படுக்கையில் கிடந்த அரிந்தவன் தேவியால் அதிகம் பேச முடியவில்லை. அவள் விழிகளில் நீர் கோத்து நின்றது. அரசியை அருகே அழைத்து, "தேவி, என் வருத்தமெல்லாம் வீரமாதேவியை எதிர்த்து நின்ற, நம் போராட்டம் தோல்வி அடைந்து விட்டதே என்பதுதான்" என்றாள்.

"தோல்வியா, அதெப்படி?"

"வீரமா தேவியின் நடவடிக்கையான புதிய நகரம் ஏற்படுத்துவதையும், கோயில் கட்டுவதையும், ஏரி வெட்டுவதையும் நாம் தடுக்க முடியவில்லை. நேற்று அதிகாரி ஒருவர் என்னிடம் மனம் விட்டுப் பேசிக் கொண்டிருந்தார். வீரமாதேவிக்கு, நம் அரசரின் முழு ஆதரவும் இருக்கிறதாம். பெரிய நகரம், பெரிய கோயில். பெரிய ஏரி - இவை மூன்றும் வீரமாதேவியின் திட்டம். அவள் பெயர் என்றும் நின்று நிலவத் தன் பெயரை அவற்றிற்குச் சூட்டப் போகிறாளாம். வீரமாதேவிச்சுரம், வீரமாதேவி புரம், வீரமாதேவி பேரேரி. தேவி! அவள் எண்ணம் நிறைவேறி விட்டால், நகரமும், கோயிலும், ஏரியும் ஏற்பட்டுவிட்டால் நாம் படு தோல்வியடைந்து தலை குனிய வேண்டியதுதான். சோழப் பேரரசி என்ற பெயர் தங்களுக்கு இருந்தும் என்ன பயன்? வீரமா தேவியின் கை ஓங்கினால், செல்வாக்கு மிகுந்தால் அவள் நம்மைப் பழிவாங்கத் தயங்கமாட்டாள். தன் அழகாலும், இளமையாலும் செல்வாக்காலும் சக்கரவர்த்தியைக் கைக்கொண்டு விட்ட வீரமா தேவியின் பணிகளைத் தடுக்காமல், நீங்கள் வடக்கே செல்கிறீர்களே; என்னை விட்டு விட்டுச் செல்கிறீர்களே - அந்தப் பாதகி என்னைக் கொன்று விடுவாளே. எனக்குப் பயமாயிருக்கிறது. தேவி, அவள் தங்களுக்குப் பெரும் இடையூறு விளைவிக்கத் தயங்கமாட்டாள். செல்லும் வழியில் தங்கள் உயிருக்கு ஆபத்து ஏற்படும்படி செய்து விட்டால், பிறகு நான் என்ன செய்வேன். தேவி, என்னையும் அழைத்துச் செல்லுங்கள்; ஆபத்து ஏற்பட்டால் நம் இருவருக்கும் சேர்ந்தே ஏற்படட்டும் அல்லது என் அருகேயே இருங்கள்" என்று, அரசி பஞ்சவன் மாதேவியின் திருக்கரத்தை அழுத்தமாகப் பற்றிக் கொண்டு விம்மி விம்மி அழுதாள்.

அச்சத்தாலும், அன்பினாலும், வேறு துணையில்லை என்ற நம்பிக்கையாலும், அழுத்தமாகப் பற்றியிருந்த அரிந்தவன் தேவியின் கரத்தை மெல்ல விலக்கி, அவள் விழி நீரைத் துடைத்து, "கோழை போன்று அழலாமா? நீ மாபெரும் வீர பரம்பரையைச் சேர்ந்தவள் என்பதை மறந்து விட்டாயா? நீயும் நானும் உயிர்த் தோழிகள்; பிறகுதான் பேரரசி - இளவரசி என்ற பாகுபாடு. நீ பழையாறையில் இருக்க வேண்டும். வீரமாதேவியின் பணிகள் நடைபெறாமலிருப்பதற்கு வேண்டிய திட்டங்களை வகுத்து விட்டேன். கருவூலத்தில் இருந்து ஒரு செப்புக்காசு கூடத் திருப்பணிக்குக் கொடுக்கக் கூடாது என்று கட்டளை இட்டுவிட்டேன். வீரமா தேவியின் கோயில் பணியும், அவளுடைய திட்டங்களும் நிறைவேறாமல் தடுப்பதற்கு வழி வகுத்து விட்டேன். இன்னும் பல இரகசியத் திட்டங்கள். அவற்றைப் பிறகு தெரிவிக்கிறேன். நீ பொறுமையாக இரு. உன் உடல் நிலை முழுமையும் குணமடைய மருத்துவர்கள் பெரு முயற்சி எடுக்கின்றனர். என்னுடன் பயணம் செய்ய உன் உடல் நிலை இடம் தராது. மருத்துவர்களும் அவ்வாறே கருத்தைத் தெரிவித்திருக்கிறார்கள். என் பயணம் வெற்றிகரமாக முடிய கடவுளைப் பிரார்த்தித்துக் கொள். விரைவில் திரும்பி வருவேன். அதற்குள் வீரமாதேவியின் எண்ணம் தவிடு பொடியாகி இந்த நாட்டை விட்டே அவள் வெளியேறி இருப்பாள். அவளாக வெளியேறா விட்டாலும், நம் சக்கரவர்த்தி அதற்கான கட்டளைகளைப் பிறப்பிக்குமாறு நான் செய்துவிடுவேன். கவலையை விட்டு அமைதியாக இரு" என்று கூறி அவள் கரத்தை ஆதரவுடன் தன் கரத்துடன் பிணைத்துக் கொண்டாள். அவள் முகத்தை ஆசையுடன் தடவினாள். முதுகை அன்புடன் வருடினாள். அவள் விழிகளில் இருந்து வடிந்த நீரைத் துடைத்தாள். விடை பெற்றுக் கொண்டு, இராசேந்திரன் தங்கியிருக்கும் இடம் நோக்கிப் பரிவாரங்களுடன் பயணப்பட்டாள். தொடரும்...



# அருள் செயல்படும் வகை

'ஹ்ரீம்யோகி'

அம்பாள் மீது ஸ்தோத்திரம் பாட ஆவலுள்ள பக்தன் காமாட்சி அம்மன் கோயிலில் தினமும் தியானத்தை மேற்கொண்டு, தனக்கு வரம் அருளும்படி பிரார்த்தனை செய்தான். அம்பாள் மீதுள்ள பக்தியால் மனம் திருப்தி அடையாமல், ஒரு ஸ்தோத்திரம் எழுதினால் தன் பக்தி பூரணம் பெறும், ஜென்மம் சாபல்ய மடையும் என்பது பக்தனது நோக்கம். சொல்லுக்குச் சக்தியுண்டு. அதனால்தான் மந்த்ரம் பலிக்கிறது. தீண்டிய விஷம் இறங்குகிறது. பிடித்து உலுக்கும் பிசாசு மந்த்ர ஜெபத்தைக் கேட்டு ஓடுகிறது. பக்திக்கு உயர்வுண்டானாலும், ஸ்தோத்திரமாக எழுதினால் பக்தியை ஸ்தோத்திரத்தின் சொல் பூர்த்தி செய்கிறது. தவம் செய்வது வேறு. காவியம், செய்யுள் எழுதுவது வேறு. அதற்கு அம்பாள் அனுக்கிரஹம் வேண்டும். உன்னைத்துதிக்க, உன்மேல் ஸ்தோத்திரம் எழுத எனக்கு வரம் அருள்வாய் எனத்தவமிருந்தான் பக்தன். வரத்தை நாடி தியானம் செய்தவனைப்பின்தொடர்வது போல் ஒரு மூடன் எப்பொழுதும் அவனருகிலிருந்தான். அவனை மூகன் என மற்றவர் அழைப்பர்.

தவம் பலித்தது. பக்தன் குரல் அம்பாளுக்கு எட்டியது. அவன் கேட்ட வரத்தைக் கொடுக்க அம்பாள் தீர்மானம் செய்து, அவனது நாக்கை புனிதப்படுத்த அம்பாள் முடிவு செய்து ஒரு பெண் உருவம் தாங்கி, பக்தனுக்குப் பிரசாதமாகக் கொடுக்கத்தன் திருவாயிலிட்டு எச்சிற் பிரசாதமாக அவனுக்கு வழங்க வாய்நிறைய வெற்றிலைப்பாக்கைப்போட்டு மென்று நிஷ்டையிலிருக்கும் தவசியை அம்பாள் நோக்கி வந்தாள். தவசி கண் திறந்து பார்த்தான். அவருக்கு அம்பாள் தெரியவில்லை. அம்பாளுக்கு அவருடைய பக்தி தெரிகிறது. தன்னைக் கண்டு கொள்ளவில்லை என்றாலும், அவன் கேட்ட வரப்பிரசாதத்தைக் கொடுக்க நினைந்து, தன் வாயிலுள்ள எச்சில் வெற்றிலைப் பாக்கை வாங்கிக் கொள்ளும் படி அம்பாள் பக்தனைக் கேட்டாள். தவசிக்குக் கோபம் வந்து, வந்தவரை வெறும் பெண்ணாகக் கருதி, அவருடைய தவறான செய்கையை மன்னித்து, அம்பாளை விரட்டி விட்டார். அம்பாள் போகவில்லை. அருகிலிருந்த மூகனை நோக்கி "நீ வாங்கிக் கொள்" என்றார். மூகன் தயாராக அதைப் பெற்றுக் கொண்டான். அவன் நாக்கு புனிதமடைந்தது. ஸ்தோத்திரம் எழுந்தது.

அன்னையை தரிசனம் செய்ய வடநாட்டிலிருந்து ஒரு பெண்மணி வந்திருந்தார். அவர் ஆசிரம முக்கியஸ்தர்களான செக்ரடரி, மேனேஜர் ஆகிய டிரஸ்டிகளுக்கு வேண்டியவர். தரிசனம் ஏற்பாடாயிற்று. மாலை நேரம். அப்பெண்ணுக்குப் பல்வலியால் பல் வீங்கித் தாடை பெரியதாகத் தோன்றியது. டிரஸ்டிகள் இருவரும் அப் பெண்ணுடன் வந்து, தியான மண்டபத்தில் நின்று கொண்டு, அன்னையை மேலே போய் தரிசனம் செய்து வரச் சொன்னார்கள். அந்த அம்மையார் மேலே சென்றார்கள். அன்னை அறைக்குள் அழைக்கப்பட்டார்கள். அருகில் வந்ததும் அன்னை வீங்கியிருந்த தாடைமீது பலமாக அறைந்தார். அவர் திடுக்குற்றார். இனி எக்காரணத்தை முன்னிட்டும் இந்த ஆசிரமம் வரமாட்டேன். அன்னை தரிசனம் போதும் என நினைந்து விரைந்து கீழே வந்தவரை டிரஸ்டிகள் ஆவலாகச் சந்தித்து, தரிசனம் எபபடியிருந்தது என்று கேட்கும்போது, அந்த அம்மையார் பீதியுற்றுள்ளதை ஒருவர் கண்டார். மற்றவர் வீங்கிய தாடையைக் கண்டு என்ன ஆயிற்று, தாடையில் வீக்கத்தைக் காணோமே என்றார். அப்பொழுதுதான் தன் பல்வலி பூரணமாக மறைந்ததை அப் பெண்மணி கவனித்தார்.

திருவாரூர் தட்சிணாமூர்த்தி சுவாமிகள் தஞ்சை ஜில்லாவில் பிரபலம். அவர் நிர்வாணமாகத்தெருவில் நடப்பதை ஆட்சேபித்துக் குதிரை மீது போய்க் கொண்டிருந்த டி.எஸ்.பி. அவரை சவுக்கால் அடித்தான். வெள்ளைக்கார அதிகாரிகள் காலம் அது. அவன் வீட்டிற்குத்

திரும்பியபொழுது, மனைவியின் கௌன் கிழிக்கப்பட்டும், மனைவியின் மீது சாட்டையடி தெரிவதையும் கண்டு, மனம் மாறி, சுவாமியை தேடிப் போய் தன் தவறைத் திருத்திக் கொண்டு, அவர் கேட்டதைக் கொடுத்தார். சுவாமிக்கு வேண்டியது தான் அடக்கமாகும் இடம்.

திருமண வயதுள்ள பெண்ணுக்குத் தீராத பெருவியாதி வந்ததால் குடும்பம் செய்வதறியாத நிலையில், ஒருவர் சுவாமியிடம் அழைத்துப் போங்கள், நல்லது என்றார். அதன்படி பெண்ணை சுவாமியிடம் அழைத்துப் போனபொழுது, அவர் வழக்கத்திற்கு மாறாக அப்பெண்ணை திட்டி, வைது, காறித் துப்பினார், பெண்ணுடன் வந்தவர்களுக்கு எதுவும் புரியவில்லை. பேசாமலிருந்தனர். வீடு திரும்பினர். பெண்ணின் வியாதி பிறகு குணமாயிற்று.

அர்ஜுனன் பாசுபதம் வேண்டித்தவமிருந்தபொழுது, பாசுபத அஸ்திரத்தைக் கொடுக்க விரும்பிய சிவபெருமான் வேடனாக வந்து, அர்ஜுனனுடன் சண்டையிட்டு பிறகு வரம் கொடுத்தார்.

துரியோதனனுடைய புத்திக்கு கிருஷ்ணனுடைய படைகள் அவனைவிடச் சக்தி வாய்ந்தவை எனத் தெரிகிறது. எது வேண்டும் நானா, என்னுடைய படைகளா என்று கிருஷ்ணன் கேட்டபொழுது, அருளை அறிபவனுக்கு பரமாத்மா வேண்டும் என்று தோன்றுகிறது. அருளிலிருந்து விலகுபவனுக்கு மனம் படையை நாடுகிறது.

மகாத்மா என்ற ஸ்ரீ அரவிந்தர் எழுதிய செய்யுள்: குத்துமி என்ற தபஸ்வி, வியாசரிடம் அனுக்கிரஹம் பெற்று கிருஷ்ணனைத் தேடி அலைந்து ஹட யோகம், ராஜ யோகம் சித்தித்த பின்னும், ஆசிரமங்களையும், கோயில்களையும் தரிசித்த பின்னும் காணாமல் காட்டில் ஒரு குடிசையில் நிர்வாணமாக ஆடிக் கொண்டிருந்தவரிடம் பரமாத்மாவைக் காண்கிறார். அவர் பாதத்தில் விழுந்தபொழுது காலால் தலையில் உதைத்து ஞானவரம் அளிக்கிறார்.

அருள் நம்மை நாடிவரும்பொழுது நாமுள்ள நிலைக்குத் தகுந்தாற்போல் வருமேயன்றி, அருளை நாம் அறிந்ததுபோல் வராது.

அம்பாள் பக்தனுக்குக் காட்சியளித்து, கற்கண்டைப்பிரசாதமாகக் கொடுத்து வரமளிக்கவில்லை. எளிய பெண்ணாக வந்து, எச்சில் வெற்றிலையாகப் பிரசாதத்தைக் கொடுக்க முன் வருகிறார். பக்தனுக்குப் பக்தியிருந்தாலும், அம்பாளை அடையாளம் காணும் பக்குவமில்லை. அது மூகனுக்கிருந்தது.

பெண்ணுக்குப் பெருவியாதியிருந்ததால், வந்த வரப்பிரசாதம் திட்டாகவும், காறி உமிழ்தலாகவும் அமைகிறது.

பெருமான் அர்ஜுனனுடன் மல்யுத்தம் செய்து, அர்ஜுனனுடைய அகந்தை தோல்வியுற்ற பிறகே தன்னை யார் என அடையாளம் காட்டுகிறார். பரமன் காட்சியளித்து, அஸ்திரத்தைக் கொடுப்பதாக அமையவில்லை.

சங்கரருக்கும், இராமனுஜருக்கும் காட்சியளித்த பகவான், சண்டாளனாகவே காட்சியளிக்கின்றார். அதையும் முதலில் அவர்கள் அறியவில்லை.

அம்பாளே நம் வீட்டு மருமகளாக வருவதானாலும், நம் அறிவுக்கேற்ப அவள் வருவதில்லை. நமக்குப்பிடிக்காத உருவத்திலேயே அவள் வரத் தீர்மானிக்கின்றாள். நாம் விரும்பும் உருவத்திலும் அம்பாள் வருவதுண்டு. நாம் ஒதுக்கக்கூடிய நிலையிலும் அருள் அம்பாள் வடிவம் தாங்கி வருவதுண்டு.

இது நான் தினமும் காண்பது. அன்னை பக்தர்களுக்கு அருள் அவர்களை நோக்கி வருவதையும், அவர்கள் அது அருளின் வடிவம் என்றறியாமல், தன் மனதிற் கொத்தாற்போலில்லை என ஒதுக்குவதையும் நான் அன்றாடம் காண்கிறேன். அருளை விலக்காமலிருக்க வழியிருக்கிறதா என்றால், இது அருளின் வடிவம் என்று தெரிந்து கொள்ள வழியுண்டு.

நமக்கு ஒரு புது சந்தர்ப்பம், புது உத்தியோகம், வரன் போன்றவை வந்தால் நம் மனதிற்கும், சந்தர்ப்பத்திற்கும் ஒத்துவந்தால் ஏற்றுக் கொள்கிறோம். இல்லை என்றால் வருவது இப்படியா வரவேண்டும் என்று சொல்லி விலக்குகிறோம். அந்த நேரம் அன்னையை நினைந்து இந்த விளக்கம் தேவை எனக் கேட்டால், விளக்கம் தெளிவாகக் கிடைக்கும். இது அருள் எனத் தெரிந்தாலும், ஏற்க மறுப்பது மனித இயல்பு. விளங்காததை விளக்கலாம். பிரியமில்லாதவரை ஏற்றுக் கொள்ள வைக்க முடியாது.

மேல் நாடுகளில் இன்று பாங்கில் பணம் போட்டல் 41/2% வட்டி தருகிறது. அந் நிலையில் ஒருவர் 71/2% வட்டி தருகிறேன் என்றார். சொன்னவர் உலகத்தில் பெரிய பாங்க் அதிகாரி. அருள் எனப்புரிந்து கொள்ளாமல் மறுத்தவர் 15 பேர். இதை எப்படி நம்புவது, ஏதோ மோசடி என ஒதுங்கிவிட்டார்கள். அருள் மூலம் வருவது பெரும்பாலும் நம்ப முடியாத நல்லதாகவும், ஏற்றுக் கொள்ள முடியாத உருவத்திலும் வரும்.

(Hound of Heaven) சொர்க்கத்தின் வேட்டை நாய் என்ற பொருள்படும்படியான தலைப்பில் ஒரு பிரசித்தமான ஆங்கிலச் செய்யுளுண்டு. மகாத்மா காந்தி அதைப் படிக்கும்பொழுது ராஜாஜி அதற்கான குறிப்புகளை எழுதி அனுப்பியிருந்தார். அது மகாத்மா ஜெயிலி லிருந்த நேரம். இருவரும் சந்தித்துப் பேசினர். ஒரு டி.எஸ்.பி. அவர்கள் பேசியதை அருகி லிருந்து எழுதிக் கொண்டார்.

பக்தன் இறைவனை உருக்கமாக அழைத்த தால், இறைவன் அவனை நாடி ரதத்தில் வருகிறார். அவரைக் கண்டபின் பக்தனுக்கு உலகைவிட்டு, அவருடன் போக மனமில்லை. மனைவியை நாடுகிறான். இறைவனை நீ மறுத்த தால், நான் உன்னை ஏற்கமுடியாது என்கிறார். குழந்தைகளை நாடுகிறான். அவையும் மறுத் தன. தான் இலட்சியமாகக்கருதிய பலவற்றை நாடித்தஞ்சம் புக முயல்கிறான். இறைவனை நீ மறுத்ததால், நாங்கள் உன்னை ஏற்கமுடியாது என்று அனைத்தும் பதில் சொல்கின்றன. முடிவாக இறைவனிடம் தஞ்சம் புகுகிறான். இறைவனை அழைக்கும் பக்தியுள்ளது. அவன் குரல் கேட்டு நம்மை நாடிவரும் அளவுக்கு அம்சம் இருக்கிறது. ஆனால் நம் பிரார்த் தனையை இறைவன் ஏற்றுக் கொண்டு நம்மை நாடிவந்தால், அவனை ஏற்றுக் கொள்ளும் பாங்கு இருப்பதில்லை என்ற கருத்தை காந்திஜியும், இராஜாஜியும் விவாதித்தனர். ஐ.ஜி.யிடம் போய் டி.எஸ்.பி. அவர்கள் நாய் களைப் பற்றி பேசினார்கள் என்றார்.

இறைவனுக்கு உரிமையுள்ள ஆத்மா இறை வனை அழைத்து, பின்னர் அவனை ஏற்க மறுத் தால், உலகத்தில் அனைத்தும் அவனை மறுக் கும் என்பது இதன் கருத்து.

அன்னையை மனத்தால் விழைந்தவரை நாடி அன்னை அவர்கள் ஏற்கும் ரூபங்களில் சிறியதாகவும், அவர்களுக்குப் புரியாத உருவத் தில் பெரியதாகவும், அவர்கள் மறுக்கும் ரூபத் தில் உயர்ந்ததாகவும், அவர்களுக்கு ஆத்திர மூட்டும் ரூபத்தில் அற்புதமான ஆன்மிகப் பரிசாகவும் வருகிறார். ஏற்றுக்கொள்ளும் ரூபத்தில் வருவது சிறிய வாழ்வுக்குரிய பரிசு, புரியாத உருவத்தில் வருவது பெரிய லௌகீக அதிர்ஷ்டம். மறுக்கும் ரூபத்தில் வருவது ஆன் மிகப் பரிசு. வாழக்கை விளக்கமாக வருவது, ஆத்திரமூட்டும் ரூபத்தில் வருவது, நம்மில் அன்னை நிரந்தரமாகக் குடியிருக்க வருவது, நாம் முதல் பரிசை விரும்பி ஏற்றுக் கொள் கிறோம். அவை பதவி உயர்வு, நட்பு, ஆதரவு, அன்பு, ஆதாயம், சௌகரியம் போன்றவை. எலெக்ஷனில் நின்றால் ஜெயிக்க முடியாது என்பதால் நிற்காதவரை, எலக்ஷனுக்குப் பின்னால் பிரதம மந்திரி பதவி தேடி வந்து மீண்டும் எலெக்ஷனில் நின்று அபரிமிதமான வெற்றியைப் பெறுவதும் வாழ்வில் நூறு வருஷத்தில் ஒருமுறை நடப்பது. அதுபோன்ற பரிசுகள் புரியாத ரூபத்தில் வரும். மாடு மேய்த்தவர், மகானாக மாறியது போன்ற பரிசுகள் அடுத்தவை. நாமே அன்னையாக மாறுவது கடைசி நிலை அருளின் செயல்.

மகாத்மாவும், ராஜாஜியும், இறைவன் திரு வுள்ளத்தை உலகப் பிரசித்தி பெற்ற ஆங் கிலக் கவியின் வர்ணனையாகக் கண்டு பேசு வது டி.எஸ்.பி.க்கு நாயைப் பற்றிப் பேசிய தாகவேப் புரிந்தது. இறைவனின் வருகை மனித அறிவுக்கு நாயின் வர்ணனையாக இருப் பது சகஜம்.

அன்னையை ஏற்றுக் கொண்டவர்கள் நிலை யில் எங்குமுள்ளதைப் போல் இங்கும் மாறுத லுண்டு. அருளைவிட்டு விலகிப் போனால், அது மீண்டும் ஜென்மாந்தரங்களுக்கு வராது என்பது யோக மரபு. நித்திரத்துவம் வேண்டி தவம் செய்து நித்திரத்துவம் கேட்ட கும்ப கர்ணனுக்கு நித்திரை கிடைத்தது. அருளை மறுத்தால், அது பல தலைமுறைகளுக்கு அருளை விலக்கி, இருளைக் கொடுக்கும். இறைவனுக்குத் தன்னை முழுவதும் அர்ப்ப ணிக்கும் வாய்ப்பு கிடைப்பதரிது. அது கிடைத்தபின் அதை ஏற்றுப்பிறகு மறுத்தவர் தன் சொத்து முழுவதையும் இழந்ததை அன்னை வர்ணிக்கிறார். நம் யோக மரபில் தவறு நடந்தால், அத்தோடு ஜென்மம் முடிந்து விடும். அன்னை மரபில் தவறை உணர்ந்தால் அருள் மீண்டும் உன்னை நாடி வரும் என் கிறார். நான் மறுத்தவர் பலரைப் பார்த்திருக் கிறேன். தவறை உணர்ந்து மீண்டும் அருளைப் பெறும் பொழுது அருள் அதிகமாகும். அதை ஒரிருவரிடமே கண்டுள்ளேன். எங்கும்போல், அன்னை இங்கும் மாற்றமாகச் செயல் படுகிறார்.

ஃ

### ஞானச்சுடர்

பூரணத்தின் (Perfection) பகுதிகள் ஆறு. சமத்துவம், சிரத்தை, இறைவனுடன் கலந்த நிலையிலிருந்து செயல்படுவது, சூட்சும உடலும் யோகச் சிறப்பை பெறுவது, செயல் சிறப்படை வது. ஜீவன் வாழ்வில் ஆனந்தம் பெறுவது, கரணங்கள் விரிந்து பிரபஞ்சத்தின் கரணங்களாக மாறுவது ஆகிய ஆறு பகுதிகள் அவைகள்.

# ஆண்டவனை அடைய ஐந்து வழிகள்



பெரியவர் இராமமூர்த்தி

பிரியமான ஜீவன்களே!

இயந்திரமயமாகி வருகின்ற இந்த உலகத்திலே மனிதனுக்கு இயக்கமே வேகமாகி வருகின்றது.

எங்கும் வேகம்!

எதிலும் வேகம்!!

பொருள் சேர்ப்பதிலும் வேகம் – பொருள் செலவழிப்பதிலும் வேகம். உழைக்காமலே எல்லா வசதி வாய்ப்புகளும் தனக்கு நேர வேண்டுமென எல்லா மனிதர்களுமே ஆர்வமுடன் இருக்கிறார்கள்.

பொருள் வருகின்ற முறை தவறோ, சரியோ அதுபற்றி யோசிக்க யாருமே தயாராக இல்லை. இதனால் உலகத்திலே தர்மம் என்பதே மறந்து அதர்மமே ஆட்சி செலுத்திக் கொண்டிருக்கிறது.

இதே அணுகுமுறைதான் ஆன்மிகப் பாதையிலும் பெருக்கெடுக்க ஆரம்பித்த காரணத்தினாலே –

இன்றைய உலகில் பக்திமுறை வளர்ச்சி அடைந்தது போன்ற தோற்றம் தென்படுகிறதே ஒழிய உண்மையில் ஆன்மிகப் பாதையிலே ஒரு பின்தங்கிய நிலைதான் காணப்படுகிறது!

ஒரு கோயிலுக்கோ, அல்லது ஆஸ்ரமத்திற்கோ சென்று தங்கள் குறைகளை முறையிட்ட உடனே, அவர்களுடைய குறைகள் போர்க்கால அடிப்படையிலே நிறைவேற வேண்டுமென எண்ணுகின்றனர்.

ஆனால் –

அப்படி நிறைவேறாத பட்சத்தில் அந்த கோயிலுக்கோ அல்லது அந்த ஆஸ்ரமத் தலைவருக்கோ எவ்விதமான சக்தியும் இல்லையென்று அவர்களே நீதிபதியாகி அடுத்த கோயிலை அல்லது ஆஸ்ரமத்தை நோக்கி பிரயாணப்படுகின்றனர்.

உண்மையான ஆன்மிகப் பாதையென்பது கோயில்களிலோ அல்லது ஆஸ்ரமங்களிலோ நிச்சயம் கிடையாது!

இவ்வாறு பிரயாணப்படும் முன்னர் மனிதன் செய்ய வேண்டிய ஆயத்தப்பணிகள் சில இருக்கின்றன. அவை நிறைவு பெற்றால்தான் அந்த மனிதனுக்கு முழுமையான ஆன்மிக ஆசீர்வாதம் கிடைக்கும்! அவையாவன –

1. பூத யக்ஞும்
2. நர யக்ஞும்
3. பித்ரு யக்ஞும்
4. ரிஷி யக்ஞும்
5. இறை யக்ஞும்.

## 1. பூத யக்ஞும்

யக்ஞும் என்பதற்கு வழிபாடு என்ற பொருளும் உண்டு. பூத யக்ஞும் என்றால் பூதங்களை வழிபடுவது என்று அல்ல பொருள்!

மனிதனாகப்பட்டவன் தனக்குக் கீழ்ப் பட்டிருக்கிற தாவரங்கள், விலங்குகள் போன்றவற்றை அன்புடன் நடத்தப் பழக வேண்டும். சில மனிதர்கள் மண்தரையிலே அமர்ந்திருக்கின்ற பொழுது அங்கிருக்கின்ற புல் பூண்டுகளைக் கிள்ளிப் போட்டு வேடிக்கை பார்ப்பதைக் கண்டிருக்கிறோம். சில சிறுவர்கள் தெருவிலே செல்லுகின்ற நாயைக்கல்லெடுத்து அடிப்பதை நாம் கண்டிருக்கிறோம். அவைகளும் ஜீவராசிகள்தாம் என்ற எண்ணம் நமக்குத் தோன்றுவதே கிடையாது.

ஜெர்மனியிலே ஒரு பெண்மணி தன் தோட்டத்திலே வளருகின்ற பயிர்களுக்கு இசைத்தட்டுகள் போட்டு, அந்த இசை மூலமே செடிகளை வளர்த்தாராம். அவர் இரண்டு நாள்கள் ஊருக்குச் சென்றுவிட்டால் அந்தச் செடிகளெல்லாம் ஏக்கத்திலேயே வாடி விடுமாம்.

நான் தியானத்திற்காக ஒரு குறிப்பிட்ட மரத்தடியிலே அமர்வது வழக்கம். அப்போது ஓர் அணில்பிள்ளை வந்து என்னோடு விளையாடும்!

ஒருநாள் நான் செல்லவில்லை என்றால்கூட அந்த அணில் பிள்ளை அடுத்தநாள் செல்லும் போது, நேற்று ஏன் வரவில்லை என்பதுபோல என்னை ஏக்கத்தோடு பார்க்கும்!

ஆகவே,

இறைவழிபாட்டின் முதற்படியாக மனிதனுக்குக் கீழ்ப்பட்டிருக்கிற தாவரங்கள், விலங்குகளோடு மனிதன் ஓர் இணக்கமான உறவினை ஏற்படுத்திக்கொள்ளப்பழக வேண்டும்!

இதனை மனதில் கொண்டு தான் அரசாங்கமே 'வீட்டிற்கு ஒரு மரம் வளர்ப்போம்' என்று பிரசாரம் செய்து வருகிறது.

இது இறைவழிபாட்டின் முதல் படியாம்!

## 2. நர யக்ஞும்

குருநாதர் அடிக்கடி கூறுவார் –

'கண்ணெதிரில் காண்பவனோடே உனக்கு ஆயிரம் பிரச்னைகள் என்றால், கண்ணுக்குத் தெரியாத இறைவனை உன்னால் எப்படி நேசிக்க முடியும்!'

–என்று.

கண்ணெதிரில் இருப்பவனை விடுங்கள் – கணவன், மனைவியே ஒருவரை ஒருவர் புரிந்து கொள்ளாமல் ஆயிரம் பிரச்னைகளை வளர்க்கின்ற இந்த காலத்திலே அடுத்தவனை எப்படி நேசிக்க முடியும்!

'அண்டத்தில் என்ன இருக்கிறதோ அதுதான் இந்த பிண்டத்திலேயும் இருக்கிறது!'

ஆகவே –

எல்லோருக்குள்ளும் ஆண்டவன் உறைகிறான் என்ற தத்துவத்தை

உணர்ந்து, நம்மைச் சுற்றியிருக்கின்ற மனிதர்களை, வயோதிகர்களை, நோயாளிகளை பகவத் சொரூபமாக உணர்ந்து அவர்களையும் முழுமையாக நேசிக்கப் பழகவேண்டும்!

இது இறைவழிபாட்டின் இரண்டாம் படியாம்!

### 3. பித்ரு யக்ஞம்

பித்ரு என்பது மறைந்தவர்களை மட்டுமல்லாது, நம்முடன் ஜீவிக்கின்ற நம்முடைய பெரியவர்களையும் குறிக்கும்.

ஒரு வீட்டிலே ஒரு மகன் தன்னுடைய தந்தைக்கு ஒரு பழைய மண்சட்டியிலே உணவு படைத்துக் கொண்டிருந்தானாம். ஒருநாள் அந்த தந்தை இறந்து விட்டான். அப்போது அந்த மகன் அந்த பழைய சட்டியை உடைக்கப் போனானாம். அந்த நேரம் அவனுடைய மகன் கூறினானாம் –

'அப்பா, அந்த சட்டியை உடைத்துவிடாதே, உனக்கு நான் உணவு போட அந்தச் சட்டி தேவை!'

– என்று.

இப்படிப்பட்ட அருமையான உலகம் இது.

வேடிக்கையாக ஒரு பழமொழி கூறுவார்கள் –

'அப்பனுக்கு மகன் மீது ஆசை, மகனுக்கு அவன் மகன் மீதுதான் ஆசை!'

இந்தக் காலத்திலே பெற்றோர்களை பராமரிப்பது என்பதே ஒரு கடினமான தொழிலாகி விட்டது.

உயிரோடிருக்கும் காலத்திலேயே பெற்றோர்களைப்பராமரிக்காதவன், இறந்து போன பிறகு அவர்களுக்குச் செய்ய வேண்டிய பித்ரு கர்மாக்களையா செய்யப் போகிறான்?

ஆகவே –

உயிரோடிருக்கும் காலத்திலேயே பெற்றோர்களைப் பேணிப் பராமரித்து, அவர்களின் ஆயுட்காலம் முடிந்தவுடன் அவர்களுக்குச் செய்ய வேண்டிய பித்ரு கர்மாக்களைச் செய்வது மனிதன் ஆற்ற வேண்டிய முக்கியமான கடமையாம்.

வட இந்தியாவிலே 'கயா' என்றவொரு திருத்தலம் உண்டு. அங்கே ஒருமுறை பித்ரு கர்மாவைச் செய்துவிட்டால் அவர்கள் மோட்சம் அடைந்து விடுவதாக ஐதீகம். அதே போல இமய மலைச் சாரலிலே அமைந்துள்ள 'பத்ரிநாத்' என்ற திருத்தலத்திலே 'பிரம்ம கபாலம்' என்ற ஓர் இடம் உண்டு. அங்கே புத்திர சந்தானம் இல்லாதவர்கள் தனக்குத் தானே பிண்டம் வைத்துவிட்டால் அவர்களுக்கும் மோட்சப் பிராப்தி கிடைப்பதாக ஓர் ஐதீகம்!

இது இறை வழிபாட்டின் மூன்றாம் நிலையாம்!

### 4. ரிஷி யக்ஞம்

'சாது தரிசனம் பாப விமோசனம்!'

'எந்தரோ மகானுபாவுலு அந்தர்கி வந்தனமு!'

இவை சாதுக்களைப் பற்றி நம் முன்னோர்கள் நமக்கு வழங்கிய பொன்னுரைகள்!

ஒரு பாடல் ஒன்று உண்டு –

"சாதுக்கள் மகிமையைச் சொல்வதென்றால் என்னால் சாத்தியம் ஆகாதப்பா!"

ஒரு குரு சிஷ்யனைக் கேட்டாராம் –

'உனக்கு குரு வேண்டுமா – கோவிந்தன் வேண்டுமா?'

சிஷ்யன் கூறினானாம் –

'எனக்கு கோவிந்தன் வேண்டாம் – குருதான் வேண்டும்!'

ஒரு குரு ஓர் அறையிலே வருடக்கணக்காக தவம் செய்து கொண்டிருந்தாராம். அவர் எதற்கெடுத்தாலும் 'ஓம் நமசிவாய' என்றே கூறுவாராம். ஒருநாள் அந்த குரு சமாதியடைந்தாராம்.

அவர் செய்த தவத்தின் பயனாகச் சொர்க்கக் காவலர்கள் அவரை சொர்க்கப் பாதைக்கு அழைத்துச் சென்று கொண்டிருந்தார்கள்.

அப்போது வழியிலே ஓர் அவலமான ஓலம் கேட்டதாம்.

அந்த குரு சொர்க்கக் காவலர்களை கேட்டார் – 'அது என்ன ஓலம்?'. சொர்க்கக் காவலர்கள் கூறினார்களாம் – 'அதுதான் நரகம்' என்று.

அந்த குரு கேட்டார், 'நான் அவர்களைச் சென்று பார்க்க வேண்டும்!'

சொர்க்கக் காவலர்களும் அவரை நரகத்திற்கு அழைத்துச் செல்ல –

அங்கே அந்த பாவிகள் படும் வேதனையைப் பார்த்தவுடன் தன்னையுமறியாமல், அவர் வழக்கம் போல, 'ஓம் நமசிவாய' என்று கத்தினாராம்.

உடனே அத்துணை பாவிகளும் பாபவிமோசனம் பெற்று சொர்க்கம் போய்ச் சேர்ந்தனராம்.

சாதுக்களின் திருக்கரங்கள் ஆண்டவனையே வழிபாடு செய்த கரங்கள் – சாதுக்களின் திருக்கண்கள் ஆண்டவனையே தரிசனம் செய்த கண்கள் – சாதுக்களின் திருக்கால்கள் ஆண்டவனையே நோக்கி பிரயாணம் செய்த கால்கள் – சாதுக்களின் திருமேனி ஆண்டவன் குடிகொண்ட திருமேனி!

அப்படிப்பட்ட சாதுக்களைத் தரிசனம் செய்து, அவர்களுக்குத் தேவையான பணிவிடைகள் செய்து, அவர்களுடைய பாதார விந்தங்களில் சரணாகதி அடைவதே இறைவழிபாட்டின் நான்காம் படியாம்!

### 5. இறை யக்ஞம்

இந்த நான்கு வழிபாடுகளிலும் கவனம் செலுத்தாமல் ஆண்டவனுடைய அனுக்கிரகத்தை மட்டும் கோருவது –

ஆபீஸுக்கே போகாமல் சம்பளம் கேட்பது போன்றது!

பரீட்சையே எழுதாமல் பாஸ் செய்ய வேண்டும் என்று கேட்பது போன்றது!!

முதலில் –

மேற்கண்ட நான்கு ஆபீஸ்களுக்கும் சென்று வேலை செய்யுங்கள்!

மேற்கண்ட நான்கு பரீட்சைகளையும் முறையாக எழுதுங்கள்!!

பலன் தானே கிடைக்கும்!!!

எங்கும் நிறைந்த குருநாதனின் எல்லையற்ற திருக்கரங்கள் இணையற்ற ஆற்றலுடன் கூடி உங்களை ஆசீர்வதிக்கக் கடவதாக!



# தெய்வத்திற்கு அஞ்சலி

## வசுமதி ராமசுவாமி

எனக்கு ஐந்து வயதாக இருக்கும்போது என் தந்தையாருடன் திருவிடைமருதூர் ஸ்ரீ மடத்திற்குப் போய் மடத்தில் விளையாடி இருக்கிறேன். என் வாழ்க்கையில் எத்தனையோ திருப்பங்கள். பரமாச்சார்யாள் ஆசிகள் பெற்றிருக்கிறேன்.

பெரியவாள் 35 ஆண்டுகளுக்கு முன்பு திருமயிலை சமஸ்கிருத கலா சாலையில் தங்கி இருந்தபோது ஒவ்வொரு நாளும் தரிசனம் செய்து அருளாசி பெறும் பேறு பெற்றேன். அந்த சந்தர்ப்பத்தில் பெரியவாள் தெய்வமாக இருந்து பிறருடைய குறைகளைச் சொன்னாலும் கேட்டு அருளாசி வழங்கியிருக்கிறார்.

ஒரு கருத்தை மட்டும் சொல்ல விரும்புகிறேன். ஸ்ரீ ஆசார்யாள் பெண்களிடம் அதிக மதிப்பு வைத்திருந்தார்கள். தாயன்புடன் கருணைசெய்து ஆசிகள் வழங்கி இருக்கிறார்கள். பெண்கள் தெய்வமாக இருக்க வேண்டுமென்று விரும்பி அவர்களுக்குப் பல நன்மைகள் செய்தார்கள்.

குடும்ப ஸ்திரிகள் பத்தினிப் பெண்களாக வாழவேண்டும். குடும்பத்தைக் கவனித்து கணவன், குழந்தைகள், பெரியோர்கள் அனைவரும் அன்புடன் பணிவுடன் குடும்பத்தை நடத்த வேண்டுமென்ற கொள்கை உள்ளவர்கள். வீட்டுப் பெண்கள் பசு மாடுகளை எளிய முறையில் பூஜிக்க வேண்டும் என்ற கருத்துடையவர்கள்.

1975 ஆம் ஆண்டு மார்ச் மாதம் மழையில்லாமல் பஞ்சம் வரும் நிலை. ஸ்ரீ கற்பகாம்பாள் சங்கத்தின் சார்பில் மழை வேண்டல் பிரார்த்தனை செய்ய ஸ்ரீ சங்கராச்சாரியார் அவர்களிடம் காஞ்சிபுரம் போய் விண்ணப்பித்துக் கொண்டோம். ஸ்ரீ கபாலீச்வரருக்கு 508 குடம் ஜல அபிஷேகம் செய்ய ஆசைப்படுகிறேன் என்றேன். கைகளை தூக்கி ஆசிர்வதித்தார்கள்.

ஸ்ரீ கபாலீச்வரர் கோயிலில் சுவாமிக்கு 508 குடம் ஜலம் 3 வேளையாக அபிஷேகம் அங்கத்தினர்களுடன் செய்ய இயன்றது. வறண்டு போன கிணற்றில் ஒரே நாளில் 508 குடம் ஜலம் கிடைத்தது. மஹா பெரியவாள் அனுக்கிரஹத்தில் நடந்தது.

ஸ்ரீ பெரியவாள் ஆக்ஞையில் அந்த கட்டளையில் "ஸ்ரீ கற்பகாம்பிகா திருவருள் சங்கம்" என்று நிறுவி ஒவ்வொரு மாதமும் இயன்ற வரை மாங்கல்யம் அளித்து கல்யாண தர்மம் செய்து வருகிறோம். இப்படி எத்தனை எத்தனையோ.

8.1.94 சனிக்கிழமை மாலை, 'மாதத்தில் நான் மார்கசீருஷம்' என்ற கண்ணன் வாக்கியப்படி தெய்வமாக தம் மூச்சுக்காற்றை நிறுத்திக் கொண்டார்கள், ஆசாரியாள் சுவாமிகள், ஜகத்குரு ஸ்ரீ சங்கராச்சாரியார், பெரியவாள், மஹாப்பெரியவாள் ஆன்மா பிரிந்து தெய்வமாக பிருந்தாவனத்தில் கோயில் கொண்டு விட்டார்கள்.

ஸ்ரீபரமாச்சார்யாள் மஹா விஷ்ணுவின் அம்சம். ஸ்ரீராமனைப் போல் குணக்குன்று. காமாட்சியைப் போல் தாயாக, மகா சரஸ்வதியைப்போல் கல்விக் கடலாக், மகாலட்சுமியைப்போல் நல்லுரைகளைச் செல்வமென வாரி வழங்குபவராக வாழ்ந்தார்கள். ஆதிசங்கரர் 32 வயதே வாழ்ந்த குறையை நீக்க, நூறு வயதுகள் பரமாச்சார்யாள் வாழ்ந்து, காமகோடி பீடத்தின் 65 ஆவது பீடத்தை அலங்கரித்தார்கள்.

ஆசார்யாள் பாத கமலங்களில் அனைவருடைய சார்பில் கோடி நமஸ்காரங்கள்.



---

## திசைகாட்டி வழி காட்டும்

### கு. சண்முகசுந்தரம்

ஒருகோடிச் சூரியர்கள்
உதித்தெழுந்து வந்ததுபோல்
பெருஞ்சோதிப் பிழம்பொன்று
பிறந்ததுவே, என்ன அது?

கருணை மாமுனிவர்
காஞ்சிப் பெரியவரின்
திருவடிவ தரிசனத்தின்
தெய்விக ஒளிவெள்ளம்!

கருவிழிகள் இரண்டும்
கருணைமழை கொட்டும்!
பொருளார்ந்த பூமுகத்தில்
புன்னகைத் துளிசொட்டும்!

அருள்பொழிந்த அத்தகைய
அன்புருவம் மறைந்திடினும்
திருவடிகள் எந்நாளும்
திசைகாட்டி வழிகாட்டும்.

# வள்ளல் பச்சையப்ப முதலியார்

ரகமி

(1794 ஆம் ஆண்டு மார்ச் 31 ஆம் தேதி மரணம் அடைந்த பிரபல பழம்பெரும் கொடை வள்ளல் பச்சையப்ப முதலியாருக்கு இந்த மார்ச்சில் 200 ஆவது நினைவு ஆண்டு வருகிறது. அவரது வரலாற்றுப் பெருமைகளைச் சுருக்கமாகக் கூறுவதே இக்கட்டுரை!)

"அன்ன சத்திரம் ஆயிரம் வைத்தல்
ஆலயம்பதி னாயிரம் நாட்டல்;
பின்னருள்ள தருமங்கள் யாவும்
பெயர் விளங்கி யொளிர நிறுத்தல்,
அன்ன யாவினும் புண்ணியம் கோடி
ஆங்கோர் ஏழைக் கெழுத்தறி வித்தல்"

— என மகாகவி பாரதி பாடியதுபோல், தர்மம், கல்வி இவை இரண்டையும் தன் இரு கண்களாகக் கொண்ட பெருமைக்குரியவரே "பெரும் கொடை வள்ளல்" பச்சையப்ப முதலியார் ஆவார்.

தென்னாட்டுப் புண்ணியத் தலமான காஞ்சிபுரத்தில் 'அகமுடையார்' வேளாளர் குலத்தைச் சேர்ந்தவர் விசுவநாத முதலியார். இவர் மனைவி பூச்சியம்மாள். இத்தம்பதியருக்கு சுப்பம்மாள், அச்சம்மாள் என இரு பெண் குழந்தைகள் பிறந்தபின், பூச்சியம்மாள் மூன்றாவதாகக் கர்ப்பமுற்றாள். இச் சமயத்தில் திடீரென கணவர் விசுவநாத முதலியார் மரணம் அடையவே, பூச்சியம்மாள் குடும்பத்தில் கஷ்டங்கள் மேலிட்டன. காஞ்சியில் மிக்கச் சிரமமான வாழ்க்கையை நடத்திய விதவை பூச்சியம்மாள், அந்நாளில் தான் கணவரோடு வாழ்ந்தபோது சென்னையை அடுத்த பெரிய பாளையத்தின் பிரபல பிரமுகரும் ஆர்க்காடு சுபேதாரரின் காரியதரிசியுமான "பவுஸ்தர்" ரெட்டியாரைப் பற்றிக் கேள்விப்பட்டு தன் இரு பெண் குழந்தைகளோடு பெரியபாளையத்திற்கு வந்தார்.

தன்னை நாடி வந்த பூச்சியம்மாளையும், அவர் இரு பெண் குழந்தைகளையும் 'பவுஸ்தர்' ரெட்டியார் தம்பதிகள் வரவேற்று பேராதரவும் தந்தனர். 1754 ஆம் ஆண்டு சித்திரை மாதம் (தேதி தெரியவில்லை) பூச்சியம்மாளுக்கு பச்சையப்பன் பிறந்தார். (தன் வயிற்றில் மூன்றாவது ஆண் மகனாகக் கருவளர்ந்த போதே, தன் கணவர் மரணம் அடைந்து, தான் விதவையானதோடு, தவிர சித்திரை மாதத்தில் பிறந்த பச்சையப்பனால் வேறு என்னென்ன கெடுதிகள் ஏற்படுமோ என பூச்சியம்மாள் மிகுந்த வருத்தமும் அடைந்தாராம்). 5 வயது வரை பெரியபாளையத்தில் ஓர் தெலுங்குப் பள்ளியில் பயிலும் போதே திடீரென "பவுஸ்தர்" ரெட்டியாரும் காலமானார். பூச்சியம்மாள் மேலும் வறுமையில் மூழ்கினார். கணவரை இழந்த ரெட்டியாரின் மனைவிக்கு தானும் தனது மூன்று குழந்தைகளும் மேலும் பாரமாக இருக்க மனமில்லாத பூச்சியம்மாள் மிகுந்த வேதனையோடு தனது குழந்தைகளோடு 1760 ஆம் ஆண்டு சென்னைக்கு வந்தார்.

வள்ளல் பச்சையப்பர்

அப்போது சென்னையில் "போனி" என்ற ஆங்கிலேய துரையிடம் "நெய்தவாயல் பவுனி" நாராயணபிள்ளை "துபாஷி" உத்தியோகம் பார்த்து வந்தார். அந்நாளில் மொகலாயப் பிரமுகர்கள், மற்றும் ஆங்கிலேய கும்பினியாரிடம் பிறருடைய பாஷையை உருது அல்லது ஆங்கிலத்தில் மொழி பெயர்த்துக் கூறுபவருக்கு இரு பாஷைக்காரர்கள் என்பது ஹிந்தியில் "தோ-பாஷி" என்றழைக்கப்பட்டதே, நாளடைவில் "துபாஷி" என மாறியது. பூச்சியம்மாளின் நிலைமையை அறிந்த 'பவுனி' நாராயண பிள்ளையும் ஆதரவு அளித்தார். சென்னை ஜியார்ஜ் டவுனில் சுவாமி மேஸ்திரி தெருவில் ஒரு சிறு வீட்டில் பூச்சியம்மாள் மிக்க எளிமையோடு வாழ்க்கையை நடத்தினார்.

'பவுனி' நாராயணபிள்ளையும் பூச்சியம்மாளிடம் சகோதர பாசத்தைக் காட்டி வந்ததோடு, அவரது இரு புதல்விகளுக்கும் தக்க இடங்களில் ___ திருமணம் செய்து வைத்தார். பச்சையப்பனையும் பள்ளியில் பயிலச்செய்ததோடு, ஆங்கிலத்தைச் சரளமாகப் பேசும் பச்சையப்பனுக்கு உத்தியோகமும் ஏற்பாடு செய்தார். சென்னையில் வெளிநாடுகளில் இருந்து வரவழைக்கப்படும் விதவிதமான பொருள்களை இங்கு சில்லறை வியாபாரிகளிடம் விற்பதில் ஓர் தரகராக உத்தியோகம் பார்த்ததில் இவருக்கு நல்ல பெயரும், வருமானமும் கிடைத்தன. இதனால் பச்சையப்பருக்குப் பல ஆங்கிலேய உத்தியோகஸ்தர்களிடம் நெருங்கிப் பழகும் வாய்ப்பு ஏற்பட்டது.

பச்சையப்பர் பார்வைக்கு நல்ல உயரமும், சுறுசுறுப்பையும் நன்கறிந்த ஓர் ஆங்கிலேய இராணுவ அதிகாரி இவரைத் தமது படையில் சேர்ந்து பணியாற்றும்படி ஊக்கம் காட்டி அழைத்தார். பச்சையப்பரும் தனது தாயார் மற்றும் 'பவுனி' நாராயணபிள்ளைக்கும் தெரியாமல் சென்னைக்கு அருகில் உள்ள பாலு செட்டி சத்தி

ரத்திலுள்ள இராணுவப் படையில் சேர வந்தார். இது விஷயமறிந்த நாராயணபிள்ளை, சம்பந்தப்பட்ட ஆங்கிலேய அதிகாரியை நேரில் சந்தித்து பச்சையப்பரின் குடும்ப நிலைமையைக் கூறி, அவரை அப்பணியில் சேராமல் தன்னுடனே சென்னைக்கு மீண்டும் அழைத்து வந்து விட்டார்.

பச்சையப்பருக்குத் திருமணம் செய்து விட்டால், உத்தியோகத் திற்குச் செல்ல நாட்டமில்லாமல் குடும்பத்துடனே தங்கி விடுவார் என்ற எண்ணத்தினால், பச்சை யப்பரின் மூத்த சகோதரி சுப்பம் மாளின் புதல்வியான அய்யம் மாளை பச்சையப்பருக்குத் திரு மணம் செய்து வைத்தனர். அப்போது அவருக்கு வயது 22. திருமணத்திற்குப் பின் பச்சை யப்பருக்கு நிறைய சம்பாதிக்க வேண்டும், வருமானத்தை கல்வி மற்றும் தரும காரியங் களுக்குச் செலவிட வேண்டுமென்ற பரோபகாரமான எண்ணங்களே மேலிட்டன!

திருமணத்திற்குப் பின் பச்சை யப்பர் "நிக்லஸ்" என்பவரிடம் 'துபாஷி'யாக உத்தியோகம் ஏற்றார். இதனால் பச்சையப்ப ருக்கு நல்ல வருமானம் கிடைத்தது. குடும்பச் செலவுக்குப் போக மிகுதியைத் தங்கள் குடும்பத்தை ஆதரித்து வரும் 'பவுனி' நாராயண பிள்ளையிடமே கொடுத்துச் சேமித்து வந்தார். தனக்குக் கிடைத்த நல்ல வரு மானத்தில் பச்சையப்பர் தங்கள் பூர்வீகமான காஞ்சிபுரத்தை மறக்க வில்லை. அங்குள்ள ஸ்ரீ ஏகாம்பர நாதேஸ்வரர் திருக்கோயிலுக்கு உற்சவமூர்த்தி விக்கிரகங்களோடு 1774 ஆம் ஆண்டு மார்ச் 27 இல் கோயில் கும்பாபிஷேகமும், அடுத்து பங்குனி உத்திர திருமண மண்டபத்தையும் கட்டி முடித் தார். தொடர்ந்து பல திருக் கோயில்களுக்கு அதிக அளவி லேயே பொருளுதவிகளையும் செய்தார்.

பச்சையப்பர் தர்மராய முதலி யார், புங்கத்தூர் செல்வராய முதலியார் ஆகியோருடன் கூட்டு சேர்ந்து ஆங்கிலேய 'கும்பினி' யாரின் ஜாகீரான செங்கற்பட்டு ஜில்லாவைச் (இப்போது செங்கை



நவாப் வாலாஜா

எம்.ஜி.ஆர். மாவட்டம்) சேர்ந்த பூந்தமல்லி, திருப்பத்தூர் முதலிய ஊர்களில் நெல் குத்தகையை எடுத்து அதிக லாபமும் சம்பாதித் தார். அடுத்து பச்சையப்பர் நிக்லஸிடமிருந்து விலகி, "ஜோஸப் ஸலவன்" என்பவரிடம் "துபாஷி" யானார். இந்த ஆங்கிலேயர் "நவாப் வாலாஜா"விற்கு தஞ்சாவூர் உரிமையை வாங்கிக் கொடுக்க நடத்திய போராட்டத்தில் பச்சை யப்பரும் வெகு தீவிரமாகச் செயல் படவே, அவருக்கு கௌரவமும், மிகுந்த லாபமும் கிடைத்தன. தென்னாட்டில் ஆங்கிலேயர் நிலைத்து நிற்கப் பெரிதும் பாடு பட்டவர்களில் பச்சையப்பரே மிக முக்கியமானவராவார். ஆண்டு தோறும் தஞ்சை மன்னர் 'கும்பினி' யாருக்குச் செலுத்த வேண்டிய பொருள்களைப் பச்சையப்பரே முன்னின்று வசூலித்ததில் இருபது சதவீதம் லாபமும் பெற்றார். தனக்குக் கிடைத்த லாபத்தொகை களைப் பச்சையப்பர் சென்னை யிலுள்ள "பவுனி" நாராயண பிள்ளைக்கே அனுப்பிவிட்டு, அவர் தஞ்சையிலேயே ஓர் பெரிய மாளிகையில் வசித்து வந்தார்.

பச்சையப்பர் நல்ல உயரம், முழங்கால் வரை நீண்ட கைகள், வட்டமான முகத்தில் எடுப்பான மூக்கும், ஒளி வீசும் கண்களோடு, நெற்றியில் பளிச்சென விபூதியும் அணிந்திருப்பார். உடம்பில் வெள்ளை மஸ்லின் துணியிலான நீளமான ஆடை, இடுப்பில் வண்ணமிகு பட்டையோடு, மார்பின் குறுக்காக மெல்லிய சால்வையோ, சரிகை அங்கவஸ் திரமோ அணிந்திருப்பார். காதுகளில் சிற்சில சமயங்களில் கடுக்கன் அல்லது தங்க வளையங் களையோ அணிவார். வசீகரமான தலைப்பாகையில் விலையுயர்ந்த முத்துகளும், பவளங்களும் கட்டி யிருக்கும். அந்நாளில் இவரை எல்லோருமே "பச்சையப்பர் 'இச்சை'யான அலங்காரப் பிரியர்" என்றே அழைப்பார்களாம்!

தனக்குக் கிடைத்த வருமானங் களில் இருந்து பச்சையப்பர் தென்னாட்டிலுள்ள பல புண்ணிய ஸ்தலங்களுக்கும், வடக்கேயுள்ள காசியிலும் பலவித கட்டளைகளும், அன்னதானங்கள், ஆண்டவனுக்கு நித்திய பூஜாக்கிரமங்களும் சிறப் புடன் நடத்தப் பல திருப்பணிகளை யும் செய்தார். சைவ மதத்தின் மீதுள்ள அபார பற்றுதலினால் இவர் மிகுந்த சிரத்தையோடு சிவபக்தர்களுக்கும், யாத்திரிகர் களுக்கும் அளவிலாப்பொருளுதவி களையும் செய்தார்.

1788 ஆம் ஆண்டிற்குப் பின் தஞ்சை மன்னரிடமிருந்து கும்பினி யாருக்கு வரவேண்டிய வரு மானங்கள் சரிவர வராததில் அப்போது சென்னை கவர்னர் ஆர்ச்சிகால்டு காம்பெல் பச்சை யப்பரை சென்னைக்கு வர வழைத்து வரவேண்டிய வசூலைப் பற்றித் துரிதப்படுத்தினார். ஆனால் அச்சமயம் தஞ்சை மன்னரின் பொருளாதார நிலை சரியில்லாததனால் முதலில் பச்சையப்பர் சற்று தயங்கினார். ஆனால் கவர்னரின் பிடிவாதத் தோடு, பச்சையப்பர் பிட்டிரீட், டி.ஸோஸாவுடன் தஞ்சைக்கு அரை மனதுடனே சென்றார்.

ஆனால் பச்சையப்பரோ தஞ்சை மன்னரின் நிலைமையை சீர்படுத்தவும், அதே சமயத்தில் 'கும்பினிக்குச் சேரவேண்டிய தொகையை வசூலிக்க வேண்டிய நல்லெண்ணத்தோடு, பச்சையப்பர் மன்னருக்கு ஒரு லட்சம் வராகன்தனது சொந்தப்பணத்தில் இருந்து கடனாகத் தந்து உதவினார். பச்சையப்பருடன் தஞ்சைக்கு வந்த பிட்டிரீடும் மன்னருடன் சில ஏற்பாடுகளுடன் வரவேண்டிய வசூலுடன் சென்னைக்குத் திரும்பினார். பச்சையப்பரும் தனது சாமர்த்தியத்தால் தஞ்சையில் வசூலாக வேண்டிய வசூல்களை வசூலித்தும் அனுப்பி வந்ததனால் கும்பினியாரிடம் நல்ல பெயரும் மதிப்பும் பெற்று வந்தார். ஆனால் சில ஆங்கிலேயர்கள் பொறாமையினால் தஞ்சையில் பச்சையப்பர் செய்து வரும் "லேவாதேவி" விஷயத்தைப் பற்றி சென்னையிலுள்ள மேலதிகாரிகளுக்கு ரகசிய அக்கப்போரையும் தூண்டிவிட்டனர். அதோடு பச்சையப்பர் தஞ்சையிலேயே தங்கி மன்னரையும், மக்களையும் வீணாகத் துன்புறுத்தித் தனது காரியங்களைச் சாதித்துக் கொள்கிறார், எனவே அவரை மீண்டும் சென்னைக்கே அழைத்துக் கொள்ள வேண்டும் எனப் பல புகார் மனுக்களையும் அனுப்பினர். இதனால் சென்னைக்கு வரவழைக்கப்பட்ட பச்சையப்பர் மீண்டும் 'ஜோஸப் ஸாலவன்" மகன் மற்றும் சிலரிடம் 'துபாஷி'யாகப் பணியாற்றினார். இச்சந்தர்ப்பத்தில் இவருடைய நேர்மையான குணத்தினால் கும்பினி அதிகாரிகளிடம் இவர்மீது கூறப்பட்ட அத்தனை மனுக்களும் வெறும் பொய் மனு என தெரிந்ததும் கும்பினியாருக்கு மீண்டும் பச்சையப்பர் மீது அபார நம்பிக்கை ஏற்பட்டது.

சென்னையில் தங்கி இருந்த பச்சையப்பருக்கு சிதம்பரத்தில் உள்ள ஸ்ரீ நடராஜ பெருமான் மீது அபார பக்தியினால் அக்கோயிலுக்குப் பல நன்கொடைகள் அளித்ததோடு, 1791 ஆம் ஆண்டு ஜூலையில் புதிய ரத உற்சவமும் ஆனித் திருமஞ்சனம் போன்ற உற்சவங்களையும் சிறப்பாக நடத்தினார்.

## வியாதியும் - விதியும்

"வியாதிகளின்
மேய்ச்சல் நிலமாய்
மேனி...
மாத்திரை
வடிவில்
விதி".



கவி இளங்கதிரவன்

பச்சையப்பருக்கும், அய்யம்மாளுக்கும் திருமணமாகி சுமார் 15 ஆண்டுகளாகியும் சந்ததி ஏற்படாததனால் உறவினர்களின் வற்புறுத்தலின் பேரில் பச்சையப்பருக்கு வேதாரண்யத்தைச் சேர்ந்த பழனியம்மாளை 2 ஆம் தாரமாக திருமணம் நடத்தி வைத்தனர். இத் திருமணத்தினால் பச்சையப்பருக்குத் திருப்தியோ, நிம்மதியோ ஏற்படவில்லை. இரு தாரங்களுக்குள் மனக்கசப்பு மேலிட அவர் தனது இரு மனைவிகளையும் தனித் தனியாக வசிக்க ஏற்பாடு செய்த போது, இரண்டாம் தாரமான பழனியம்மாளுக்கு ஒரு பெண் குழந்தை பிறந்து அதுவும் சில ஆண்டுகளுக்குள் இறந்து விட்டது.

குடும்ப வருத்தத்தில் மூழ்கி இருந்த பச்சையப்பரை கும்பினியார் மீண்டும் 1791 ஆம் ஆண்டு அக்டோபர் 7 ஆம் தேதி தஞ்சைக்கே சென்று தங்களுக்கு வரவேண்டிய வசூலை கவனிக்கும்படி பிரத்யேக அதிகாரங்களையும் அளித்தனர். தஞ்சைக்குச் சென்ற பச்சையப்பருக்குப் புகழும் பெயரும் எங்கும் ஏற்பட்டன. திடீரென பச்சையப்பருக்குப்பக்கவாத நோய் ஏற்பட்டு உடல்நலப் பாதிப்பு ஏற்பட்டது. தனக்கு அந்திம காலம் நெருங்குவதை அறிந்த பச்சையப்பர் தனது சம்பாத்தியம் அனைத்துமே தர்ம விஷயங்களுக்கே செலவழிக்க 1794 ஆம் ஆண்டு மார்ச் 22 இல் உயிர் (மரண சாஸனம்) எழுதி வைத்தார். பின்னர் ஓர் சத்திர விஷயமாக கும்பகோணம் சென்றவர் அடுத்து திருவையாறும் சென்றார். அங்கு அவரது உடல்நிலை மிக்க மோசம் அடைந்து உயில் எழுதிய 9 தினத்திற்குள் அதாவது 1794 ஆம் ஆண்டு மார்ச் 31 இல் "பெரும் கொடை வள்ளல்" எனப் புகழும் வள்ளல் பசசையப்ப முதலியார் தமது 40 ஆம் வயதில் இயற்கை எய்தினார்.

இவரது மறைவிற்குப் பின் அவரது இரு மனைவிமார்களும் தங்கள் கணவருடைய சொத்துக்களுக்கு உரிமை கொண்டாடினர். ஆனால் பச்சையப்பரின் உயிலில் குறிப்பிட்டிருந்த 'பவுனி' நாராயணபிள்ளையே வெற்றிப் பெற்றார். ஆனால் நாராயண பிள்ளை மரணத்திற்குப் பின் 1832 ஆம் ஆண்டு அக்டோபர் 30 இல் கோர்ட்டார் உத்தரவுப்படி 'தர்ம பரிபாலன சபை" ஒன்று அந்நாளைய அட்வகேட் ஜெனரல் ஜார்ஜ் நார்ட்டன் ஏற்படுத்தி அதன் மூலம் பச்சையப்பரின் ஆஸ்தியை தர்ம விஷயங்களுக்கும், கல்வி அபிவிருத்திக்காகவும் செலவழிக்க வேண்டுமென ஷரத்துக்களும் குறிப்பிட்டார்.

சென்னை எஸ்பிளனேட்டில் 1846 ஆம் ஆண்டு அக்டோபர் 6 ஆம் தேதி "பச்சையப்பன் மண்டப"த்திற்கு ஜார்ஜ் நார்ட்டனே அடிக்கல் நாட்டினார். அதுவே அந்நாளில் "பச்சையப்பன் கல்லூரி"யாகச் செயல்பட்டது. இப்போது பச்சையப்பன் பள்ளியாகப் புகழோடு சேவையைச் செவ்வனே செய்து வருகிறது. வள்ளல் பச்சையப்ப முதலியாரின் பெயரால் தமிழகத்தில் பல இடங்களில் கல்வி நிலையங்களும், கோயில் திருப்பணிகளுக்கான அறக்கட்டளைகளும் நடந்து வருகின்றன. தற்போது சென்னையிலுள்ள 'பச்சையப்பர் அறக்கட்டளையினரால்' அவை பரிபாலிக்கப்பட்டு வருகின்றன. மறைந்த கொடை வள்ளல் பச்சையப்ப முதலியாரின் 200 ஆவது நினைவு ஆண்டு தினத்தில் அவருடைய பெருமைகளை நினைவு கூர்ந்து அஞ்சலி செலுத்துவது தமிழர்களின் கடமையல்லவா!

# வாசக அன்பர்களின் சில ஐயப்பாடுகள் அவற்றின் விடை விளக்கங்கள்

"தமிழில் தவறுகளை அறிவோம்" - என்னும் தலைப்பில் அமுதசுரபியில் திங்கள்தோறும் வெளியாகும் கட்டுரைகளை, நேயர்கள் பலர் படித்துப் பயன் பெறுகிறார்கள் என்பது பெரு மகிழ்ச்சியைத் தருகிறது. நல்ல தமிழை அறிந்து கொள்வதில் நேயர்கள் கொண்டிருக்கும் ஆர்வத்தைக் காண இரட்டிப்பு மகிழ்ச்சி ஏற்படுகிறது.

எனது வீட்டு முகவரிக்கே நேயர்கள் பலர் கடிதங்கள் எழுதி ஐயத்தைத் தீர்த்துக் கொள்கிறார்கள். ('அவ்வை அகம்', 9, மூன்றாம் தெரு, பக்தவச்சலம் நகர், அடையாறு, சென்னை - 20). பலர் தொலைபேசி மூலம் (413267) தொடர்பு கொண்டு அறிந்து கொள்கிறார்கள். நேரில் சந்தித்தும் விளக்கம் பெறுகிறார்கள். இந்த நேயர்களின் உண்மையான தமிழ்ப்பற்று பாராட்டுக்குரியது. தமிழ்த்தாயின் நல்லாசி அவர்களுக்கு எப்போதும் உரியது.

நேயர்கள் தெளிவுபெற விரும்பும் ஐயங்களை இனி அமுதசுரபி இதழிலேயே விளக்கிவிடுவது' சாலச் சிறந்தது என்னும் நல்ல முடிவுக்கு வந்திருக்கிறார் 'இலக்கிய அமுதசுரபி' கலைமாமணி விக்கிரமன் அவர்கள். அது மிகுந்த பயன்தரக் கூடியது.

நேயர்கள் தெரிவித்திருக்கும் ஐயப்பாடுகள் சிலவற்றையும் அவற்றின் விடை விளக்கங்களையும் காண்போம் :-

ஐயம் : (1) "இந்தியா, இலங்கை ஒவ்வொன்றும் மூன்று ஓட்டங்கள் எடுத்தது". அரசியல் கட்சிகள் ஒவ்வொன்றும் 10,000 வாக்குகள் பெற்றது. அடுத்த வரியில் 'பெற்றனர்' என்று உள்ளது. மூன்று உதாரணங்களிலும் பன்மையாகவோ, ஒருமையாகவோ முடித்திருக்க வேண்டும். வேறு பாடிருக்கவே குழம்புகிறேன். விளக்கம் தேவை.

(மதன் கோபால், பம்பாய்)

விளக்கம் : இதழில் குறிப்பிட்டிருக்கும் மூன்று உதாரணங்களும் சரியானவையே. முதல் வாக்கியத்தில் எழுவாய் 'ஒவ்வொன்றும்' என்பது அல்லவா? எழுவாய் ஒருமையாயின் பயனிலையும் ஒருமையாகத்தானே இருத்தல் வேண்டும்? 'இந்தியா இலங்கை', அல்லது 'ஓட்டங்கள்' - என்பன எழுவாய் அல்ல. 'ஒவ்வொன்றும்' என்னும் சொல் இல்லாமல் 'இந்தியா, இலங்கை' என்று மட்டும் இருந்து இருந்தால் பயனிலையும் பன்மையில் 'எடுத்தனர்' என்று வரும். ஆங்கிலத்தில் 'each' என்பது ஒருமை singular அல்லவா?

அவ்வாறே, அடுத்து வரும் 'ஒவ்வொன்றும்' 10,000 வாக்குகள் 'பெற்றது' என்றுதானே வர வேண்டும்.

அடுத்த வரியில் உள்ள வாக்கியம் "கண்ணன், கந்தன் - ஒவ்வொருவரும் நூற்றுக்கு நூறு மதிப்பெண் 'பெற்றனர்' இதில் ஒவ்வொருவர் என்று மரியாதை ஒருமையில் வருவதால் 'பெற்றனர்' என்னும் - பயனிலைதானே வரவேண்டும்? ஒருவன் வந்தான், ஒருவர் வந்தார், 'ஒருவர் வந்தான்' என்பது சரியாகாது அல்லவா? வாக்கியத்தில் அமைந்துள்ள எழுவாயைக் கண்டு அதற்கேற்பப் பயனிலையைப் பயன்படுத்துதல் வேண்டும்.

ஐயம் : (2) 'அழைக்குநர்' என்பது சரியா? 'அழைப்புநர்' சரியா?

(பி. சண்முகவேல், மதுரை)

விளக்கம் : 'அழைக்குநர்' அழைப்புநர்' என்னும் சொற்கள் பெரும்பாலும் பயன்பாட்டில் இல்லை. இயக்குநர், விடுநர், பெறுநர், ஓட்டுநர் - முதலிய சொற்கள் தான் பெரும்பாலும் பயன்பாட்டில் உள்ளன. 'நர்' (ந்+அர்) என்பது வினைச்சொல்லை அடுத்துத்தான் வரும். பெயர்ச்சொல்லை ஒட்டி வராது. 'Invitee' என்னும் தமிழாக்கம் போலும் இது!

எ.டு : ஓட்டு+ந்+அர் = ஓட்டுநர்

இயக்கு+ந்+அர் = இயக்குநர் - பிறவும் இவ்வாறே.

இவ்விரண்டினுள் 'ஓட்டு' என்பதும் 'இயக்கு' என்பதும் வினைச் சொற்கள் 'ந்' என்பது இடைநிலை. அர் என்பது விகுதி. ஆகவே, 'அழைப்பு' என்னும் பெயர்ச் சொல்லை அடுத்து, 'நர்' (ந் அர்) வருதல் தவறு. வினையை அடுத்துதான் வரும். ஆதலின் அழைக்குநர் என்பதுதான் தக்கது.

ஐயம் : (3) வழுதலவ் குணம். திரு. அருணாசலம் என்னும் நண்பர். "இறவை மணிலா" (1) (நீர் இறைத்து பயன்படும் மணிலா) பொருளில் குறிப்பிடலாமா?

(2) இரந்து புசித்தல் (யாசித்து உண்ணுதல்) என்ற பொருளில் குறிப்பிடலாமா - சிறிது விளக்கம் தேவை' என்று கூறியுள்ளார்.

நேயர் கருத்தைப் புரிந்து கொள்ள முடியவில்லை. எதைக் குறிப்பிடுகிறார் என்பதே குழப்பமாக உள்ளது.

'இறவை' என்பது தமிழில் 'ஏணி' என்னும் பொருளையும் நீர் இறைப்பதற்குப் பயன்படுத்தும் கூடையையும் (சால்) குறிக்கும்.

'இரவு' என்றால் 'இராப் பொழுது', 'பிச்சை' என்னும் பொருள்களைக் குறிக்கும்.

'இரந்து புசித்தல்' என்றால் பிச்சை எடுத்துச் சாப்பிடுதல் என்று பொருள்படும்.

'இறவை மணிலா' இது உழவுத் தொழிலாளர் பயன்படுத்தும் தொடர் போலும்! அப்படியானால், 'நீரை, இறைக்கும் கூடையால் (சால்) மொண்டு வயலுக்குப் பாய்ச்சி அம்முறையில் விளையும் வேர்க்கடலைப் பயிர்வகையைக் குறிக்கும்.

ஐயம் : (4) அயன்புரம் நேயர் திரு கவிஞர் பிரபாகரன் ஒரு சிக்கலான ஐயத்தை எழுப்பியுள்ளார். அது 'கறுப்பு' - 'கருப்பு' பற்றியது.

கறுப்பு நிறத்தைக் குறிக்க (Black colour) இப்போது 'கறுப்பு' 'கருப்பு என்று இருவகையாவும் கூறுகின்றனர். இரண்டும் ஒரே பொருளைத் தருவதாக வழக்கில் கொண்டு வரப்பட்டுள்ளன. இது அவ்வளவு சரியன்று. 'கருமை'

என்றால் கறுப்பு நிறத்தைக் குறிக்கும் பண்புச் சொல். 'கருமை' என்னும் இச் சொல்லில் இறுதியெழுத்தும், இடையெழுத்தும் மாறியும் முதலெழுத்துத் திரிந்தும் கறுப்பு நிறத்தைக் குறிக்கும். இதற்குரிய நன்னூல் சூத்திரம் வருமாறு :-

"ஈறு போதல், இடை 'உ'கரம் 'இ' ஆதல்
ஆதி நீடல் அடி 'அ' கரம், 'ஐ' ஆதல்
தன்னொற்று இரட்டல் முன்னின்ற மெய்திரிதல்
இனமிகல் இணையவும் பண்பிற்கு இயல்பே".

இதன் தெளிவான விளக்கம் வேண்டுவோர் நன்னூல் 136ஆம் சூத்திரத்தினைப் படித்துத் தெரிந்து கொள்ளலாம்.

இந்தச் சூத்திரத்தின்படி 'கருமை' என்னும் சொல்லிலிருந்து 'கார்', கருவிழி, கருக்கல், கரிய, கருகரு, கரி, கருகு முதலிய சொற்கள் மாறித் தோன்றியுள்ளன.

'கருப்பு' என்னும் சொல் இப்போது கறுநிறத்தைக் குறிக்கப் பலராலும் பரவலாகப் பயன்படுத்தப்பட்டாலும், அது 'பஞ்சம்' 'இல்லாமை' 'ஏழ்மை' என்னும் பொருளில் வருவதுதான் தமிழ் முறைப்படி ஏற்புடையது.

இந்த உண்மையை நல்ல தமிழ் அறிஞர்களின் நூலிலும், தரமான தமிழ் அகராதிகளிலும் காணலாம். சில எடுத்துக் காட்டுகள் :

1. கருப்பு - பஞ்சம், தமிழ் லெக்ஸிகன் வால்யும் 2, பக்கம் 760.

2. கருப்பு - பஞ்சம், குறுவிலை காலம். கழகத்தமிழ் அகராதி கழகப் புலவர் குழுவினர் தொகுத்தது, பக் 285.

3. கருப்பு - குறுவிலைக்காலம். தற்காலத் தமிழ் சொல் அகராதி, திவான் பகதூர் எஸ். பவாநந்தம் பிள்ளை, பக்கம் 115.

1. கறுப்பு கருமை (Blackness, Darkness - தமிழ் லெக்ஸிகன், வால்யும் II பக்கம் 826.

2. கறுப்பு கருநிறம், கறை, சினம். கழகத் தமிழ் அகராதி. கழகப் புலவர் குழுவினர் தொகுத்தது, பக்கம் 306.

3. கறுப்பு கருமை நிறம், சினக் குறிப்பு... தற்காலத் தமிழ் சொல் அகராதி; திவான் பகதூர் எஸ். பவாநந்தம் பிள்ளை, பக்கம் 123.

எனவே 'கருப்பு என்னும் சொல் இப்போது கறுப்பு நிறத்தைக் குறிக்கச் சிலரால் வழங்கப்பட்டாலும் அது உண்மையில் 'பஞ்சம்' என்னும் பொருளைத் தான் குறிக்கும். ஆதலின் கருமை நிறத்தைக் குறிக்க 'கறுப்பு' என்னும் சொல்தான் சரியானது; முறையானது.



ஒரு திருத்தம் : இந்த ஜனவரி மாத இதழில் பக்கம் 76, இடப் பக்கம் பத்தி மூன்று வரி நான்கில் 'பண்டகசாலை' என்று அச்சிடப் பட்டுள்ளது. அது தவறு. அதனை 'பண்டசாலை' எனத் திருத்திக் கொள்ள வேண்டும்.

# இருளின் முகங்கள்!

வெட்ட வெளியினிலே - புது
வேதம் இருக்கிறது.
கொட்டிக் கிடக்கும் இருள் - "எங்கள்
கீதை" படிக்கிறது.

பட்ட மரத்தினிலே - பல
வசந்தம் உறங்கியது.
நட்ட நடுநிசியை - ஒளி
முட்டி உதைக்கிறது.
இலவங் கிளைகளிலே - பச்சைக்
கிளிகள் அகதிகளாம்
தளிர்க்கும் மாந்தோப்பில் - தமிழ்க்
குயில்கள் விருந்தினராம்.

தாரகைக் கூட்டமெல்லாம் - வானத்தின்
தங்கக் காசுகளாம்!
தாவிடும் கடல்அலைகள் - நீலத்
தண்ணீர்ப் பாடல்களாம்!
கூலிக்கு உழைப்பவரைப் - பாடும்
கொசுக்கள் தாலாட்டும்
ஏழைக்கு இருள்மெத்தை - அந்த
வீதிகள் விரித்து வைக்கும்.

கற்பனைக் கவிஞர்களின் - மனக்
கண்ணுக்கு ஒளிகொடுக்கும்
அம்பலம் பார்த்துவிட்டால் - இருள்
அடர்ந்து படர்ந்துவிடும்.
மின்மினிப் பொட்டுகளைத் - தங்கள்
கண்களில் வைத்தபடி
தோன்றும் இருள்முகங்கள் - ஒரு
தொடர்வண்டி போல் வளரும்.



# தமிழில் தவறுகளை அறிவோம்

## டாக்டர் தி. முத்து கண்ணப்பர்

இன்னும் சில சொற்களின் சரியான பொருள்களையும், விள்க்கங்களையும் பயன்படுத்தவேண்டிய முறைகளையும்கூடத் தெரிந்து கொள்வோம்:

**மற்றும்:** இச்சொல் அண்மைக்காலத்தில் ஆங்கிலச் சொல்லான 'AND' என்பதன் நேர் பொருள் தரும் சொல்லாக மிகப் பரவலாக வழங்கப்படுகிறது. 'AND' என்பதன் தமிழ்ப் பொருள் 'உம்' என்று கொண்டு வழங்கப் படுகிறது. இருசொற்களை, பொருள்களை, பெயர்களை, தொடர்களை இணைக்கும் சொல்லாக இந்த 'மற்றும்' என்னும் சொல் இப்போது வழக்கில் வந்துள்ளது.

இந்த 'மற்றும்' என்னும் சொல்லை 'உம்' என்னும் பொருளில் மனம்போன போக்கில் எழுத்தாளர்கள் பயன்படுத்தி வருகிறார்கள்.

'மற்றும்' என்பது 'மற்று+உம்' எனும் பகுபத மாகும்.

மற்றும் என்பதன் உண்மைப் பொருள்கள் 'மீண்டும்', 'பின்னும்', 'மேலும்', 'பிறவும்', 'மறுபடியும்' முதலியன. இதனை நன்கு புரிந்து கொள்ளாமல் தமிழ் 'உம்'மையைத் தூக்கி எறிந்துவிட்டு, அதற்குப் பதில் 'மற்றும்' என்னும் சொல்லையே பயன்படுத்துகிறார்கள். இந்த நிலையில் சென்றால் 'உம்'மே தமிழினின்றும் அழிக்கப்பட்டுவிடும். தமிழ் மரபு பாழ்படும்.

எந்தத் தமிழ்க்கா(வ)லர் இதை முதலில் புகுத்தினாரோ? யாம் அறியோம்!

'மற்றும்' என்னும் சொல் முறையற்ற வகையில் பயன்படுத்தப்பட்டுள்ள சில சொற்றொடர்களையும், அவற்றின் திருத்தங்களையும் கீழே காணலாம்:

1. பத்தாம் வகுப்பு **மற்றும்** திறந்தவெளிப் பல்கலைக்கழகத் தொடக்க நிலை வகுப்புகள்...

**தமிழ் முறைப்படி:**

பத்தாம் வகுப்பும் திறந்தவெளி (நிலை)ப் பல்கலைக்கழகத் தொடக்க நிலை வகுப்பு **களும்....**

2. அரசு ஊழியர்கள் **மற்றும்** ஆசிரியர்கள்

(த.மு) அரசு ஊழியர்களும் ஆசிரியர்களும்

3. அலுவலர்கள் **மற்றும்** ஆசிரியர்கள் கடுமையான தண்டனைக்கு ஆளாவார்கள்.

(த.மு.) அரசு ஊழியர்களும் ஆசிரியர்களும் கடுமையான தண்டனைக்கு ஆளாவார்கள்.

4. நூலகம் **மற்றும்** அறிவியல் பிரிவுகளைப் பார்வையிட்டனர்.

(த.மு.) நூலகத்தையும் அறிவியல் பிரிவு களையும்பார்வையிட்டனர்.

5. ஆங்கிலம் **மற்றும்** இந்தி நேர்முக வருணனை

(த.மு.) ஆங்கிலம், இந்தி நேர்முக வருணனைகள் இறுதியில்'கள்' விகுதி சேர்த்து விட்டால் சரியாகுமே.

6. சொத்து **மற்றும்** தனிநபர் வருமானம்

(த.மு.) சொத்தும் தனிநபர் (தனியார்) வருமானமும்

7. கண் மருத்துவம் **மற்றும்** ஆராய்ச்சி

(த.மு.) கண் மருத்துவமும் ஆராய்ச்சியும்

8. அரசு **மற்றும்** தனியார் நிறுவனங்கள்

(த.மு.) அரசு, தனியார் நிறுவனங்கள் ('கள்' சேர்த்தால் போதும்) அல்லது அரசு, தனியார் நிறுவனம் ஆகியன. ('ஆகியன' சேர்த்தால் அப்பொருள் தருமே!)

9. பாறை **மற்றும்** ஊற்றுகளிலிருந்து...

(த.மு) பாறையிலிருந்தும் ஊற்றுகளி லிருந்தும்...

அல்லது பாறை, ஊற்றுகள் ஆகியவற்றி லிருந்து...

10. வகுப்பு வாதம் **மற்றும்** பிரிவினைச் சக்திகள்

(த.மு) வகுப்புவாதமும் பிரிவினைச் சக்தி களும்

11. அமெரிக்கா, பிரிட்டன், **மற்றும்** ரஷ்யா

இத்தொடரில் 'ரஷ்யா'வுக்கு முன்னர் 'மற்றும்' ஏன்? இது ஆங்கில முறையைப் பின்பற்றப் பட்டது. (எ-டு) America, Britain and Russia ஆங்கில மரபுப்படி பல சொற்களை, பொருள்களை, பெயர்களைக் கூறும்போது இறுதிச் சொல்லுக்கு முன் 'and' போட வேண்டும். ஆனால், தமிழ்நடையில் இப்படி ஏன்?

(த.மு) அமெரிக்கா, பிரிட்டன், ரஷ்யா ஆகியன -போதுமே.

அமெரிக்காவும், பிரிட்டனும், ரஷ்யாவும் - என்று சொல்வதும் தமிழ் மரபே. மும்முறை 'உம்' போடவேண்டியிருக்கிறதே என்றால், அது தமிழ் மரபையே எதிர்ப்பதாகும். சுருக்கமாக, ஆனால் பொருள் சிதையாமல் மேலே குறிப்பிட்டுள்ளபடி இறுதியில் 'ஆகியன' என்னும் சொல்லைச் சேர்த்தால் போதுமே!

12. ஆளும் கட்சி மற்றும் ஆதரிக்கும் கட்சி

(த.மு) ஆளும் கட்சியும் ஆதரிக்கும் கட்சியும் அல்லது ஆளும் கட்சி, ஆதரிக்கும் கட்சி ஆகியன என்பதும் சரியே!

13. மத்திய அரசு மற்றும் உலக வங்கிகளும்

(த.மு) மத்திய அரசும் உலக வங்கிகளும் ... இப்படிப்பல.

இவையனைத்தும் நாளிதழ்கள், வார, மாத இதழ்கள், தொலைக்காட்சி வானொலிச் செய்திகள் முதலியவற்றினின்றும் திரட்டப்பட்டவை. இவை தமிழ் நடைக்கும் மரபுக்கும் ஒத்தன அல்ல.

ஒவ்வோர் மொழிக்கும் ஒவ்வோர் மரபு உண்டு. ஒரு மொழியின் மரபைப் பிறமொழி நடையில் ஏற்றுவது அல்லது புகுத்துவது தமிழ் நடையாக இராது. மு.வ. கூறுவதுபோல முடவன் மரக்கால் அல்லது செயற்கைக் கால் வைத்து நடப்பது போலாகும்!

மேலே குறிப்பிடப்பட்டுள்ள சொற்களை நன்கு சிந்தித்துப் பார்த்தால், 'மற்றும்' என்னும் சொல் தேவையற்ற வகையில் முரண்பாடாகப் பயன்படுத்தப்பட்டுள்ளது என்பது தெளிவாகும்.

**சிலவிடங்களில் :**

சிலவிடங்களில் வேண்டுமானால் 'மற்றும்' என்னும் சொல்லைப் பயன்படுத்தினால் அது ஓரளவு ஏற்கத்தக்கதாகக் கருதக்கூடும்.

ஒருவர் இருபதவிகளை மேற்கொண்டிருக்கிறார். அதை ஆங்கிலத்தில் 'and' என்னும் சொல் போட்டுக் குறிப்பார்கள்.

(எ-டு) Mr.K.S. Manikkam,
Secretary and Commissioner

இதனை வேண்டுமானால் 'மற்றும்' இடையில் சேர்த்துத் தமிழில் எழுதலாம்.

(எ-டு) திரு. க.ச. மாணிக்கம்
'செயலர் மற்றும் ஆணையர்'

ஏன்? இத்தகைய தொடர்களில்கூட 'மற்றும்' சேர்ப்பதை விடுத்துக் கீற்றுக் கோடிட்டு எழுதினால் பொருள் சிதையாதே!

'செயலரும்-ஆணையரும்' அன்று எழுதினால்கூட உரிய பொருள் தருமே.

(எ-டு) திரு. க.சு. மாணிக்கம்,
செயலரும் ஆணையரும்

செயலரும் ஆணையருமாகப் பதவி வகிக்கும் திரு. க.சு. மாணிக்கம் என்னும் பொருள் தெளிவாகத்தானே உள்ளது?

இவ்வாறு தமிழ் மரபை ஒட்டி எழுதுவதையும் பேசுவதையும் விடுத்து 'மற்றும்' என்னும் ('உம்' என்னும் பொருளை உரியவாறு தராத சொல்லைத் தவறாகப் பயன்படுத்தல் தமிழ்த் தாயின் கொலை; தமிழ் மரபுக்குப் பேரிழுக்கு; மரபுக்கு அழிவு. இதனை நல்ல தமிழ் அன்பர்கள் நினைவில் கொள்ளவேண்டும்.

சிலவிடங்களில், 'உம்'முக்குப் பதிலாக (இப்போது 'மற்றும்' என்று எழுதுமிடங்களில்) வரும் சொற்கள் அல்லது பெயர்களின் இறுதியில் பன்மையைக் காட்டும் 'கள்' விகுதியைச் சேர்த்தாலே உரிய பொருள் தரும்.

(எ-டு) : (1) மரம், செடி, கொடிகள்
(மரமும், செடியும், கொடியும் - என்னும் பொருள்படும்)

(2) சேர, சோழ, பாண்டியர்
(சேரனும், சோழனும், பாண்டியனும் என்னும் பொருள் தருவது)

சிலவிடங்களில் 'ஆகிய' என்னும் சொல்லைச் சேர்த்தாலும் 'உம்'முக்குரிய பொருள் வரும்.

(எ-டு) : கண்ணன், கந்தன், முருகன் ஆகியோர் வந்தனர்.
(கண்ணனும், கந்தனும், முருகனும் வந்தனர்)

இதுதான் தமிழ் மரபு.

இவ்வாறு எழுதுதலை விடுத்து, 'மரம், செடி மற்றும் கொடி' என்றும், 'சேரன், சோழன் மற்றும் பாண்டியன்' என்றும் 'கண்ணன், கந்தன் மற்றும் முருகன்' என்றும் எழுதுவது தவறானது; மரபுக்கு மாறானது.

இதனை நன்கு உணர்ந்து, 'மீண்டும்', 'பின்னரும்', 'பின்னும்', 'மேலும்', 'பிறவும், 'மறுபடியும்' முதலிய பொருள்களைத் தரும் 'மற்றும்' என்னும் சொல்லை விலக்கித் தமிழ் மரபைக் காப்போமாக!

ஃ

## அமரர் சின்னி கிருஷ்ணன் நினைவுச் சிறுகதைப் போட்டியில் பரிசு பெற்ற சிறுகதை

# முகத்தைத் தொலைத்தவன்

நளினி சாஸ்திரி

இப்போதெல்லாம் அவன் அப்பாவுக்கே, அவன் அந்நியமாகிப் போனான். பேச்சு வார்த்தை அடியோடு நிற்கவில்லை. பேச்சைவிட மௌனம் அர்த்தமுள்ளதாகிவிட்டது. அப்பாவிடமிருந்து, பொறுக்கின வார்த்தைகள் அளவாய் வரும். ஆறுதல் தரும். பார்வை பாசத்துடன் தடவிக் கொடுக்கும்.

"நீ வேலைக்குப் போய்த்தான் குடும்ப வண்டி ஓடணும்னு இல்லே. மனசைக் கசக்கிக்காதே," என்பார். ஆனால் இந்த ஆறுதல் வார்த்தைகள் அடியாய் அவன் மனத்தில் இறங்கும்.

வழக்கம் போல் மொட்டை மாடியில் தரையின் ஜில்லிப்பு உடலில் இறங்க, வானத்தில் இல்லாத எதையோ தேடிக் கொண்டிருந்தான்.

நிலா.

ஆதரவாய்ச் சுற்றிலும் நட்சத்திரங்கள். கதைகள் பேசிக் கொண்டு, கண்சிமிட்டிக் கண்ணாமூச்சி விளையாடிக் கொண்டு, சந்தோஷமாய்...

திடீரென்று நட்சத்திரங்கள் ஒவ்வொன்றாய் மறைவது போலத் தோன்றியன.

ஒவ்வொன்றாய்...

பிறகு, எல்லாமாய்...

இப்போது வானத்தில் எஞ்சி நிற்பது நிலா மட்டும்;

அவ்வளவு பெரிய அண்டத்தில் துணையின்றி நிலா மட்டும்;

துக்கங்களைப் பகிர்ந்து கொள்ளத் துணையின்றி நிலா மட்டும்;

நிலவின் பேரில் அவனுக்குப் பரிதாபம் ஏற்பட்டது.

அப்படியே கரைந்து போய் நிலவுக்குள் ஒன்றினான்.

எல்லாரும் தன்னை விட்டு விலகிப்போய்த் தான் மட்டும் தனியாய்,

நிலா மாதிரி -

இப்போது அவனுக்கு அவன மேலேயே பரிதாபம் ஏற்பட்டது.

எந்த இடத்தில் தப்பான நகர்த்தல், தன் விஷயத்தில் நிகழ்ந்ததென்று தேடித் தேடி அலுத்துவிட்டது. என்ஜினியரிங் படித்தது தவறா? முதல் வகுப்பில் தேறியது தவறா? அவனைத் தவிர அத்தனைப் பேரும் வாகான வேலையில் நுழைந்து விட்டார்கள். நுழைத்துக் கொள்கிறார்கள்.

அவனால் மட்டும் தன்னை மாற்றிக் கொள்ள முடியவில்லை. நேர்மை, சத்யம், தர்மம் போன்றவற்றைச் சாதாரணமாகக் கழற்றி எறிய மனம் இணங்குவதில்லை. சிபாரிசு என்ற பேரில் சக இளைஞனின் வேலையைப் பகல் கொள்ளையடிக்கும் கொடூர எண்ணம் உடன்பாடில்லை.

இந்தச் சமயத்தில் அப்பா சத்தம் போடாமல் மாடி ஏறி வந்தார். அவரைத் தவிர்க்கும் பொருட்டு, கண்களை மூடிப் பாசாங்காய்த் தூங்கினான். அப்பா அவன் அருகில் அமர்ந்தார். தூக்கத்தில் அவனை எழுப்புவதா என்று தயங்கினார். வாஞ்சையுடன் பார்த்தார். தயக்கத்துடன் அவன் தலையைத் தொட்டு லேசாக, வருடினார். இந்தப் பொய்யில்லாத பாசம் விழித்துத் தூங்கிய அவனைச் சங்கடப்படுத்தியது.

தனக்கு ஒரு வேலை இல்லாததால்தான் இவர்கள் நம்மேல் பரிதாபப்படுகிறார்கள் என்ற நினைப்பில் உள்ளே உடைந்தான். மௌனப் பேரிரைச்சல் தாங்காமல் மனக் கதவுகள அடித்துக கொண்டன. மனம் மென்மையாக இளகி, அழுதுவிடுவோமோ என்ற கட்டத்தில் கட்டுப்படுத்திக் கொண்டான். ஏதாவது வேலை விஷயமாகத்தான் வந்திருப்பார் என்ற எண்ணத்தில் இயல்பாய் அசைந்து தூக்கம் கலைந்தான்.

"தம்பி, இன்னிக்கு மெட்ராஸிலேருந்து கல்யாணராமன் வந்திருந்தான். உனக்குத் தெரியும், அவன் என்னோட பால்ய நண்பன்..."

அவன் தொடரக் கொஞ்சம் அவகாசம் தந்தார். அவன் தொடர்வதாக இல்லை. இருந்தாலும் அப்பாவைச் சங்கடப் படுத்தக் கூடாதென்று, "ஓஹோ," என்றான்.

"அவன் இப்ப ஜி.எம்.மாகி விட்டான்". அவரின் ஆச்சரியம் அவனுக்கு அபத்தமாகப்பட்டது.

"ம்".

"நீ என்ன பண்றேன்னு கேட்டான். அவங்க கம்பெனில ஒரு எலக்ட்ரானிக் என்ஜினியர் வேணுமாம். உன்னை அப்ளை பண்ணச் சொன்னான். இதோ பார்டா, ஃபிரெண்ட் பையங்கறதால, நீ வேலை தந்தா அது வேண்டாம்னேன். அப்படியில்ல அவன் திறமைக்காக வேலை தரேன்னான். இந்தக் காலத்ல எவ்வளவு நல்லவர்கள் பார்".

தான் சொல்ல நினைத்ததை ஒருவழியாக அவனுக்குத் தகுந்தாற்போல சொல்லிவிட்டதில் அவருக்கு வியர்த்தது. எங்கு ஆரம்பித்தாலும் கடைசியில் இங்குதான் வந்து நிற்பார். அவன் பேசாமல் இருந்தான்.

திறமையுடன் எவ்வளவோ பேர் இருக்கையில் தான் மட்டும் எல்லா

ரையும் அமுக்கி விட்டு மேலே போவது என்ன நியாயம்?

இது பெரிய தேசத் துரோக மில்லையா?

வேலை கொடுன்னு சிபாரிசு கொடுப்பது பிச்சையில்லை?

படிக்கப் பிச்சை கேட்கலாம்.

வேலைக்கா கேட்பது?

அவன் மௌனத்தைச் சம்ம தித்துக் கொண்ட அவர், "அப்ப நாளக்கி போலாமா?" என்று ஆர்வத்துடன் அவனைத் தன்னுடன் இழுக்கப் பார்த்தார்.

"சாரிப்பா! என் படிப்புக்காக அவர் வேலை தந்தாலும் உங்க ளுக்காகத்தான் தந்தார்ங்கற குற்ற உணர்ச்சி எனக்கு உறுத்திக் கொண்டே இருக்கும். வாழ்நாள் பூரா அதைச் சகிச்சுக்கற மனசு எனக்கில்லை. இனியும் எனக் காகச் சிபாரிசுக்குப் போய் நிற்கா தீங்க, ப்ளீஸ்."

இப்படியே அரைமணி நேரம் இருவரும் மௌனமாக உட்கார்ந் திருந்தார்கள். அப்பாவாவது உள்ளே போய்ப் படுக்கட்டு மென்று கீழே அப்படியேச் சாய்ந்து மறுபடி பாசாங்குத் தூக் கத்தைப் போர்த்திக் கொண்டான். பத்து நிமிடம் பார்த்த அவர் அவன் அப்படியேத் தூங்கி விட் டான் என்று நினைத்துத் திரும்ப அவன் தலையைப் பாசத்துடன் வருடிவிட்டு எழுந்து போனார். மேலே நட்சத்திரங்கள் கண்சிமிட் டிக் கொண்டிருந்தன.

இன்னும் மூன்று நாள்களில் மன்னிக்குச் சீமந்தம். வீடே சந் தோஷக் களை. இப்போதே ஒட் டின உறவுகள் சில வர ஆரம் பித்துவிட்டன. ஒவ்வொருவரும் தனக்காக 'அச்சச்சோ' சொல்லி வேலைக்கு அவரைப் பாரேன், இவரைப் பாரேன், உவரைப் பாரேன்னு அறிவுரை கூறுவதை எதிர்கொள்ளத் திராணியின்றி அந்தக் கூட்டத்திலிருந்து தப்பிக்க நினைத்தான். இல்லாத நண்ப னுக்குக் கல்யாணம் என்ற சாக்கில் சென்னைக்குத் தப்பி ஓடிவிடத் தீர்மானித்தான். தன் மனசின் போக்கை நினைத்து வருத்தப் படத்தான் அவனால் முடிந்தது.

'போன வருஷம் இந்த வேளையில் எவ்வளவு சந்தோஷமாக இருந் தோம்'.

அப்போது அவன் என்ஜினி யரிங் கடைசி செமஸ்டர். தன்





சிறுகதை

ஒரே அன்பு அண்ணன் நாராயண ஸ்வாமிக்கும் மன்னி பத்மாவுக்கும் பெரியோர்களால் நிச்சயிக்கப்பட்ட விவாகத்துக்காகக் காலில் சக்கரம் கட்டிக் கொண்டுதான் சுழன்றான்.

"இவர் பொண்ணோட பெரியப்பா சுப்ரமணியம். பெரிய சங்கீத விமர்சகர். இவன் என்னோட ரெண்டாவது பிள்ளை. பி. எஸ்.ஜில என்ஜினியரிங் ஃபைனல் பண்றான்."

கேட்கையில் மனம் குளிர்ந்து போகும்.

"மீட் மிஸ்டர் ராம்நாத். பொண்ணோட சகோதரர். இது மாப்பிள்ளையின் தம்பி பி.ஈ. ஃபைனல்."

கேட்கையில் மனம் மிதந்து போகும்.

"இங்க வாடா அம்பி. இவன்தான் ராமமூர்த்தியோட ரெண்டாவது பிள்ளை. என்ஜினியர்".

"என்ஜினியரா? அப்ப நம்ப ரமாவுக்குப் பார்க்கலாமே. அவா கூட என்ஜினியர் மாப்பிள்ளையத் தான் தேடிண்டிருக்கா. நீங்க என்ன கோத்ரம்?"

கேட்கையில் மனம் உருகிப் போகும்.

"நீங்க என்ன பண்றீங்க" என்ற போதையான கேள்விக்கு "என்ஜினியரிங் படிக்கிறேன்" என்ற பெருமையான பதில் சொல்ல முடிந்ததற்காக அவன் பூரித்துப் போயிருக்கிறான்.

எல்லாம், எல்லாம் போன வருடத்தோடு சரி. தற்சமயம் நிலைமை தலைகீழ். எந்தக் கேள்விகள் சந்தோஷப்படுத்தினவோ அதே கேள்விகள் இப்போது பயமுறுத்தும் அதிசயம் நடக்கிறது. எதிர்கொள்ள மனம் தயங்குகிறது. துவள்கிறது. தவிக்கிறது. மனசுக்குள் ஓயாத, மௌனப் பேரிரைச்சல். சீமந்தத்துக்கு வீட்டிலிருக்காமல் பொய் சொல்லி சென்னை ஓடுமளவு மனம் நொந்து விட்டது.

"ரேவதி, அண்ணாவைத் தொந்தரவு பண்ணாதே. ஏதோ, அப்ளிகேஷன் எழுதறான் இல்ல," என்ற அப்பாவின் குரல் ரணப்படுத்தியது.

'எல்லாரும், எல்லாரும் ஏன் என்னை மட்டும் கவனிக்கிறீர்கள்? பரிதாபப்படுகிறீர்கள்?' இந்தப் பச்சாதாபமும், பரிவுகளும் அவனை இம்சைப்படுத்தின. பேசாமல் யாராவது தன்னைத் திட்ட மாட்டார்களா என்று அவன் ஏங்கினான்.

"தடிமாடாட்டம் இருக்கியே, ஒரு வேலை தேடத் துப்பில்லை, தண்டச்சோறு" இப்படி ஒரு திட்டலை அப்பா வீசினால் ஒரு வேளை இதமாக இருக்கும் போல இருந்தது.

"சும்மாதானே குப்பை கொட்டிண்டு ஒக்காந்திருக்கே. எனக்கு இந்த ஹோம் வொர்க் பண்ணிக்



கொடேன்." என்று ரேவதி உரிமையுடன் கடிந்தால் சுகமாக இருக்கும் போலத் தோன்றியது.

சுறுசுறுப்பான மெட்ராஸின் அந்த ஹோட்டலில் நிம்மதியாகத் தங்கி, பகலில் தூங்கி மாலையில் கடற்கரையில் தனிமையாக அமர்ந்து பொங்கிவரும் கடலலையைப் பார்த்துக் கொண்டிருந்தாலே வாழ்க்கை ஓடிவிடும் போல இருந்தது.

அலைகள் கரைக்கு எதையோ தேடிவந்து பின் பின்னுக்கு ஓடித் திரும்பத் தேடி வந்து அலுக்காமல் இது எப்படி சாத்தியமாகிறது? அலை போனாலும் மணல் சீராகி உப்புநீர் நுரையால் வெண்மையாகி, நுரையடங்கி, திரும்ப அலை வந்து... தன்னைப் போலவே முடிவற்ற தேடலாய்...

அன்று ஹோட்டலில் பக்கத்து மேஜையில் சாப்பிட்ட இளைஞர்களின் பேச்சு அவன் கவனத்தைக் கவர்ந்தது.

"என்னடா படம்! பாரதி பித்தனாம்! சிபாரிசில வேலை வேணாமாம். இந்தக் காலத்ல உருப்படுவானா? கனாலகூட சிபாரிசில்லாம வேலை கிடைக்காது. ஆனா கமல் நல்லா பண்ணியிருக்கான். பாரத் பட்டம் இன்னொருவாட்டி தாராளமாகக் கொடுக்கலாம்."

"சிபாரிசில என்ன மக்கா, தப்பு? சிபாரிசு சிபாரிசே இல்ல. அதுவும் ஒரு குவாலிஃபிகேஷன். அப்ளிகேஷன் பாரத்திலே, ரெகமண்டேஷனுக்காகத் தனி காலம் தரணும்."

இவன் கொஞ்சம் வேறு கோணத்தில் சிந்திக்க ஆரம்பித்தான். இண்டர்வியூ எல்லாம் நன்றாகத்தான் செய்கிறான். இதுவரை யாரும் சிலுக்கின் அளவென்ன, தமிழகப் பிரதமர் யார்? போன்ற அபத்தக் கேள்விகள் கேட்டதில்லை. இவனும் அதிகப் பிரசங்கியாக பதில் சொன்னதில்லை. இருந்தும் ஏதோ குறைகிறது. அதுதான் சிபாரிசோ? அதில்லாம ஒன்றும் நடக்காதோ?

சிபாரிசு மூலம் வேலை வாங்கினா ஒரு திறமையானவனுக்கு 'சான்ஸ்' போகும் என்ற காரணத்தால்தானே வெறுக்கிறேன். நான் முயற்சி பண்ணாததால் அந்த திறமைக்காரன் வேலையை அடையவாப் போகிறான்? வேறொரு சிபாரிசுக்காரன் அல்லவா வேலையைத் தட்டிப் போவான். இதில் நடுவே எனக்கு இந்த வறட்டுக் கௌரவம் எதற்கு? நான் வீணாய்ப் பிடிவாம் பிடிக்கிறேனோ? மனத்தில் லேசாய் மின்னல்.

சாப்பிட்டு வெளியே வந்து அந்தப் பெட்டிக் கடையில் பழம் வாங்கினான். எம்ப்ளாய்மெண்ட் நியூஸ் கடையில் தொங்கியது. ஒன்று வாங்கினான். உடனே ஊரின் பெட்டிக்கடைக்கார ராஜேந்திரன் நினைவு வந்தது. அவனாய் இருந்தால் நான் கேட்காமல் எடுத்துத் தந்திருப்பான். இரண்டு மூன்று தடவை எம்ப்ளாய்மெண்ட் நியூஸ் வாங்கினதும் பழகிக் கொண்ட ராஜேந்திரன் புதன்கிழமை மாலை என்னைக் கண்டதும் தயாராய் எடுத்துத் தந்துவிடுவான். ஒருமுறை அவனை ஏமாற்றணும். வேலை கிடைத்ததும் கடைக்குப் போகையில் எம்ப்ளாய்மெண்ட் நியூஸ் தந்தால், "சாரி வேண்டாம்"கணும். "ஏன் சார்" என்பான். "எனக்கு வேலை கிடைச்சாச்சு"ன்னு சொல்லணும்.

ஊருக்குத் திரும்பிய அன்று புதன்கிழமை. வழியில் கடைக்கார ராஜேந்திரன் எதிர்ப்பட்டான்.

"என்ன சார் சௌக்யமா? வேலை கெடச்சிட்டாப்பல இருக்கே? ஸ்வீட் எங்கே சார்?"

"என்ன ராஜேந்திரா திடீர்னு கேக்கறே?"

"அதான் போன வாரம் எம்ப்ளாய்மெண்ட் நியூஸ் வாங்கலியே சார். அதிலிருந்து நானே யூகிச்சேன்."

'ஊருக்குப் போனதாலே அங்க வாங்கிட்டேன்".

"அப்படியா ரொம்ப சாரி சார்."

இந்த சாரியில் இவன் மிகவும் சரிந்தான். இனியும் மனம் தாங்காது. தான் மட்டும் ஒற்றாளாய்ச் சிபாரிசுக் கடலை எதிர்த்து நீந்த முடியாது. வேலை வேண்டும். தனக்காக இல்லாட்டாலும் பிறருக்காகவாவது. மற்றவர்களிடமிருந்து தப்பிக்கவாவது.

எதிரில் தென்பட்ட யாரோவிடம், "ஐயம் வெரி சாரி" என்றான்.

அவன் அப்பாவிடம் சொல்லி, அவர் கல்யாணராமனிடம் எஸ்.டி.டி. பேசி, கலியாணராமன் நாகராஜனிடம் சொல்ல அவர் ஃபைல்களில் விளையாடி அதன் விளைவாய் அவன் இன்று இதோ இப்போது இந்த நிமிடம் முதல் நாளாக வேலையில் சேரப் போய்க் கொண்டிருக்கிறான்.

நியாயம்தானா? இது யாருடைய வேலையோ? அவனும் என்னைப் போல ஒருவனா? பகல் கொள்ளையல்லவா? மட்டமான பிச்சையல்லவா? ஊருக்குத்தான் உபதேசமா? உனக்கே நியாயமா?

வழியில் தென்பட்ட யாரோவை நிறுத்தி,

"குப்புசாமி மன்னிச்சுடுப்பா, வேற வழி தெரியலே" என்கிறான். திருப்தியுறாமல் திரும்ப யாரோவிடம்.

"மார்ஷல் இது உன் வேலையா, இல்லைதானே, என்கிறான் திருப்தியுறாமல் திரும்ப யாரோவிடம்,

"இரவிச்சந்திரா நான் ஒண்ணும் தப்பு பண்ணலை. இதிலென்ன தப்பு?" என்கிறான். திருப்தியுறாமல் திரும்ப, யாரோவிடம்,

"கணேசா! நான் பழனிச்சாமி வேலய அடிச்சிப் பிடிங்கிட்டேன். தப்புதாண்டா, " என்கிறான்.

திடீரென்று தெருவில் போன ஒருவன், "டேய் பாவி. என் வேலைடா இது பிடுங்கிட்டயே, கொடு " என்று இவனைத் துரத்துவது போலிருந்தது.

பிறகு இன்னொருவன் துரத்துவது போல.

பிறகு இன்னும் ஒருவன்.

இப்போது தெருவில் ஒரு பட்டாளமே, அவனைத் துரத்துவது போல் உணர்ந்து பயந்து தலை தெறிக்க ஓடலானான்.

அவன் கண்விழித்தபோது இருந்த இடம் சுத்தமாகத் தெரியவில்லை. கட்டிலில் படுத்திருக்கச் சுற்றிலும் இளைஞர்கள் நான்கு பேர்.

## கவிதையும் கழுதையும்

### பெண்ணே நீ கவிதை

மகளானாய் எனக்கினிய மனையானாய் வந்த
மருமகளாய் அவளுக்கு மாமியாரும் ஆனாய்!
அகலானாய் வீட்டுக்கே! அக்காளாய் தங்கை
அண்ணியுமாய் ஒருமுறையில் நாத்தியுமாய் ஆனாய்!
பகலான பெண்ணே நீ பதமாக எவனும்
படைக்காத படைத்தாலும் முடிக்காத கவிதை!

### குழந்தாய் நீ கவிதை

சித்திரமே சிரிக்கின்ற விசித்திரமே பேசும்
தேன்மலரே உன்பேச்சு தேன்சுவைக்கே வண்ணம்!
மெத்தைகளாம் மேகங்களில் தத்திவரும் நிலவே!
மென்மைக்கும் பெண்மைக்கும் மேலெனும்நல் லழகே!
புத்தகத்தில் படிக்காத புதுச்சுவைகள் எல்லாம்
பொதிந்துவரும் தவழ்ந்துவரும் புத்தகமே! எந்த
வித்தகனும் சொல்லாத தத்துவமே! உலகில்
விலைவைக்க முடியாத குழந்தாய்நீ கவிதை!

### குழந்தைதான் கவிதை

இருக்கின்ற பொருளிலெலாம் இருக்கிறது! சந்தம்
எடுத்துவைக்கும் திறமையிலே நடக்கிறது கவிதை!
சிரிக்கின்ற பெண்ணழகு சிறந்ததொரு கவிதை!
சின்னஞ்சிறு குழந்தையுமோர் சிரிக்கின்ற கவிதை!
சிறக்கின்ற பெண்களுக்குள் திசைமாறும் அறிவை
சிறுமைகளால் திருமறைந்து பெயர்மாறும் கழுதை!
பிறக்கின்ற பிழைவென்ற எனைவென்ற குழந்தை
பிறக்காத எவனுமின்னும் வடிக்காத கவிதை!

— கரு. திருவரசு

முண்டா பனியனில் தண்டால் செய்தான் ஒருவன். ஆவி பறக்க பாத்திரத்தில் எதையோ கலக்கிக் கொண்டிருந்தான் மற்றவன். சுமார் முப்பது வாரப் புத்தகங் களைப் பேர் வாரியாக பேப்பரில் எழுதிக் கொண்டிருந்தான் தாடி இளைஞன்.

"விழித்து விட்டாயா நண்பா, பயப்படாதே. தெருவில் மயங்கி விழுந்த உன்னை நான்தான் இங்கு அழைத்து வந்தேன்."

புரியாமல் விழிக்க,

"திடீரென்று கையிலிருந்த காகிதங்களைப் பறக்கவிட்டு ஓடி னாய். விழுந்தாய். உன்னை மட் டும் கொண்டு வர முடிந்தது. காகிதங்கள் கிடைக்கவில்லை."

"அவை என் என்ஜினியரிங் பட் டங்கள். ஒரு வருடமாய் வேலை யில்லை."

"ஹஹ்ஹா! மயிலிறகு குட்டி போடாது. பட்டம் வேலை போடும் பாத்திரமல்ல. உலகை உணர்த்தும் கண்ணாடி. வேலை இல்லை என்பவன் சோம்பேறி. சுற்றும் வரை உலகம். போராடும் வரை மனிதன். நீ மனிதன்! வீட் டுக்கு வெளியே பார். எத்தனை வேலைகள்."

"மீட் மிஸ்டர் ஜான் பிரிட்டோ எம்.ஏ. (லிட்ரேச்சர்) இன்றைக்கு இவன் வேலை பீச்சில் சுண்டல் விற்பது. தாடி லெண்டிங் லைப் ரரி. நூறு வீட்டுக்குப் பத்திரிகை விநியோகம் செய்கிறான். பி.காம். பட்டதாரி நான் ராஜேந்திரன். மனிதர்களைப் படிப்பதற்காக ஆவின் பூத்தில் பால் விற்கிறேன். போன வாரம் வரைக்கும் எங்க ளுடன் இருந்த ஒரு 'நடமாடும் இஸ்திரி' கவனித்தவன், டில்லில வேல கிடச்சுப் போயிட்டான். அந்த போஸ்ட்கூட வேகன்ட் தான்.."

"உழைப்புதான் முக்கியம். முயற்சியில் இறங்கினால் காலடி யில் வேலை கதறி வரும். ஏற்றத் தாழ்வு இதில் இல்லை. நாங்கள் வாராவாரம் வேலை மாறுவோம். அடுத்தவாரம் நான் சுண்டல். அவன் பால். வாழ்க்கை என்பது ரணங்களையும் சேர்த்துத்தான். உனக்குத் தெரியுமா, எங்கள் மாத வருமானம் ஆறாயிரம் ரூபாய்." என்றான் இம்ரான்.

"யோசி. முதலில் உனக்குத் தேவை ஓய்வு. சாப்பிடு நண் பனே. கதவைச் சாத்திக்கொள். பயப்படாதே. உலகம் கைவிடாது யாரையும். என்ஜினியர் என்கிறாய். வாய்ப்பு அதிகம். பாங்க் லோன் போடலாம். ஸ்டார் டி.வி. அமைக்கலாம். ஆயிரம் வழிகள் இருக்கு. நம்பிக்கைதான் அஸ்தி வாரம். யோசி. " என்ற பிரிட்டோ, அவனிடம் அறைச் சாவியைத் தர அவர்கள் வெளியேறினார்கள்.

தூக்கம் தந்த ஓய்வில் அவ னுக்கு அலுப்பு இல்லாமலிருந்தது. எழுந்தவன் இடுப்பில் லுங்கி. யாருடையதோ தெரியவில்லை. அவன் இதுவரை லுங்கி கட்டின தில்லை. சுற்றிலும் பார்த்தான்.

பெரிய அறையின் ஒரு மூலை யில் புல் வொர்க்கரும் கர்லாக் கட்டையும், கேஸ் அடுப்பில் அவ னுக்காகக் காத்திருந்த உப்புமா. சுவரில் ஒருபுறம் பிள்ளையார் பட்டி விநாயகர் படம். அருகில் 'இயேசு உன்னை நேசிக்கிறார்' ஸ்டிக்கர். ஜன்னல் டு ஜன்னல் நைலான் கொடியில் ஹேங்காில் தொங்கின உடைகள்.

எதிர்ப்புறச் சுவரில் 'வானமே எல்லை' என்று ஸ்டிக்கரில் பள பளத்த வாசகம். கீழிருந்த மேஜை யில் 'டு இன் ஒன்'. மேஜையின் பக்கத்தில் மூன்று சூட்கேஸ்கள்.

மேஜையின் அடியில்...

துணிகளின் இடையில்...

தூசு படிந்து...

முடிவுக்கு வந்தவன் குனிந்து மேஜையிலிருந்து எடுத்து கைக ளால் எடுத்து, கண்களில் ஒற்றிக் கொண்டான்.

புதிய நம்பிக்கையுடன் துணி யெடுத்துத் தூசு தட்டித் துடைக்க அந்த இஸ்திரிப் பெட்டியில் அவன் முகம் பிரதிபலிக்க ஆரம் பித்தது.

## ஸ்ரீராம் டிரஸ்ட் வெளியீடுகள்

145 லிங்கச் செட்டி தெரு, த.பெ.எண். 5043, சென்னை - 600 001




**சந்தனச் சிமிழ் - வசுமதி ராமசாமி - விலை: ரூ.25.00**

சுமார் அறுபது ஆண்டுகளாகச் சிறந்த சிறுகதைகள் படைத்து வரும் திருமதி வசுமதி ராமசாமி எழுதி மணம் வீசும் 12 சிறுகதைகளின் தொகுப்பு. சமூகத்தின் பல்வேறு கோணங்களைப் பிரதிபலிக்கும் நூல்.



**கோலத்தில் சிக்கிய புள்ளிகள் - வேதா கோபாலன் - விலை ரூ.30.00**

'அமுதசுரபி' - சுஜாதா பிலிம்ஸ் லிட் இணைந்து நடத்திய இலக்கியப் போட்டியில் ரூ.5000 பரிசு பெற்ற நாவல். திருமதி வேதா கோபாலன் எழுதிய முதல் தொடரும், நாவலும் இதுதான். கவியரசு வைரமுத்து, நாலுக்குச் சிறப்புரை வழங்கியுள்ளார்.




**பாரதியும் புஷ்கினும் - கமலா பத்மகிரீஸ்வரன் - விலை ரூ.16.00**

அமுதசுரபி - சுஜாதா பிலிம்ஸ் லிட் இணைந்து நடத்திய 1991 -ஆம் ஆண்டில் வந்த, பாரதி இலக்கியப் போட்டியில் ரூ.5000 பரிசு பெற்ற நூல். ருஷ்யக் கவிஞர் புஷ்கினை நாம் அறியச் செய்கிறார் ஆசிரியர். முன்னுரை வழங்கியுள்ளார் டாக்டர் வே.ஞான பிரகாசம்.

**அமுதசுரபி - சிறந்த சிறுகதைகள் பதினைந்து - விலை: ரூ.22.00**

நவமணிக் கதைகள் வரிசையில் வந்த பத்து சிறந்த சிறுகதைகளுடன், 'அமுதசுரபி' சிறுகதைப் போட்டியில் பரிசு பெற்ற ஐந்து சிறுகதைகளுடன் (1990இல்) பிரகாசிக்கும் சிறுகதைத் தொகுப்பு நூல்.




**அமுதமொழி - தொகுப்பு : அமரர் பைங்காநாடு வெங்கட்ராம சாஸ்திரிகள் - விலை: ரூ.20.00**

பன்மொழிப் புலவர் பைங்காநாடு வெங்கட்ராம சாஸ்திரிகள் தொகுத்த ஸ்ரீ காமகோடி பீடாதிபதி ஸ்ரீ ஜயேந்திர ஸரஸ்வதி சுவாமிகளின் அருளுரைகள். ஸ்ரீ ஜயேந்திர ஸரஸ்வதி சுவாமிகளின் போட்டோக்கள் நிறைந்த சிறந்த தொகுப்பு நூல்.

**அமரர் கதைகள் - விலை : ரூ.22.50**

அமரர்கள் தி.ஜானகிராமன், சுகி.சுப்பிரமணியன், ஹேமா ஆனந்ததீர்த்தன், லக்ஷ்மி, சாண்டில்யன், ஆதவன், நா.பார்த்தசாரதி, அகிலன், அழகாபுரி அழகப்பன் முதலிய ஒன்பது எழுத்தாளர்கள் எழுதிய - அனைவரும் இன்று இல்லை - அந்தச் சிறுகதைச் சிற்பிகளின் எழுத்தாற்றலும், சமூகப் பிரக்ஞையும், கற்பனை வளமும் வாடாத புதுமலராக என்றும் விளங்கும் சிறுகதைத் தொகுப்பு.




**தியாக தீபம் - நீதியரசர் ச.மோகன் விலை ரூ.40.00**

காந்திஜியின் கொலை வழக்கு விசாரணையை இளைய தலைமுறையினரும் அறியச் செய்ய நீதியரசர் தொடர்ந்து 'அமுதசுரபி' இதழில் எழுதிய நூல். டாக்டர் நா.மகாலிங்கம் அவர்களின் அணிந்துரையையும், டாக்டர் கி.வேங்கட சுப்பிரமணியம் அவர்களின் அறிமுக உரையையும் கொண்டது.

**அமரர் சின்னி கிருஷ்ணன் நினைவுச் சிறுகதைப் போட்டியில் பரிசு பெற்ற சிறுகதை**

# டாக்டரின் மகள்

சி. பன்னீர் செல்வ

காரின் ஓசையிலிருந்தே வருபவரைப் புரிந்து கொண்டுவிட்ட நர்மதா மருத்துவமனை, மறுவிநாடியேப் பரபரப்பாகிவிட்டது.

"டாக்டரம்மா வர்றாங்க. எல்லாரும் தயாரா இருங்க".

நர்சுகளும் பிற பணியாளர்களும் பம்பரமாய்ச் சுழன்றார்கள். படுத்திருந்த நோயாளிகளில் பலர் எழுந்து உட்கார்ந்து கொண்டனர்.

காரிலிருந்து இறங்கிய டாக்டர் நர்மதா, புத்தம் புதிய நவீன காலணி வித்தியாசமான ஓசையெழுப்ப உள்ளே பிரவேசிக்கையில் உட்கார்ந்திருந்த பார்வையாளர்கள்கூடத் தம்மையறியாமலே எழுந்து நின்றனர்...

"வணக்கம், டாக்டரம்மா..."

"குட்மார்னிங் டாக்டர்".

மெல்லிய தலையசைப்பும், புன்னகையுமாய் வார்டுக்குள் நுழைந்த டாக்டருக்கு முன்னும் பின்னுமாய் நர்சுகள் சுழன்றார்கள்.

நோயாளிகள் அனைவருமே பெண்கள். தொண்ணூறு சதவிகிதம் பிரசவத்திற்காகக் காத்திருக்கும் பெண்கள்.

வார்டு பார்வை முடிந்து அறைக்குள் திரும்புகையில் ஒரு மணி நேரம் கழிந்து போய்விட்டது.

புதிய நோயாளிகளும் ஏற்கெனவே வார்டுகளில் தங்கியிருக்கும் நோயாளிகளின் உறவினர்களும் வரிசையில் காத்திருந்தார்கள்... ஒரு நர்ஸ் வரிசைக்கிரமமாக ஒவ்வொருவரையும் உள்ளே அனுப்பிக் கொண்டிருந்தாள். டாக்டர் அறையில் இருந்து பேசுவது வெளியில் கேட்காது.

"டாக்டரம்மா..."

"தயங்காமே சொல்லுங்க".

"என் பொண்ணு கல்யாணம் ஆகாதவ. இப்ப கர்ப்பத்தை அழிக்கிறதாலே பின்னாலே பயம் ஏதும் இல்லையே?"

"என்ன பயம்?"

"ஒடம்புக்கு... இது வெளியே தெரிஞ்சா".

"டாக்டர் நர்மதாகிட்டே வந்திட்டா இந்த மாதிரி சந்தேகமெல்லாம் வரக்கூடாது. மத்தியானத்துக்கு மேலே பொண்ணை அழைச்சுக்கிட்டு வாங்க".

அடுத்தது ஒரு கர்ப்பிணி - முதல் பிரசவம். முகத்தில் பயம். கூட கணவன். அவன்தான் பேசினான்.

"டாக்டர்! இவ சிசேரியன்னா ரொம்பப் பயப்படறா"

"ம்... சொல்லுங்க".

"சிசேரியன் இல்லாமே பார்க்க முடியாதா டாக்டர்?"

"இங்க பாருங்க மிஸ்டர்! டாக்டர்ங்க வார்த்தையிலே நம்பிக்கை இருக்கணும். இல்லேன்னா வேறெங்கேயாவது பாருங்க. எனக்கு ஆட்சேபனை இல்லே".

"வேணாம் டாக்டர். நீங்க சொல்றபடியே செய்யுங்க டாக்டர்".

இவர்கள் வெளியேறியதும் உள்ளே நுழைந்தவள் நடுத்தர வயதைத் தாண்டிக் கொண்டிருக்கும் ஒரு பெண்மணி. அவள் பின்னால் பயமும் திகிலுமாய் ஓர் இளம் கர்ப்பிணி.

"நேத்தே சொல்லியாச்சில்ல - பிறகென்ன?"

"டாக்டரம்மா. நீங்கதாம்மா இந்தப் பொண்ணுக்கு நல்லது பண்ணணும்... வாழ்க்கைப் பட்டுப்

போன எடத்திலே வதைபட்டு இப்ப வாயும் வயிறுமா வந்து நிக்கறா. எங்களாலே முடிஞ் சதைப் பொரட்டிக் குடுத்திர்றோம் டாக்டரம்மா. நீங்கதான் பெரிய மனசு பண்ணி இந்தப் பிரச வத்தைப் பாக்கணும்".

"திரும்பத் திரும்ப இதையே சொல்லி என் நேரத்தை வேஸ்ட் பண்ணாதீங்க. பேசாமே தர்ம ஆஸ்பத்திரிக்குப் போங்க. அது தான் நல்லது. நீங்க போகலாம் நர்ஸ்... அடுத்த ஆளை உள்ளே அனுப்பு".

"ஒனக்குத் தலையெழுத்து தர்மாஸ்பத்திரிதாண்டி. வா போகலாம்" என்று அந்த கர்ப் பிணிப் பெண்ணை உள்ளடங்கி அழுகையோடு இழுத்து கொண்டு அந்தப் பெண்மணி வெளியேறுகையில் உள்ளே நுழை தவள் டாக்டர் நர்மதாவின் ஒரே மகள் ராதா!

"நர்ஸிங் ஹோமுக்கெல்லாம் எதுக்கு ராதா வந்து சிரமப் படுறே?"

"இப்ப வந்திட்டுப் போன பொண்ணு ரொம்ப பாவம்மா நல்லவம்மா".

"இங்க பார் ராதா... நல் வங்க கெட்டவங்க பார்த்து நா டாக்டர் தொழில் செய்ய மு யாது! நான் தர்மாஸ்பத்தி நடத்தலே. இதையெல்லாம் நா வீட்டிலே வச்சுப் பேசிக்கலா இப்ப நீ வீட்டுக்குப் போய் நல் ஒய்வு எடுத்துக்க. வெளியி நிறையப் பேர் காத்துக்கிட்டிரு காங்க".

"அம்மா..."

"சொல்றதைக் கேளு ராதா".

ராதா வெளியேற எழுகையில், நர்சையும் மீறி ஒரு பெண்மணி இரைந்தபடி உள்ளே வந்து விட்டாள்...

"எங்க பொண்ணுக்கு மாசக் கணக்கிலே ஒங்ககிட்டே வைத் தியம் பார்த்தோம். மருந்தும் மாத்திரையும் ஊசியும் ஆயிரக் கணக்கிலே எழுதிக்குடுத்தீங்க. சிசேரியன்தான் பண்ணணும்ன்னு சொன்னீங்க. அதையும் நம்பி னோம். பணத்தைப் பணம்ன்னு பாராமே ஆயிரக்கணக்கிலே செல வழிச்சோம். ஆனாக் கடைசியிலே ஒங்க கவனக் குறைவாலே எங்க பேரக் குழந்தையைச் சாகவிட்டுப் பழியை ஆண்டவன் மேலே போட்டுட்டீங்களே டாக்டர்!"

"இதப் பாருங்கம்மா... அநாவசியமா இங்க வந்து கூச்சல் போடாதீங்க..."

"என்ன சொன்னீங்க? நான் அநாவசியக் கூச்சல் போடுறேனா? உங்க மனசைத் தொட்டுச் சொல் லுங்க டாக்டர்".

இரண்டு நர்சுகள் அவசரமாய் ஓடிவந்து அந்தப் பெண் மணியைப் பலவந்தமாக இழுத்துக் கொண்டு போக, திகைத்து நின்றாள், ராதா...

பங்களாவின் மாடி அறையில் அங்குமிங்குமாக நடந்தார் டாக்டர் நர்மதா...

"இதப்பார் ராதா... நர்ஸிங் ஹோமிலே தினமும் ஆயிரம் சம்ப வங்கள் நடக்கும். அதையெல்லாம் நீ கண்டும் காணாமலும் போகணும்... தலையிடக்கூடாது. உனக்கு நண்பர்கள் வேணாம்னு சொல்லலே. ஆனா அவங்களுக் கெல்லாம் ஓர் எல்லைக்கோடு இருக்கணும். டீ, காபி, டிபன் குடு... பேசிச் சிரி... படம் போட்டுக் காட்டு... அதுக்கு மேலே சிபாரிசு அது இதுன்னு அவங் களை என் முன்னாலே கூட்டிக் கிட்டு வந்து நிக்காதே. பீஸ் இல்லாமே வைத்தியம் பாருன்னு நச்சரிக்காதே..."

"அம்மா..."

"என்னைப் பணப்பேய்ன்னு மனசுக்குள்ளே திட்டுறியா? திட் டிட்டுப்போ. கவலை இல்லே. ஆனா ஒரு விஷயத்தை மறந் திராதே. ஒனக்குப் பணத்தோட அருமை தெரியலே! இந்தப் பணத்துக்காகத்தான் எனக்குத் தாலி கட்டினவன், நான் கர்ப் பிணியா இருந்தப்பவே கைவிட் டுட்டு இன்னொருத்தியோட ஓடிப் போனான்! நடுத்தெருவிலே நின்னப்போ இந்தச் சமூகம் கைகொட்டிச் சிரிச்சுச்சி. வாழா வெட்டின்னு பட்டம் சூட்டிச்சு. ஆனால் அதே சமூகம் இப்போ. என் காலடியிலேக் கிடக்கு. இது தான் உலகம்; பண உலகம்; நகை நட்டு, சீர் செனத்தின்னு வெறி பிடிச்ச உலகம்! இதிலே நான் தோற்றுப் போயிருந்தா தற் கொலைதான் பண்ணிக்கிட்டு இருக்கணும்! தானதர்மம் பாத் திருந்தேன்னா பரதேசியாப் போயிருக்கணும். இப்ப நீ அனுப விக்கிற எந்தச் சவுரியங்களையும் கற்பனையிலேகூடப் பார்த்திருக்க முடியாது. கிலோ கணக்கிலே தங்கமும் லட்சக்கணக்கிலே ரூபாய்களும் வீசி அழகான, நல்ல பதவியிலே உள்ள மாப் பிள்ளையை உனக்குப் பார்த் திருக்க முடியாது..."

"அம்மா..."

"நீ ஒண்ணும் சொல்ல வேணாம் ராதா... நீ இப்போ கர்ப்பிணி. வீண் கவலைகளை விட்டுடு. மத்தப் பிரசவக் கேஸ் களைப் பார்த்திட்டு அநாவசிய மாப் பயப்படாதே! பெரிய பெரிய ஸ்பெஷலிஸ்டுகளை வரவழைச்சு உனக்குப் பிரசவம் பார்ப்பேன், ராதா! நீ புத்தகம் படிச்சுக்கிட்டே இருக்கையிலே, வலியே இல்லாமே குழந்தையைப் பெற்றெடுக்கப் போறே! சந்தோஷமா இரு. படம் பாரு; பாட்டுக் கேளு... என்ன?"

ராதா ஏதோ சொல்ல முயன் றாள். இந்த முறை குறுக்கிட்டது டெலிபோன். டாக்டர் நர்மதா அவ சரமாகப் போனை எடுத்தார்... பேசிவிட்டு வைத்தார்.

"நர்ஸிங்ஹோமிலே சீரியஸ் கேஸாம் ராதா... நீ கவனமா இரு. நான் சொன்னதை மறந்திராதே".

டாக்டர் நர்மதா வேகமாகப் படியிறங்கிப் போனார்.

யுகக்கணக்கில் பார்த்துக் கொண்டிருந்தாலும் ராதாவுக்கு அலுக்காத ஓவியம் அது....

உலகத்துப் பேரழகுகளையெல் லாம் ஒட்டுமொத்தமாகத் தனக் குள் திரட்டி உருட்டிக் கொண்டு தாயின் ஜீவ கலசத்தை நோக்கி ரோஜா இதழ்களைத் துளிர்க்கும் குழந்தை...

இதோ அமுது அமுது எனப் பீச்சியடிக்கத் தயாராக விம்மி நிற் கிற தாய்மையின் பரிபூரணம்...

இந்தக் குழந்தையைப் போல என் குழந்தையும்...

இந்தத் தாயைப் போல நானும்...

அந்தப் பரவசத்தினூடே எழுந்தது ஒரு நெருடல்...

இது என்ன பிரசவமாய் இருக்கும்?

ஏதோ ஒரு பெரிய மருத்துவ மனையில், புத்தகம் படித்துக் கொண்டேயிருக்கையில் வலியே இல்லாமல் நிகழ்ந்த பிரசவமாக இருக்குமோ?

அல்லது நர்மதா மருத்துவ மனையில் சிசேரியன் மூலம் – 'ஐயோ!' என்று திகிலுற்றது உள்ளம்.

'சிசேரியன்' என்ற வார்த்தையே இல்லாத இடத்துக்கு ஓடிப் போய்விட வேண்டும்! பணம் பறிக்கும் ஊசி மருந்துகள், மாத் திரைகள் வேண்டவே வேண்டாம்!

அந்த ஓவியக் குழந்தை அடி வயிற்றுக்குள் முண்டுவதுபோல் ஒரு சுகம். பின் அதுவே வலி யாகப் பெருக, தரையில் சரிந் தாள்...

"ராதாம்மா, ராதாம்மா..." என்று கதறலும் பதறலுமாய் வேலைக்காரப் பெண்கள் இரு வரும் ஓடிவந்தனர்...

"நீ டாக்டரம்மாவுக்குப் போன் பண்ணு" என்றவள் ராதாவைத் தூக்கி தோளில் அணைத்துக் கொண்டாள்.

பள்ளங்களை ஒதுக்கி, நலுங் காமல் போய்க் கொண்டிருந்தது. கார்...

கண் விழித்த ராதாவுக்கு எங்கேயோ மிதந்து கொண் டிருப்பதுபோல் தோன்றிற்று.

"பயப்படாதே ராதா. அப் படியே படுத்துக்கோ. நான்



அம்மா உன் பக்கத்திலேயே இருக்கேன்".

"நாம இப்ப எங்கே இருக்கோம்?"

"நம்ம கார்லே இருக்கோம் ராதா..."

"கார்லயா?"

"ஆமா ராதா. நம்ப மருத்துவமனைக்குப் போய்க்கிட்டு இருக்கோம். ரெண்டு ஸ்பெஷலிஸ்டுகளை உனக்காக ஏற்பாடு பண்ணியிருக்கேன்... கவலையேப் படாதே. உனக்குத் துளிக்கூட வலி தெரியாமே அவங்க பிரசவம் பார்ப்பாங்க. அதோ மருத்துவமனையே வந்தாச்சு... ஸ்பெஷலிஸ்டுகள் ரெண்டு பேரும் நமக்காக வாசல்லேயே நிக்கறாங்க"

கார் எவ்விதக் குலுங்கலும் இல்லாமல் நின்றது... "இறங்கும்மா ராதா" என்று அணைத்தபடி டாக்டர் நர்மதா காரிலிருந்து இறங்கினார்...

கீழே இறங்கிய ராதா நகராமல் அப்படியே நின்றாள்.

"என்ன ராதா? ஏன் நின்னுட்டே?" என்று கேட்டார் டாக்டர் நர்மதா.

மருத்துவமனையின் முகப்பையே வெறித்தாற்போல் சில விநாடிகள் பார்த்துக் கொண்டிருந்த ராதாவின் முகம் மாறிற்று. அவள் வாயிலிருந்து வார்த்தைகள் சிதறின!

"வேணாம்! நான் நர்மதா மருத்துவமனைக்கு வரமாட்டேன். அங்கே ரொம்பப் பணம் கேட்பாங்க. எல்லாக் குழந்தைகளையும் சிசேரியன் பண்ணித்தான் பொறக்க வைப்பாங்க... நான் வரமாட்டேன். நான் கண்ணீர் விட்டுக் கதறி அழணும்! என் குழந்தை பிறக்கும் வேதனையை நான் அனுபவிக்கணும்! வலியால் துடிக்கணும்! இங்கே மயக்க ஊசி போடுவீங்க. என் வயிற்றை அறுத்து என் குழந்தையைப் பிரிப்பீங்க. நான் வரமாட்டேன்! வரமாட்டேன்!"

பிரபல டாக்டர் நர்மதாவும், இரு ஸ்பெஷலிஸ்டுகளும், நர்சுகளும் அதிர்ச்சியில் உறைந்து போய் நின்றனர்!

அமரர் சின்னி கிருஷ்ணன் நினைவுச் சிறுகதைப் போட்டியில் பரிசு பெற்ற சிறுகதை

# சத்தியத்திற்குச் சோதனை இல்லை

ரிஷபன்

"டீச்சர். உங்களைத் தலைமை ஆசிரியைக் கூப்பிடறாங்க..."

ஆயா வந்து சொல்லிவிட்டுப் போனாள்.

மீனா முகத்தில் இறுக்கம் படர்ந்தது. எதிர்பார்த்த விநாடி வந்துவிட்டது.

"... சுபா... வகுப்பைப் பார்த்துக்க..." என்றாள் மீனா.

"சத்தம் போடாதீங்க... ஹோம் வொர்க்கைச் செய்யுங்க. இதோ வந்திடறேன்..."

தலைமை ஆசிரியை அறைக்குப் போகிற வழியில் வலது புறம் முழுதும் வரிசையாய்ப் பூச்செடிகள். சற்றுத் தள்ளிக் குடிநீர்க் குழாய்கள். இடது புறம் வரிசையாய் வகுப்பறைகள். இவள் பாதி வகுப்பில் வராந்தாவில் நடந்து செல்வதைத் தனலட்சுமி ஆச்சர்யமாய்ப் பார்த்தாள்.

"... மீனா..."

தனலட்சுமியின் அழைப்பு கேட்டு நின்றாள்.

"... என்ன... உடம்பு சரியில்லையா..."

"இல்லே... தலைமை ஆசிரியை அறைக்குப் போறேன்..."

"ஓ... அழைப்பு வந்திருச்சா.."

தனலட்சுமியின் முகத்தில் தெரிந்த வருத்தம் இவளைச் சங்கடப்படுத்தியது.

".. நான் போகணும்... வரட்டுமா..."

விடை பெற்று நகர்ந்தவளைப் பார்த்துச் சொன்னாள்:

"திரும்பி வரும்போது... என்னைப் பார்த்துட்டுப் போ... என்ன சொன்னாங்க..."

மீனா தலையசைக்கக்கூட இல்லை. வெற்று அனுதாபமும், வீண் வம்பும் உடன் பிறந்தவை. ஒன்றுக்கொன்று இணை. இவள் தலை உருளப் போவதில் ஆர்வமாய் வேடிக்கைப் பார்த்து ரசிக்க வென்றே காத்திருக்கிறார்கள்:

"மேடம் இருக்காங்களா...?" என்றாள் வாசலில் இருந்த அட்டெண்டரிடம்.

"...உள்ளே போங்க..." என்றான்.

இவள் வரப் போகிறாள் என்று ஏற்கெனவே தெரிந்திருக்க வேண்டும்.

மேடம் குனிந்து ஏதோ படித்துக் கொண்டிருந்தாள். இவள் வந்து நின்றதைக் கவனித்த மாதிரி நிமிர்ந்தாள்.

"... உட்கார்..."

சீட்டு நுனியில் அமர்ந்தாள்.

"சிலபஸ் எல்லாம் எவ்வளவு தூரம் கவர் பண்ணியிருக்கே..."

சொன்னாள். இன்னும் எதிர்பார்த்த கேள்விக்கு வரவில்லை. தயார் செய்து கொள்கிறாளா...?

"உன்னை இப்ப எதுக்கு வரவழைச்சேன் தெரியுமா..."

மேடத்தின் கண்ணாடியை மீறி விழிகள் உற்றுப் பார்த்தன. உள்ளூர நடுங்கியது.

"... எ...துக்கு மேடம்..."

"இந்தக் கடிதாசியைப் படி..."

படிக்கவே வேண்டாம். புரியும். தெரிந்த விஷயம்தான். "கடவுளே... என்னை ஏன் இப்படி சோதிக்கிறாய்..."

"...என் மகள் சரஸ்வதி... இதனால் மனநிலை பாதிக்கப்பட்டு... இரவில் உறக்கத்தில் பிதற்றுகிறாள். வேறு வழியின்றி மன நல மருத்துவரிடம் அழைத்துப் போனதில்... தீவிரமாகப் பாதிக்கப்பட்டு இருப்பதாகவும்... இதே நிலை நீடித்தால்... அவளின் மனநிலை பெரிதும் பாதிக்கப்படும் என்றும் டாக்டர் சொல்கிறார். வகுப்பில் படிக்கும் மாணவியை அநாகரிமாக நடத்துவதும், மிரட்டுவதும் கண்டிக்கப்பட வேண்டிய குற்றமாகும். தங்களின் கவனத்திற்கு இதைக் கொண்டு வருகிறேன். மேற்படி டீச்சரின்மீது ஒழுங்கு நடவடிக்கை எடுக்கத் தவறினால் வரும் பின்விளைவுகளை நீங்கள் சந்திக்க வேண்டியிருக்கும்..."

மீனாவுக்கு மறுபடி உடல் நடுங்கியது.

"என்ன சொல்றே இதுக்கு..?"

மீனாவிற்குள் அழுகை பீறிட்டது.

"என்ன நடந்தது? என்ன செய்தே?"

தலைமை ஆசிரியையின் குரலில் திடீரெனக் கரிசனம் தெரிந்தது.

என்னவென்று சொல்ல..?

மீனா பாடம் நடத்திக் கொண்டிருக்க... சரஸ்வதியும் இன்னொரு பெண்ணும் பேசிக் கொண்டிருந்தார்கள்.

"நேத்து படம் போனோம். சுகன்யாவுக்கு ஒவ்வொரு சீன்லயும் அசத்தற டிரஸ் டி. அதுவும் பிரபு... ஒரு சீன்ல..."

"ஏய் சரஸ்வதி... அங்கே என்ன பேச்சு.."

மீனாவின் குரல் உரத்துக் கேட்டது.

"ஒண்ணுமில்லே... மிஸ்..."

"பொய் சொல்லாதே... ஏய் புவனா... அவ என்ன பேசினா... சொல்லு.."

புவனாவிற்குச் சட்டென்று பொய் வரவில்லை.

"நேத்து பார்த்த சினிமா.. மிஸ்.."

"..இங்கே நான் உயிரை விட்டுப் பாடம் நடத்தறேன். அங்கே சினிமா... ஐ ஸே... கெட் அவுட் ஆஃப் தி கிளாஸ்.."

சரஸ்வதி வெளியில் போனாள். இது முதல் தடவை. மறு சந்தர்ப்பங்களில், ஹோம் வொர்க் செய்யாதது... கேட்ட கேள்விக்குச் சரியான பதில் சொல்லாதது... தவறான விடையுடன் எழுதியது... என்று நிறைய கோபிக்க வேண்டி வந்தது. அதன் உச்சக் கட்டமாய்...

"நீயெல்லாம் ஏண்டி எங்க உயிரை எடுக்க வரீங்க. படிப்புல இண்ட்ரெஸ்ட் இல்லே... கவனம் பூரா.. சினிமாவுல... எப்படி உருப்படுவே... இதுவே கொஞ்சம் லட்சணமா நீ இருந்திருந்தா... நடிக்கவே போயிருப்பே.."

எரிச்சலில் அத்து மீறிய வார்த்தைகள், வகுப்பில் கேலிச் சிரிப்பைத் தூண்டிவிட்டன. சரஸ்வதிக்கு அவமானமாகிப் போய் விட்டது.

அழுதவளைப் பார்த்ததும் இரக்கம் வரவில்லை. மாறாகக் கோபம்தான் பீரிட்டது -

"ரோஷப்பட்டுப் பிரயோசனம் இல்லே... முட்டை வாங்காம... மார்க் வாங்கறதுல புத்தியைச் செலுத்து.."

அடுத்த நாள் சரஸ்வதி வரும்போது.. வகுப்பில் கோழி கூவியது. மீனா கண்டித்தும் எடுபடவில்லை. இன்று சரஸ்வதியின் அப்பா கடிதம் எழுதுகிற நிலைமைக்கு வந்து விட்டது.

தலைமை ஆசிரியை அவளைச் சுய நினைவுக்குக் கொண்டு வந்தார்.

"இதுக்கு என்ன பதில் சொல்றது..."

"மேடம்... நான் எந்தத் தப்பும் செய்யலே... அந்தப் பொண்ணு தானும் படிக்காமே... கிளாசையும் குட்டிச்சுவர் பண்ணினாள். லேசா கண்டிக்கப் போனா..."

தலைமை ஆசிரியையின் முகத்தில் அழுத்தம் தெரிந்தது.

"நோ... நோ... மீனா... தேர் ஈஸ் எ லிமிட்... இப்ப அந்தப்





## இந்த நாடு நமது நாடு

**- ஜி. ஜயராமன்**

சாந்தமூர்த்தி காந்திமகான்
வாழ்ந்த பொன்னாடு - அவர்
சொன்ன அன்பு அகிம்சை என்றும்
இருக்கும் நம்மோடு!

மாந்த ருக்குள் பேதம் இல்லை
என்று நீபாடு - உலகச்
சாந்தி தூதன் நேருசொன்ன
சீலப் பண்பாடு!

கீதையோடு கிரந்தம் பைபிள்
குர்ரான் நம் வேதம் - கொண்ட
கடமை அன்பு நேசம் உண்மை
கருணை நம்கீதம்!
சேதம் இன்றி ஒன்றுபட்டால்
ஏது வீண் பேதம் - அந்தப்

பாதை வழிச் செல்ல நமது
பயணம் வெகு தூரம்!

ஏழை இங்கு இல்லை என்று
இனியகீதம் பாடு - பிறர்
வாழ வழி காட்டி நீயும்
வாழ்ந்து பொருள் தேடு!
வாழ இடம் தந்த இந்த
வளமையான நாடு - என்றும்
வாழையடி வாழையாக
வாழும் வகை நாடு!

---

பொண்ணோடத் தந்தை நிறைய அரசியல்காரர்களின் ஆதரவுடன் வரப் போறார். வீ ஹாவ் டு ஃபேஸ் எ டஃப் டைம்...'

"... ஐ யாம் ஸாரி, மேடம்... நீங்க என்ன சொன்னாலும் செய்ய றேன்..'

"... இப்ப இப்படி சொல்லி ருங்க... அவர் என்னடான்னா.. என் பொண்ணு உயிரையே விட்டு ருக்கும். ஒரு மாணவியைத் தற் கொலைக்குத் தூண்டற டீச்சரை வெளியே தள்ளுங்கிறார். நீ ரொம்ப சுலபமா ஸாரி சொல் லிட்டே. இட் இஸ் நாட் அஸ் ஈஸி அஸ் யூ ஃபீல்...'

மீனா பேசாமல் இருந்தாள்.

"... ஓகே... மதியம் அவரை வரச் சொல்லி இருக்கேன். வேற கிளாசுக்கு அந்தப் பெண்ணை மாத்திடறதாகவும்... அடுத்த வருடம் உன்னை வேற ஸ்கூலுக்கு மாத்தறதாகவும் சொல்லிட்டுப் போறேன்.. அட்லீஸ்ட் வீ கேன் போஸ்ட்போன் தி பிராப்ளம்... பார்க்கலாம்... கன்வின்ஸ் பண்ண முடியுதான்னு. நீயும் அவர்கிட்டே மன்னிப்பு கேட்டுரு.. புரிஞ்சுதா."

மீனா மௌனமாய்த் தலை யசைத்தாள். உள்ளூர அழுகை பொங்கியது. தலைமை ஆசிரியை தலை அசைக்க எழுந்து வெளியில் வந்தாள்.

மதியம் சொன்னபடியே நடந் தது. வந்த மனிதர் எகிறிக் குதிக்க.. மீனா அசையாமல் நின்று மன்னிப்பு கேட்டாள். தலைமை ஆசிரியை மிகவும் கெஞ்சினாள் இருவரின் மீதும் நடவடிக்கை எடுக்காமல் விடுவதாகச் சொல்லி விட்டுக் கடைசியில் ஒருவிதத் திருப்தியுடன் வந்தவர் போய்ச் சேர... சரஸ்வதியைத் தலைமை ஆசிரியையே வேறு வகுப்பில் கொண்டுபோய் உட்கார வைத் தாள்.

மீனா ஒரு வாரம் லீவு போட்டு விட்டுப் போனாள். நிறைய அழவேண்டியிருந்தது.

லீவு முடிந்து மீனா திரும்பி னாள்.

இதோ... பீரியட் தொடங்க மணி அடிக்கிறது. மீனா வகுப் பறைக்குள் நுழைந்தாள்.

"குட்மார்னிங் மிஸ்.."

மாணவிகளுக்கு இந்நேரம் நிகழ்ந்தது எல்லாம் தெரிந் திருக்கும். டீச்சரின் முகம் சுருங் கிப் போனதை... விதம் வித மாய்...க் கதைகளால் வர்ணித் திருப்பார்கள்.

புத்தகம் பிரிக்கக் கை நடுங் கியது. சமாளித்துக் கொண்டு பாடத்தை ஆரம்பித்தாள்.

"ஒவ்வொரு வினையும்... அதற் குச் சமமான... எதிரிடையான இன் னொரு வினையை..'

வகுப்பின் மூலையில் ஏதோ பேச்சுக்குரல்... பாடம் சொல்லத் தொந்தரவாய்... யாரது...

கன்னம் அப்பிய விழிகளுடன் மூலை பெஞ்சில் இரு மாணவி கள். பொருந்தாத மேக்கப். டீச் சரை ஏறெடுத்துப் பார்க்கும் திற னின்றி விழிகளைத் திசை திருப்பி - அப்பாவித்தனம் காட்டிக் கொண்டு...

மீனாவுக்குள் சுரீலென்றது. 'நீயெல்லாம் படித்து முன்னுக்கு வர வேண்டாம்... உன்னை... எங் களை மாதிரி டீச்சரை நம்பித் தானே அனுப்பியிருக்கிறார்கள். உன் வீட்டில்... ஏன் இப்படி தரந்தாழ்ந்து போகிறாய்...'

"யாரது. அங்கே பேசறது..."

வார்த்தைகள் வாய் வரை வந்து தயங்கின.

வேண்டாம். யார் மறுபடியும் மன்னிப்பு கேட்பது... கூனிக் குறுகு வது... "உன் தலையெழுத்துபடி நடக்கட்டும். எப்படியோ... போ... எனக்கு என்ன... நான் நடத்தினாலும் நடத்தாவிட்டாலும் எனக்குச் சம்பளம்... உன்னை ஏதாவது சொல்வானேன்... பிறகு அவதிப்படுவானேன்.

தீர்மானித்து விட்டாள். எதுவும் நிகழாதது போல பாடத்தைத் தொடர்ந்தாள்."

"... எவரி ஆக்ஷன்... ஹேஸ் ஆப்போசிட்... அண்ட்... ஈக்வலண்ட் ரியாக்ஷன்..." பேசிய மாணவிக்குத் துணிச்சல். துளிர்விட... மீண்டும் கிசுகிசுக்க ஆரம்பித்தாள். இந்த டீச்சரால... நம்மை ஒன்றும் செய்துவிட முடியாது. பயப்படுகிறாள் பிரச்னை வரும் என்று.' பேச்சு இன்னும் உரத்துக் கேட்டது.

எதிர்ச் சுவரில் மகாத்மா புகைப்படமாய் 'அவர்களைப் பார்த்துச் சிரித்துக் கொண்டிருந் தார். சோதிக்க... இனிமேல் ஏது சத்தியம் என்றா?

## அமரர் சின்னி கிருஷ்ணன் நினைவுச் சிறுகதைப் போட்டியில் பரிசு பெற்ற சிறுகதை

# துருப்பிடிக்கும் நிலவுகள்

**தங்க சிவராசன்**

'மணக்குள விநாயகர் தேநீர்க் கடை'யில் காலை நேர வியாபாரச் சுறுசுறுப்பு, சாலையோரத்தில் மூங்கில் வேயப்பட்டிருந்தது. உள்ளே குறுகிய பகுதியில் மேசைகள் போடப்பட்டிருந்தன. அவற்றை ஆக்ரமித்தவர் அவசர, அவசரமாய்ப் பசியாறிக் கொண்டிருந்தனர். வாசலை ஒட்டிய ஸ்டாலின் மேலே லட்சுமி, சரஸ்வதி, விநாயகர் படங்கள், மிகப் பெரிய அளவில் மணக்குள விநாயகர் ஊர்வலத் தோற்றம். அவற்றின் தலையில் சிறு, சிறு சீரியல் விளக்குமாலை... அடுக்குகளில் அலுமினியத் தட்டுகள், தனித்தனியே இட்லி, பூரி, மெது வடை, மசால் வடை கூட்டங்களைச் சுமந்திருந்தன. சற்றுத் தள்ளிக் கணப்பு அடுப்புகளில் சாம்பார் கொதி மணத்தோடு!

வெளி முகப்பில் தேநீர் பகுதி, பளிச்சென்று துலங்கும் பாய்லர் முதுகில் அணில் கோடுகள் போல் நீண்ட, நீண்ட பூசை. அதன் நடுவே அகலமான குங்குமப் பொட்டு சந்தனத்தோடு! ஆவி நூலிழையாய் ஊர்வலம் போகும் பால் அடுப்பு, அதன் கீழே காலி கண்ணாடி டம்ளர்களின் அணி வகுப்பு, டீ மாஸ்டர் தினகரன் மேலுக்கும், கீழுக்குமாய் டீயை ஆற்றிக் கொண்டிருந்தான். அதைப் பார்ப்பவர்களுக்கு, 'மேஜிக் நிபுணன்' ஒருவன் தேநீர்க் குவளைக்குள் இருந்த பாலை நீண்ட ஆடையாய் இழுத்து, பின் உள்ளே மறைப்பது போலத் தோன்றியது.

"இங்கே... ரெண்டு ஸ்ட்ராங் டீ!" உள்ளேயிருந்து வரும் குரல்.

"தம்பி! மீடியமா ஒரு டீ!"

"தினா! சூப்பரா ரெண்டு டீ போடு!"

"மாஸ்டர்! லைட்டா ஒரு டீ!" என வெளியே பெஞ்சுகளில் இருந்தும் பல குரல்கள்! தினகரன் எல்லோருக்கும் முறுவலோடு தலையசைத்தபடியே இயங்கினான். வேகமாய் டீயை ஆற்றுவதும், அதை டம்ளர்களில் ஊற்றுவதும், பார்த்த சிலர், "பாவம்! தினாவின் தோள்பட்டை வலியிலே... பிய்ச்சிக்கும்!" எனப் பரிதாபப் பட்டனர்.

"ஹலோ... தினா... குட் மார்னிங்!"

"நம்ப மூணு பேருக்கும் 'தூளா' ஒரு டீ போடு!" கட்டளை கூட்டத்தைக் கிழித்தது. மூன்று இளைஞர்கள் அலட்சியமான பாவத்தோடு உள்ளே நுழைந்தனர். வெளியே இரு மருங்கில் போடப்பட்டிருந்த பெஞ்சுகளில் உட்கார்ந்தனர். தொம்மென்று அவர்கள் அமர்ந்த வேகத்தில் சிலர் கைகளில் இருந்த டீ சிதறியது; குடித்துக் கொண்டிருந்தவர்களுக்குப் புரையேறியது.

"எருமாட்டு ஜென்மங்கள்!" தமக்குள்தான் முணுமுணுத்து முகத்தைச் சுளித்துக் கொண்டனர். வந்தவர்கள் கவலைப் படவே இல்லை.

"வந்துட்டானுங்களா!" தினகரனும் கடுப்புடன் முணுமுணுத்தான். வெறுப்போடு அவர்களை ஏறிட்டான். கலைந்த எண்ணெய் காணாத 'பங்க்' தலை! 'தொள தொள பனியன், உடம்பில் ஒட்டாமல் மிதந்தது. முழங்காலுக்கு மேலே மடித்துக் கட்டப்பட்ட கைலி; முகத்தில், பார்வையில், பேச்சில் 'அகங்கார முலாம்' பூசிய அலட்சியம். 'பூமியே எங்கள் காலடியில்' என்கிற ஏளனம்!

"தினா... எங்கே பேப்பரையே காணோம்! மலர், தந்தி, எதுவுமே இல்லையே!" உரிமையோடு ஒருவன் கேட்டான்.

"உள்ளே... இருக்கு... சுரேஷ்!", தினகரன் வெறுப்பை வெளிக் காட்டாத குரலில் சொன்னான்.

"டேய் மணி! எடு!" சப்ளை செய்து கொண்டிருந்த சிறுவனை அதிகாரமாய் கட்டளையிட்டான் சுரேஷ், ஆளுக்கொரு பேப்பர் போனது!

மூவருக்கும் டீ வந்தது. சுவைக்கத் தொடங்கினர்.

"ஏன் தினா... இன்றைக்கு ஸ்கூல்... லீவா? கிளிகளைக் காணோமே!"

"ஆமாம்!

"வாங்கடா... ஆற்றுப் பக்கம் போய் வருவோம்! காலங்காத்தாலே... கண்ணுக்குக் குளிர்ச்சி வேணும்" ரமேஷ் எழ, மற்றவர்களும் கிளம்பினர்.

டீக்குரிய காசை எறிந்துவிட்டு நகர்ந்தனர்.

"ஏண்டா... தினா? இவனுங்களை இங்கே உட்கார வேணாம்னு சொல்ல வேண்டியதுதானே?" என்று ஒரு கிழவர் கோபப்பட்டார்.

"அம்மா, அப்பனுக்கு அடங்காது... திரியுதுங்க! நான் சொன்னா... கேக்கப் போறானுங்களா? கண்டவனைக் கூட்டிட்டு வந்து வம்புதான் வளத்துவானுங்க!" தினகரன் தன் இயலாமையை வெளிப்படுத்தினான்.

"அதுக்கில்லே! ஒன் கடையிலே ஒக்கார்ந்து... அவனுங்க... அடிக்கிற கூத்து ஒண்ணா ரெண்டா? பக்கத்திலே இருக்கிற ஸ்கூலுக்குப் போற பொண்ணுங்களை நாக்கூசாம... கேலி பண்றானுங்க! காது கொடுக்க முடியல்லே"

என்று இன்னொருவர் வருத்தப்பட்டார்.

"சரிதான்! ஆனா... என்ன பண்றது? இவனுங்களைத் திட்டினா, எஸ்.எப்.ஐ. அது. இதுன்னு வந்திடுறானுங்க! எங்க மாணவன்களை... யாரு தப்பாய் பேசறதுன்னு! இவனெல்லாம்... மாணவனுங்களாம்!" தினகரன் தலையில் அடித்துக் கொண்டான்.

"என்னப்பா... தினகரன்! எதுக்குத் தலையிலே அடிச்சிக்கிறே?" கம்பீரமான குரல் கனிவைக் கூட்டி வந்தது.

"வாத்யாரு... சாருங்களா? வணக்கம், சார்! உட்காருங்க". அவன் பணிவுடன் கூனிக் குறுகினான். பெஞ்சில் சிலர் எழுந்து இடம் கொடுத்தனர்.

"டீ... போடட்டுங்களா?" கேட்டபடி போடத் தொடங்கினான் தினகரன். உட்கார்ந்த ஆசிரியர், "என்ன... என் கேள்விக்குப் பதிலே காணோம்?" என்று முறுவலோடு அவனைப் பார்த்தார்.

"ஒண்ணுமில்லீங்க... சார்! அந்த... சுரேஷ் செட் பண்ணுகிற அட்டகாசம் சொல்லி முடியல்லே... அதான்!" டீயை அவரிடம் நீட்டினான்.

"ஓ! அவனுங்க மேலே தப்பில்லே! அவனுங்க... வயசுதான் காரணம்! படிப்பை... ஒழுங்கா... தொடர்ந்து இருந்தா நெறிப்பட்டிருப்பானுங்க! ரெண்டாங்கெட்ட நிலையிலே இருக்கிற அவனுங்க... தறிகெட்டு ஓடற ஆறு மாதிரி! சரி சரி! அவனுங்களை நான் பாக்கணும்னு சொல்லுப்பா... வரட்டா?" என்று கிளம்பினார்.

"ரொம்ப... நல்லதுங்க!" தினகரன் வணங்கினான். "இவரு ஒருத்தர்கிட்டேதான் அவனுங்களுக்குப் பயம்" அவன் சொல்லிக் கொண்டிருக்கும் போதே 'தறிகெட்ட ஆறுகள்' வந்தன.

தொலைவில் போகும் ஆசிரியரைப் பார்த்து, "என்ன... வழக்கம் போல் அவர்கிட்டே 'குற்றப் பத்திரிகை' வாசிச்சியா...?" என்று கணேஷ் முறைத்தான்.

"சேச்சே! நீங்க... நம்ப... புள்ளைங்க!" என்றவன், "ஆனா... உங்களைப் பாக்கணும்னு... சொன்னாரு" என்று இழுத்தான் தினகரன்.

"என்னது?" அச்சம் தெரிந்தது.

"எனக்கு என்ன தெரியும்?" அவன் முடிக்கவில்லை, சாலையில் எதிர், எதிராய் வந்த வேன் ஒன்றும், ஆட்டோ ஒன்றும் மோதுவதைத் தவிர்க்க, ஒன்றை ஒன்று உரசி, கிரீச்சிட்டு நின்றன.

வெளியே நின்றவர்கள் கடைக்குள் ஓடினர்.

யாருக்கும் சேதமில்லை! ஆனால் வேனின் முன் கண்ணாடி தூள் தூளாகச் சிதறியது. வேனில் இருந்தவர்கள் ஆட்டோவைத் திட்டினர். ஆட்டோவில் இருந்து எதிர் வாதங்கள் கோபமாய் வந்தன. ஒவ்வொரு முகத்திலும் கோபத்தை மீறிய மரண பயம்!

"சரி சரி! போங்கப்பா! யார் செஞ்ச புண்ணியமோ தப்பிச்சிட்டாங்க! சண்டை எதுக்கு?" 'ஆறுகள்'தான் சமாதானக் கொடியைத் தூக்கின. வசவுகளைப் பரிமாறிக் கொண்டே, வேனும், ஆட்டோவும் பயணத்தைத் தொடங்கின.

பாதை முழுதும் சிறுசிறு கண்ணாடித் துண்டுகள் பரவிக் கிடந்தன.

"என்ன தினா? ஆக்ஷன் மூவில்லாம்... காட்டரே! வாடிக்கையாளர்களுக்கு இனாமா... பொழுது போக்கா?" சுரேஷ் கைத்தட்டினான்.

"கண்ணாடித் துண்டுகள் கண்ணைப் பறிக்குது... கண்ணா!" என்ற கணேஷ் துள்ளினான்.

பாதையில் சைக்கிளில் வந்தவர்கள் ஒதுங்கிப் போயினர். செருப்பில்லாக் கால்களுக்குச் சொந்தமானவர்கள் டீக்கடைக்கு ஒட்டி நடந்தனர். அப்போது, -

சைக்கிளில் கடக்க முயன்ற வெளிநாட்டுக்காரன் ஒருவன் தயங்கி நின்றான். கொட்டிக் கிடக்கும் கண்ணாடித் துண்டுகளை உற்றுப் பார்த்தான்! ஏதோ யோசித்தான், டீக்கடையை நோக்கி வந்தான்.

"ப்ரூம் ஷ்டிக்?" உதடுகளைக் குவித்துக் கனமான உச்சரிப்பில் தினாவிடம் கேட்டான். புரியாமல் விழித்தவனை நோக்கி, "ப்ரூம்... ஷ்டிக்? இல்லே... பிரஷ்!" என்றான்.

"தினா... துடைப்பம் இருக்கான்னு கேக்கறான்" என்று சுரேஷ் ஏளனம் செய்தான்.

"துடைப்பமா... எதுக்கு?" தயங்கிய தினகரன், துடைப்பம் எடுத்துக் கொடுத்தான்.

"தேங்க்ஸ்!" என்று வாங்கியவன், சைக்கிளை ஓரமாய் நிறுத்தினான். பின் அக்கறையுடன் தெருவில் சிதறிக் கிடந்த கண்ணாடித் துண்டுகளைக் கூட்டத் தொடங்கினான். வெகு பொறுமையாய், வெகு பொறுப்பாய், அவன் தெருவின் எதிர்ப்புறத்துக்குக் கூட்டிய விதம் தினாவையும், மற்றவர்களையும் திகைக்க வைத்தது.

"ஏன் தினா... நகர சபையிலே புதுசா இந்த ஆள் சேர்ந்து இருக்கானா?" ரமேஷ் விடைத்தான்.

"சும்மா... இருப்பா! நீயும், நானும் வேடிக்கை பார்க்கறோம்! எங்கிருந்தோ வந்தவன் பணி செய்யறான்! வெட்கத்திலே நாமெல்லாம் குறுகணும்! அதை விட்டுட்டுக் கேலி செய்றியே..." பெஞ்சில் இருந்த ஒருவர் தைரியமாய்க் கத்தினார். கைலி முகங்களில் முதன் முறையாகக் குற்ற உணர்வு! அவமானத்தில் அலட்சியமும் அகங்காரமும் அவசரமாய்க் கரைந்து போயின.

"தேங்க்ஸ்!" வெளிநாட்டவன் துடைப்பத்தை நீட்ட, "டீ... ப்ளீஸ்!" மரியாதையுடன் தினகரன் உபசரித்தான். "யெஸ்!" அவன் தலையாட்டினான். தன் தொழில் நுணுக்கத்தை எல்லாம் பயன்படுத்தி மிகச் சிறந்த டீயைத் தயாரித்துக் கொடுத்தான். ரசித்து, ரசித்துக் குடித்தவன், "டி... ஈஸ் குட்!" என்று அந்த அயல் நாட்டுக்காரன் மனமாரப் பாராட்டினான்.

"தேங்க்ஸ்!" தினகரன் உருகினான். கண்ணாடித் டம்ளருடன் காசு கொடுத்தவனைத் தினகரன் தடுத்தான்.

"நோ... மணி!" சொல்ல, "சாரி..." என்று வற்புறுத்திக் கொடுத்தவன், பக்கத்தில் இருந்த சுரேஷை சிநேக பாவத்துடன் பார்த்தான். சுரேஷ் முறுவலித்தான்.

→

"சுரேஷ்! ரொம்ப நல்ல காரியம் செஞ்சிருக்கீங்க! அதனாலே டீக்குக் காசு வாங்க மாட்டேன்னு சொல்லு!" என்று தினகரன் கெஞ்சினான்.

"யூ... டன்...: குட் ஆக்ஷன்! ஹீ... நாட்... வாண்ட் மணி!" அரைகுறை ஆங்கிலத்தில் சுரேஷ் தெரிவித்தான். வெகுளியாகச் சிரித்த அவன், "நோ... நோ! இட் ஈஸ் சிம்பிள்!" தோளைக் குலுக்கினான். "அதற்கும் டீக்குக் காசு கொடுப்பதற்கும் என்ன தொடர்பு!" என்று ஆங்கிலத்தில் சொன்னவன், சட்டைப் பைக்குள் கையை விட்டான், ஒரு சின்ன பர்சை எடுத்தான். "எனக்கு இதெல்லாம் சொல்லிக் கொடுத்தவர்... இவர்தான்!" என்று ஒரு படத்தைக் காட்டினான். சுரேஷுடன் எல்லோரும் எட்டிப் பார்த்தனர். அங்கே, -

பொக்கை வாய்க் காந்தி புன்னகை புரிந்து கொண்டிருந்தார்!

'சிவுக்'கென்று ஒரு சிலிர்ப்பு எல்லோருக்குள்ளும் ஓடியது. தினகரன் தெய்வத்தைத் தரிசித்த நிலையை அடைந்தான்'. சுரேஷ் கூட்டம் சுருங்கிப் போனது! உள்ளுக்குள் ஊற்றெடுத்த அவமானம் முகத்தில் வியர்வைத் துளிகளாய் எட்டிப் பார்த்தன. அவனை ஏறிட ஆசை இருந்தது; சுய பச்சாதாபத்தால் தலை கவிழ்ந்தது! ஒருவித அமைதி நிலவியபோது,



"தேங்க்ஸ்! குட்பை!" வெள்ளைக்காரன் விடைபெற்றான். அவன் சென்று வெகுநேரம் வரை அமைதி நிலவியது.

"பார்த்தீங்களா? அவன் மனுஷன்! நாம்பளும் இருக்கோமே" என்று தினகரன் சுரேஷ் நண்பர்களை ஓரக் கண்ணால் பார்த்தபடி சொன்னான். அச் சொற்களில் இருந்த ஏளனம் அவர்களுள் இறங்கியது. 'பூமியே எங்கள் காலடியில்' என்ற பொய் கர்வம் பொடிப் பொடியானது! ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டனர்.

சுரேஷ் விருட்டென்று எழுந்திருக்க மற்றவர்கள் அதே வேகத்தைப் பிரதிபலித்தனர். மௌனமாய் அங்கிருந்து நகர்ந்தனர்.

"கணேஷ்! எங்கேயோ இருக்கிற ஒருத்தனை மகாத்மா பாதிச்சிருக்காரு... நம்மை!" சுரேஷ் வார்த்தைகளைப் பறிகொடுத்தவனாய்த் தடுமாறினான்.

"அதுதான்... எனக்கும்!" இருவரின் இதயங்களும் 'பாவ மன்னிப்பு' வாசித்தன.

"சரி, நான்... வரேன்!" ஒவ்வொருவரும் விடைபெற்றனர். சுரேஷ் திடீரென்று, "கணேஷ்! ரமேஷ்! கொஞ்ச நேரம் பொறுத்து லைப்ராரிக்கு வர்றீங்களா?" கேட்க,

"நாங்களே... அதுதான் நினைச்சோம்!" ஆர்வத்துடன் சொன்னார்கள்.

"சரி!" கலைந்தனர்... ஒவ்வொருவரையும் அந்த வெள்ளைக்காரன் இம்சிப்பது அவர்கள் இயக்கத்தில் புரிந்தது.

அரசு கிளை நூலகம், கணேஷ் உள்ளே நுழையும்போது மற்ற இருவரும் வந்திருந்தனர். கூட்டம் அதிகமாக இல்லை.

"நாம்ப... அந்த ஓரமாய்ப் போயிடுவோம்!" பொறுமையான குரலில் சுரேஷ் சொல்ல, மூவரும் தெற்கு மூலைக்கு நகர்ந்தனர். நாற்காலியில் உட்கார்ந்தவர்களைப் பார்த்து, சுவரில் இருந்த 'காந்தி' படம் சிரித்தது.

இத்தனை நாள் இல்லாத மதிப்பு... அவர்கள் கண்ணில்! "கணேஷ்! அப்போது இருந்து என் மனசு என்னவோ பண்ணுது தெரியுமா?"

"எங்களுக்கும்தான்!"

"இந்த பேப்பரைப் பாரேன்!" நீட்டினான், அதில் - காந்தி அரை நிர்வாணக் கோலம் பூண, மதுரையில் முடிவு எடுத்ததைப் பற்றிய கட்டுரை! அருமையாகப் படம் பிடிக்கப்பட்டிருந்தது!

"அற்புதமாக இருக்குடா! மதுரையில்தான் முடிவு எடுத்தாரா?"

"அவ்வளவுதானா பாத்தீங்க?"

"பின்னே?"

"முதன் முதல்லே... அவர் அந்தக் கோலம் ஏற்ற தேதி... பாக்கல்லே..."

"செப்டம்பர்... 22ன்னு இருக்கு! என்ன இப்ப?" வெகுளியாய் மற்றவர்கள் அவனைப் பார்த்தனர்.

"என்னவா? அன்னைக்குத்தான் என்னோட பிறந்த நாள்! இன்னும் ஒரு வாரம் இருக்கு! அன்னேயிலேர்ந்து நானும் அதே மாதிரிதான் 'டிரஸ்' பண்ணப் போறேன்".

"வெரிகுட்!" ரமேஷ் சற்றே கூவினான்.

"சத்தம் போடாதீங்க! சுரேஷ் அடக்க. "நீ ஒன்னோட நிலையைத் தேர்ந்தெடுத்திட்டே! நாங்க என்ன பண்றது!" ரமேஷ் வருந்தினான்.

"ஆங், நானும் அன்னைலேர்ந்து வெறும் ஆட்டுப்பாலும், மல்லாக் கொட்டையும் சாப்பிடப் போறேன்!" கணேஷ் துள்ளினான்.

"பிரமாதம்டா!"

"அப்ப... நான்... ஒண்ணு செய்றேன்! தினமும் தக்ளி நூக்கப் போறேன்! எங்க தாத்தா நூற்றது. வீட்டிலே இருக்கு!" ரமேஷ் நெஞ்சை நிமிர்த்தினான்.

"ரமேஷ் இப்பத்தான் நெஞ்சே நிறைஞ்சிருக்குடா!" சுரேஷின் கண்களில் பெருமிதம் நிலவியது.

"ஆமாண்டா! டீச்சர்... நம்பளைப் பாக்கணும்னு சொன்னாராமே? அவரைப் பார்த்து, இதைச் சொன்னா ரொம்ப சந்தோஷப்படுவாரு".

"ஆமாண்டா! சாயந்திரம் அவரைக் கண்டிப்பாச் சந்திக்கிறோம்! ஆசீர்வாதம் வாங்கறோம்!" கைகுலுக்கிக் கொண்டனர்.

மாலையில் ஆசிரியரைச் சந்தித்தனர். தங்களின் முடிவை ஆர்வமாய்ச் சொன்னார்கள். அமைதியாகக் கேட்ட ஆசிரியர் ஆசி வழங்கவில்லை, குலுங்கக் குலுங்கச் சிரித்தார்!

பெருமையும், கர்வமும் பொங்கச் சொன்னவர்கள் திகைத்தனர்.

"எதுக்குச் சிரிக்கறேன்னு பாக்கறீங்களா?"

மௌனமாய்த் தலையாட்டினார்கள்.

"நீங்க செய்யப் போற காரியத்தாலே என்ன விளையும்னு யோசிச்சீங்களா?"

மூவரும் விழித்தனர்.

"காந்தி எங்களைப் பாதிச்சிட்டாருன்னு ஒவ்வொருவரும் செய்யப்போற செயலாலே அவருக்கு நீங்க பெருமை சேர்க்கலே! கேலிக்குரியவரா ஆக்கறீங்க!"

"சார்!"

"ஆமாம், அரை நிர்வாணக் கோலமோ, ஆட்டுப்பாலோ, தக்ளி நூற்றலோ மட்டுமே காந்தியம் இல்லே! அதனோட குறியீடுகள் அவை! ஒங்க மேலே தப்பில்லே! இன்னைக்கு இந்த நாட்டிலே காந்தியை வழிபடற பொருளா ஆக்கிட்டோம்! அவரைச் சாமியா ஆக்கித் தூக்கி வைச்சிட்டோம்! அதன் விளைவுதான் இதெல்லாம்!"

"சார்?"

"காந்தியத்தின் ஆத்மாவே சேவை மனப்பான்மைதான்! அதை அந்த வெளிநாட்டுக்காரன் புரிஞ்சிகிட்டான்! நீங்களோ குறியீடுகளைத் தேடறீங்க! அதுதான் தப்பு! காந்தியைப் பின்பற்ற வழியா ஏத்துக்குங்க! காந்தியம் காலாவதி ஆயிட்டதா பலர் பேசறாங்க, அதுவும் முட்டாள்தனம்... காந்தியம் நம்ப அன்றாடச் செயல்லே மறைஞ்சி இருக்கு! சுரேஷ் நீ அரை நிர்வாணம் ஏற்க வேணாம்! ஆடம்பரமற்ற எளிய ஆடைகள் அணிந்தாலே போதும்! ரமேஷ் நீ ஆட்டுப் பாலைத் தேட வேணாம்! அளவுக்கு அதிகமான ஆசையை வளர்க்காமல் இருந்தாப் போதும்! கணேஷ்! நீ தக்ளி நூற்கலாம்! அதோடு நிற்காதே! அடுத்தவர்களுக்கு உன்னால் என்ன செய்ய முடியும்னு யோசி! இவையெல்லாத்துக்கும் மேலா... ஒன்றைச் செஞ்சா... நீங்க அவருக்குப் பெருமை சேர்க்கலாம்!"

"எதுங்க சார்?"

"வெட்டியாய்க் காலத்தை ஓட்டறதை நிறுத்தறதுதான் அது! இளமைன்றது அற்புதமான பருவம்! அதைக் கேலியிலே வீணாக்கறது பாவம்! ஒங்க சொந்தக் கால்லே நிக்கப் பாருங்க! அரட்டை அடிச்சது போதும்! உங்கள் உயர்வுக்கு நேர்மையான தொழிலைத் தேர்ந்தெடுங்க! உயருங்க! உங்களைச் சுற்றி இருக்கிறவங்களை உயர்த்துங்க! சுயநலம் கருதாம செய்யற ஒவ்வொரு செயலிலும்..... அது சாதாரணமா இருக்கலாம்... அதிலேதான் காந்தியம் இருக்கு... என்ன புரியுதா?"

"புரியுதுங்க சார்! நாங்க என்ன செய்யணும்னு நீங்களே வழி காட்டினா நல்லா இருக்கும்!"

"சொல்றேன்! உங்களை மாதிரி பாதியிலே படிப்பை விட்ட கூட்டம், ஒவ்வொரு டீக்கடையிலே ஒக்கார்ந்து துருபிடிச்சிப் போறாங்க! அதனாலே இந்த நாட்டிலே எவ்வளவு ஆக்கபூர்வமான 'மேன்பவர்' வீணாவுது தெரியுமா? நம்ப பகுதியிலே இருக்கிறவங்களை ஒன்னு திரட்டுவோம் - சுய தொழில் தொடங்குவோம்! தான் விழிப்படையறது பெரிசில்லை, தன்னைப் போல இருக்கிறவங்களை விழிப்படைய வைக்கிறதே உண்மை காந்தியம். செய்யலாமா? ஒங்களோட ஒத்துழைப்பு கெடைக்குமா?" என்று வினவினார் ஆசிரியர்.

"கண்டிப்பா செய்வோம் சார்!" என்றவர்கள், "எங்களைச் சரியான பாதைக்கு வழிபடுத்தினதுக்கு நன்றி சார்!" என்று இளைய தலைமுறையினர் கைகுவித்தனர்.

"நன்றியை... அந்த முகம் தெரியாத வெளிநாட்டானுக்குச் சொல்லுங்க! ம்... அயல்நாட்டார் நமக்குக் காந்தியை அறிமுகம் செய்ற நிலைக்கு ஆயிட்டோமே... இது வேடிக்கையா... வேதனையா? எனக்குப் புரியவில்லை!"

ஆசிரியர் விரக்தியை விழுங்கினார். ●



பாலகிருஷ்ணன்

# அண்ணா நகரில் ஓர் அறிவுப்புரட்சி

வழக்கமான தொழிற்சங்கங்களிலிருந்து வேறுபடுகிற சங்கம் ஸ்டேட் பாங்க் ஆஃப் இந்தியா அதிகாரிகள் சங்கம். நிர்வாகத்துக்கு எதிராகப் போர்க்கொடி உயரும் உரிமைக்குரல் எழும், போராட்டமெல்லாம் நடக்கும். இவையெல்லாம் அதிகாரிகளின் நலம் நாடியும், உரிமை கோரியும் நடக்கிற வழக்கமான தொழிற் சங்கப் பணிகள். இவற்றையும் வெற்றிகரமாகச் செய்து கொண்டு இவற்றிற்கும் மேலாய் இன்னும் பல செய்ற்கரிய சாதனைகளைச் சமுதாயத்திற்கு உரித்தாக்கி வருகிறது இச் சங்கம்.

உறுப்பினர் நலம் நாடும் இச் சங்கத்திற்கு இதன் தொடக்க நாள் முதலே தான் சார்ந்திருக்கிற சமுதாய நலனிலும் ஈர்ப்பு உண்டு. ரத்ததானமெல்லாம் இப்போது பரவலாகப் பேசப்படுகிற நடக்கிற சமூக வேலை. இதனை எழுபதுகளில் அறிமுகப்படுத்தி ஆர்வம் வளர்த்தது இச் சங்கம். புயலாலும், வெள்ளத்தாலும் பாதிக்கப்பட்ட மக்களுக்கு ஆதரவுக்கரம் நீட்டியதும் இதன் அநேகமான பணிகளில் சிலவாகும். அன்னயாவினும் புண்ணியம் கோடி' ஒன்று மாக் கவிபாரதி சுட்டிக் காட்டிய கல்விப் பணி நோக்கம் சர்வதேசக் குழந்தைகள் ஆண்டின்போது இச் சங்கத்திற்கு ஏற்பட்டது.

அன்று, அண்ணா நகரின் வளர்ச்சிக்கு எல்லைக் கோடிட்டு இன்று சென்னை நகருக்கே அறிவின் மையமாய் அமைந்துள்ள மாபெரும் நிறுவனம் ஸ்டேட் பாங்க் அதிகாரிகள் சங்கப் பள்ளி. எஸ்.பி.ஓ.ஏ பள்ளியென்றும், ஷோபா பள்ளிக் கூடமென்றும் அழைக்கப்பட்டு அண்ணா நகர் வளர்ச்சியிலும் அறிவு எழுச்சியிலும் இன்றியமையாத ஓர் அங்கமாகி விட்டது இந்தப் பள்ளி. பதினான்கு ஆண்டுகளில் பல்லாண்டு வளர்ந்து விரிந்த விஸ்வரூபத்தை இப் பள்ளி காட்டுகிறது. 1979ஆம் ஆண்டில் ஏற்றி வைக்கப் பட்ட ஒளி இன்று திருவண்ணாமலைத் தீபமாய் தரிசனம் தந்து கொண்டிருக்கிறது ரூ. 8 லட்சத்தை இச் சங்கம் இவ் வேள்வியின் முதல் ஆகுதியாய் முதலீடு

கல்விக்கூடக் கவின்மிகு தோற்றம்.

பட்டாம்பூச்சிபோல் மாணவ - மாணவியர் ஆடும் காட்சி



செய்தது. ஸ்டேட் பாங்க் அதிகாரிகள் சங்கக் கல்வி அறக்கட்டளை ஆர்ப்பாட்டமில்லாமல் எளிமையாய்த் தொடங்கப்பட்டது. அமைதியாகப் பல அச்சுறுத்தல்கள் சோதனைகள் வழியில் வந்தன; எனினும் தொடங்கிய போதிருந்த தீர்க்க தரிசனம், தளராத உழைப்பு, முனைப்பின் மும்முரம் இவையெல்லாம் வியத்தகு சாதனைகளுக்கு வழிவிட்டன. தொழிற்சங்கம் கல்வி அறக்கட்டளை நடத்துவது இதுவரை கேட்டிராதது மட்டுமல்ல; இனி நடவாததும்கூட. இந்த முழுமுதற் சாதனையின் மதிப்புறு மாந்தர்கள் ஸ்டேட் வங்கி அதிகாரிகளாவர். தமது சம்பளத்திலிருந்து சிறு பகுதி, பொது மக்களிடம் திரட்டிய நன்கொடைகள், கலை நிகழ்ச்சிகள் நடத்திச் சேகரித்தத் தொகையாவும் சிறு சிறு துளியாய்த் தொடங்கி வெள்ளமாய்ப் பெருகி விரிந்து வற்றாத அறிவுச் செல்வமாய் வளர்ந்திருக்கிறது. கலை நிகழ்ச்சிகள் பிரபலமான கலைஞர்களின் இசை நிகழ்ச்சிகள் அதிகாரிகளே நடத்திய நாடக நிகழ்ச்சிகள் (இவ்வங்கி அதிகாரியும் எழுத்தாளருமான கலைமாமணி ஏர்வாடி ராதாகிருஷ்ணன் எழுதிய மன்தானைப் பாத்தீங்களா நாடகம்) மூலம் பெருந்தொகை பள்ளிக் கணக்குக்கு வந்தது.

சென்னையில் இரு பள்ளிகளும் கோவை, மதுரை, எர்ணாகுளம் போன்ற நகரங்களில் ஒவ்வொன்றுமாய் ஐந்து பள்ளிக் கூடங்களை இவ் வறக்கட்டளை நடத்துகிறது. எல்லாப் பள்ளிகளிலும் சேர்த்து ஏறத்தாழ 14,000 மாணவ, மாணவியர் பயில்கின்றனர். சுமார் எழுநூறு ஆசிரியர்கள் இப் பள்ளிகளில் பணியாற்றுகின்றனர். மாத ஊதியம் மட்டும் மொத்தம் பதினேழுரை லட்ச ரூபாய் வழங்கப்படுகிறது. அரசு நிர்ணயத்துக்கு இணையான ஊதியத்தோடு ஆண்டுதோறும் நினைவுப் பரிசு, ஊக்கப் பரிசு போன்றவையும் வழங்கப்படுகின்றன. மேல் நிலைத் தேர்வு முடிவுகள் வருகிற போதெல்லாம் முதல் நிலையில் பல மாணவர்கள் வருவதற்கு ஆசிரியர்களின் ஈடுபாடும், பயிற்சித் திறனுமே காரணங்கள். நிர்வாகத்திறன், ஒழுக்கம், நல்ல தேர்வு முடிவுகள் இவற்றிற்கெல்லாம் எடுத்துக்காட்டாய்த் திகழ்கின்றது. இப்பள்ளிகள்.திரு ஜான்சன் திரு சாம் டேவிஸ் திருமதி பிரான்ஸிஸ் போன்ற தலைமை ஆசிரியர்கள் போற்றுதற்குரியோர். ஸ்டேட் பாங்க் அதிகாரிகள் சங்கத்தின் பொதுச் செயலாளர் திரு எம். பாலகிருஷ்ணன் இவ்வறக் கட்டளையின் செயலாளர். பள்ளிகளின் தாளாளராகவும் விளங்குகிறார். காலை விழித்தது முதல் இரவு விழித்திருக்கிற வரை அதிகாரிகள் நலம், பள்ளிகளின் வளர்ச்சி போன்ற சிந்தனையில் தொய்வறியாமல் தோய்ந்து காணப்படுவார். ஓய்விருக்கும் போதெல்லாம் உற்சாகமாகப் பல பொது நிகழ்ச்சிகளில் பங்கேற்றுப் பெருமையுறுவார். ஆங்கிலத்திலும், தமிழிலும் பேச்சு, எழுத்து வன்மை மிகுந்த திரு பாலகிருஷ்ணன் வங்கி அதிகாரிகள் இயக்கத்திற்கு ஒரு விடிவெள்ளி. இலக்கிய ஆர்வம் மிக்க திரு பாலகிருஷ்ணன் தன் பல்வேறு பணிகளுக்கிடையிலும் பயனுள்ள பல நூல்களைப் படிப்பவர். ஆழ்ந்த புலமையை அறிந்த துறையிலெல்லாம் அபரிமிதமாய் காட்டுகிறவர் இவர். இச் சங்கம் 1978இல் தொடங்கிய இலக்கிய அணிக்கு இன்றளவும் பேராதரவு காட்டுகிறார் இவர். இலக்கிய அணியின் கவிதை மாலை நிகழ்ச்சியை கவிஞர் புதுகை. மு. தருமராசன் தன் இலக்கிய நண்பர்களான அ.மு. உடையப்பன், ஏர்வாடி ராதாகிருஷ்ணன் ஆகியோரின் அருந்துணையோடு அற்புதமாய் மாதந்தோறும் நடத்தி வருகிறார். வங்கி அதிகாரிகளின் கவிதைத் தொகுதிகளையும் வெளியிடுகிறார். தொழிற்சங்கப் பணிகள், கல்விப் பணி, 'சமூகப் பணி, இலக்கியத் தொண்டு என்றெல்லாம் விரிந்து விழுது விட்டு வளர்ந்து கொழித்திருக்கிற இத் தொழிற்சங்க நிழலில் மனிதச் சமுதாயமே இளைப்பாறுகிறது; பயன் பெறுகிறது.

— அஸ்வின்

# கவிச் சக்கரவர்த்தி ஐகேடா



உலகக் கவிஞர்களின் தலைவர் நம் கிருஷ்ண ஸ்ரீநிவாஸ், ஸியால் கவிஞர்கள் மகாநாட்டில் கலந்து கொண்டு விட்டு, இந்தியா திரும்பும்போது, ஐகேடா ஜப்பானியக் கவிஞர் தைஸாகு ஐகேடா அழைப்பையேற்று, டோகியோவில் இரண்டு வாரம் தங்கினார். ஜப்பானியக் கவிஞர் கொடுத்த "இதய கீதம்" என்ற கவிதைத் தொகுப்பை, நாற்பதினாயிரம் அடிக்குமேல் விமானத்தில் பறந்து சென்ற கிருஷ்ணாவுக்கு, பொயட் ஐகேடா என்று ஆராய்ச்சி நூல் எழுத எண்ணம் ஏற்பட்டது. அந்தத் துடிப்பை வார்த்தைகளில் வார்த்து, ஓர் அற்புதமான நூலை வெளியிட்டு விட்டார். இந்த நூல் ஜப்பானில் அச்சாகி இன்று லட்சக்கணக்கான பிரதிகள், கோடிக்கணக்கான ரஸிகர்கள் கவனத்தை ஈர்த்து விட்டது. சௌ என் லாய், மண்டேலா, கார்பசேவ், ராஜீவ் போன்ற மேதைகளால் போற்றப்பட்ட ஐகேடா, இன்று ஆசியாவின் கவிச் சக்கரவர்த்தியாக ஜ்வலிக்கிறார்.

"கொஞ்சம் திரும்பிப் பாருங்கள் :

காலவெள்ளத்தில்

பேபிலான் மறைந்ததும் -

கிரீஸ், ஈஜிப்ட், ரோமில்

சரித்திரம் புதைந்து கிடப்பதும் -

கங்கையின் புனித நீர் கலங்கியதும்

சீனாவின் சுவர்கள்

கிழிந்த ரிப்பன்களாகக்

காட்சி அளிப்பதும் -

அழிவு ஒரு விநாடியின் வேலை :

மறுமலர்ச்சி காலத்தின் தீர்ப்பு.

முன்னேற்றம் ஒன்றே

இன்றைய உலகின்

தாரக மந்திரம்".

இதுபோன்ற அற்புதக் கவிதைகளை அலசி விமர்சித்து நம்முன் ஓர் அமுத கலசத்தையே வைக்கிறார் கிருஷ்ணா. "உலக சரித்திரத்தில், ஆர்னால்ட் டோயின் பீ ஜுன் - பால் ஸார்ட் ரே, நார்மன் கஸின்ஸ், மகாத்மா காந்தி போன்ற மேதைகள் தோன்றி நமக்குப் புத்துயிர் ஊட்டுகிறார்கள். இன்று அந்த வரிசையில் ஐகேடாவைக் காண்கிறோம், என்கிறார் ரஷ்ய மேதை சிங்கிஸ் எயிட்மடாவ்.

கிருஷ்ணா படைத்துள்ள இந்த அரிய ஆராய்ச்சி நூல் "பொயட் ஐகேடா" ஜெர்மன், ஸ்பானிஷ், பிரஞ்ச், ரஷ்யன், கொரியன், துருக்கி போன்ற இருபது உலக பாஷைகளில் மொழிபெயர்க்கப்பட்டு இந்த ஆண்டு இறுதிக்குள் ஜப்பானில் அச்சாகி உலகெங்கும் பரவி, 1994 வருஷம் "ஐகேடா ஆண்டாக" ஜ்வலிக்கச் செய்யும். இந்திய பாஷைகளில் எல்லாம், மொழிபெயர்த்து வெளியிட கிருஷ்ணா ஏற்பாடு செய்து விட்டார்.

தமிழில் "பொயட் ஐகேடா" ஆராய்ச்சி நூலை வெளியிடலாம் என்றிருக்கிறேன். ஜப்பானில் அச்சாகி ஆறு கோடி தமிழர்களின் உள்ளத்தில் இடம் பெறும் என்று நம்புகிறேன்.

"இமய மலைக்கு ஒரு எவரஸ்ட் தான் உண்டு; ஆனால் ஐகேடா கவிதையில் பல எவரஸ்டுகள் தலை தூக்கி நிற்கின்றன" என்கிறார் இந்த நூலின் ஆசிரியர் கிருஷ்ணா.

ஆறு கண்டங்களிலும் சுற்றி வந்து, தன் பக்தர்களைப் பரவசப்படுத்தும் இந்த ஆத்ம ஞானி, கவிதை எவரஸ்ட், ... நம்மிடையே வாழ்வதில், உலகமக்கள் பெருமைப்பட வேண்டும்.

ஐகேடா கவிதை ஒரு பிரமாண்ட எழுச்சி, அமர நிகழ்ச்சி.

இந்த நூற்றாண்டின் ஆரம்பத்தில், டாகூரின் கவிதைகளில் இந்த அற்புதம் நிகழ்ந்தது.

இன்று ஜப்பானில் நடக்கிறது. நோபல் பரிசு பெறவேண்டிய கவிஞர்களின் வரிசையில், ஐகேடா நிற்கிறார்.

காலத்தின் கரையில் கம்பீரமாக உட்கார்ந்து கொண்டு, பல யுகங்கள் தோன்றி மறைவதைக் கவனித்து அமர கவிதைகள் இயற்றியுள்ளார், ஐகேடா.

ஆசியாவுக்குப் பெருமை தேடித் தரும் அந்தப் பொன்னான நாள் நிச்சயம் வந்தே தீரும்.

**— விக்கிரமன்**

*"பொயட் ஐகேடா (POET IKEDA) நூலைப் பெற விரும்புவோர் SOKA GAKKAI INTERNATIONAL, TOKYO - 160,க்கு எழுதி ஒரு பிரதி பெறலாம்."*

# வியாழனும் வால் நட்சத்திரங்களும்

(ஜூபிடர்) வியாழன், (குரு) கிரகத்தில் வால் நட்சத்திரம் மோதப் போகிறது

– செய்தி.



● வால் நட்சத்திரத்தின் நான்கு நிலைகள்.

முதலில் வால் பகுதிகளில் தூசுகளும், ஆவிகளும் இருந்தன.

ஆவி மறைய, வால் பகுதி தூசு மட்டும் நிரம்பிய குட்டை வாலாக படிப்படியாக மாறுகிறது.

● ராட்சத வியாழனும் சின்ன பூமியும். (ஒரே அளவு கோலில்)

(பெரிது) வியாழன். (சின்னது) பூமி.

*1. வியாழன் கிரகம் எங்கிருக்கிறது?*

சூரியனுக்கு 48,30,00,000 மைல் தாண்டி இருக்கிறது. சூரியனை இது சுற்றுவதற்கு 11.9 வருஷம் எடுக்கிறது. (கிரகங்களுக்குள் இது சாதாரண வேகம்தான்! நமது பூமி சூரியனை ஒரே வருடத்தில் சுற்றுகிறது) இப்படி வியாழன் சுற்றி வரும்போது பூமிக்கு அது மிக நெருக்கமாக வரும் தூரம் 36,00,00,000 மைல்! புரிகிறதா? அதாவது நமக்கும் சந்திரனுக்கும் இருக்கும் தூரத்தை விட ஆயிரம் மடங்கு தூரம்!

*2. வியாழன் நமது பூமி போல இருக்குமா?*

இராது! கிரகங்களில் இந்த கிரகம்தான் மிகப் பெரிய கிரகம்! ராட்சச கிரகம்! இதன் வயிற்றில் 1300 பூமிகளை அடுக்கலாம்! இதன் குறுக்களவு 83, 300 மைல் (பூமி – 7926 மைல்)

வியாழனுக்கு மிக நெருக்கமாக ஆகாயம் உண்டு. ஆகாயமும் அந்தக் கிரகத்தை ஒட்டியே இருக்கும்! ஆகாயம் என்றால் நமது பூமிக்கு இருப்பது போல் மிக மென்மையான ஆகாயம் அல்ல. திண்மையான ஆகாயம்.

*3. ஆகாயத்தில் நம்மைப் போல காற்று உண்டா?*

கிடையாது. இதன் ஆகாயம் முழுதும் நெருக்கமாக ஹைட்ரஜன் நிரம்பி இருக்கிறது. மீதேனும் 'அமோனியாவும்' சிறிது உண்டு. ஆகாயத்தில் கீழிருக்கும் கிரகப் பகுதி நம் பூமியைப் போல் மண்ணும் மலையும் பாறையும் நிறைந்தவை அல்ல! வியாழன் கிரகம் முழுதும் சமுத்திரம்தான்! ஆனால் தண்ணீர் சமுத்திரமல்ல! ஹைட்ரஜன் திரவ வடிவத்தில் அந்த கிரகம் முழுதுமாக இருக்கிறது.

*4. வால் நட்சத்திரம் என்பது வெறும் தீயா, மின்சாரமா?*

வால் நட்சத்திரத்தில் வெறும் பனிக்கட்டிகளும், தூசிகளும்தான் உண்டு. பனிக்கட்டிகள் 300 அடி




●. வால் நட்சத்திரத்தை மூழ்கடித்துக் கொண்டு சூரிய வெட்கையின் அலைகள் ஓடுகின்றன. வெப்பத்தால் ஆவிகள் மறைய, வால் நட்சத்திரத்தின் கருவும் அதன் தூசு நிறைந்த வாலும் மிஞ்சுகின்றன.

புஷ்பா தங்கதுரை

நீளத்திலிருந்து பல மைல் தூரம் வரை நீளமாயிருக்கும். இது சூரிய னுக்குக் கோடிக்கணக்கான தூரத் தில் இருக்கும்போது சூரிய சக்தியை மட்டும் பெற்றுக் கொண்டு வெதுவெதுப்பாக இருக்கும்! இந்த நிலையில் நாம் இவற்றைப் பார்க்க முடியாது.

*5. அப்படியானால் நம் கண் ணுக்கு எப்போது தெரியும்?*

இந்தப் பனிக்கட்டி தூசிக் கூட்டம் சூரியனை நெருங்கும் போது, அது வெப்பம் அடைய ஆரம்பிக்கிறது. இதன் பனிக் கட்டிகள் நீராவியாகவோ, வாயு வாகவோ மாறுகிறது. இந்தக் கட்டத்தில் இது ஓர் உருண்டை யாக மாறிவிடும். நடுவில் ந்யூக் ளியஸ்ஸும், சுற்றிவர நீராவியும் தூசுமாகச் சூழ்ந்திருக்கும். இதைத் தான் விஞ்ஞானிகள் 'கோமா' என்று அழைக்கிறார்கள்.

*6. இதைத்தான் நாம் பார்க் கிறோமா?*

இருங்கள்! இந்தப் பனிக்கட்டி நீராவி ஆகும்போது அமோனியா போன்ற ரசாயனத்தையும் வெளி விடுகின்றது. இதுவும் சூரிய னால் சூடு பண்ணப்பட்டு வாயுக் களாக மாறுகின்றது. இந்த வாயு வும் கூடத்தான் அந்தக் கோமா வில் அடங்கி இருக்கும். இந்தக் கோமாதான் வால் நட்சத்திரத்தில் தலைப்பகுதி. இந்தப் பகுதிதான் வானத்தில் பனிச்சென்று ஒளி வீசும்.

*7. இந்தக் கோமா எவ்வளவு பெரிதாக இருக்கும்?*

கிட்டத்தட்ட 6000 மைலிலிருந்து 6 கோடி மைல் வரை நீண் டிருக்கும்.

*8. அடேடே அவ்வளவு நீளமா, ஆமாம் இதுதானே தலைப்பகுதி என்றீர்கள்?*

ஆமாம்! வாயுக்களும் தூசும் நிறைந்த இந்தப் பகுதியை சூரிய வெட்கை (Radiation) தாக்கும்போது தூசு நிறைந்த பகுதிகளை ந்யூக் ளியஸ் பகுதியிலிருந்து விரட்டி விடும். இந்த தூசிப் பகுதி ஒரு நீண்ட வால்பகுதியாக நீளும். இது சுமார் 63 கோடி தூரம் நீளமாக இருக்கும்! அதைத்தான் நாம் வால் என்கிறோம்.

*9. சரிதான் போங்கள்! வால் நட்சத்திரம் இவ்வளவு பெரிதா? வானத்தில் சின்னதாகத் தெரி கிறதே?*

ஆகாயத்தில் கோடிக்கணக் கான மைல் தூரத்தில் இருப்ப தால் சின்னதாகத் தெரிகிறது.

*10. சரி இந்த வால் நட்சத்திரம் என்ன செய்கிறது?*

நமது சூரிய பிரபஞ்சத்தைச் சுற்றி இந்த வால் நட்சத்திரம் கோடிக் கணக்கில் உள்ளன. இவை ஒரு கூட்டுத்திரட்சி மேகம் போல இருக்கும் என்று விஞ்ஞா னிகள் கூறுகிறார்கள். இந்த வால் நட்சத்திரங்கள் தங்கள் கூட்டத்தை விட்டுப் பிரிந்தவுடன் சூரியனால் ஈர்க்கப்படும். இவை அந்த ஆகர்ஷண சக்திக்கு ஆட்பட்டு சூரி யனைச் சுற்றிச் சின்னதும் பெரிது மான வட்டத் தடங்களில் சுற்றி வரும். இவை 10 வருடம் தொடங்கி 20 லட்சம் வருடம் வரை வெவ்வேறு கால அளவுகளில் சூரியனைச் சுற்றி வருகின்றன.

*11. அப்படியானால் சில வால் நட்சத்திரங்களை நம் வாழ்நாளில் பார்க்க முடியாது!*

ஆமாம்! சில வால் நட்சத் திரங்களை ஒருமுறை பார்த்து விட்டு அடுத்த முறை பார்க்க முடியாது. சில வால்நட்சத்திரங் களை நம் வாழ்நாளில் பல தடவை பார்த்து விடலாம்.

*12. சரி! இதற்கும் வியாழ னுக்கும் எதாவது சம்பந்தம் உண்டா?*

ஆமாம். வியாழன் நமக்குப் பெரிய பாதுகாப்பு! பிரபஞ் சத்தில் நமக்கு வெகு தூரத்தில் இருக்கிறது. பிரபஞ்சத்தில் வெளிச்சுற்றுக் கோட்டை வாசலை இது காப்பது போல இருக்கிறது. வியாழன் பெரிதாகவும் கன மாகவும் இருப்பதால், அதன் பக் கத்தில் எது போனாலும் தனது ஆகர்ஷண சக்தியால் இழுத்து விடும். வியாழனின் பாதிப்பு எல்லா வால் நட்சத்திரத்திற்கும் உண்டு. பல வால் நட்சத்திரங் களின் சுற்றும் கால அளவை வியாழன் குறைத்து விடும். சில வால் நட்சத்திரங்களை சூரியன், பூமி, மண்டலத்துள் வராமல் அது தூக்கி எறிந்து விடும். சிலவற்றை தனக்குள் இழுத்து முழுங்கி விடும்.

*13. அப்படியானால் இப்போது வியாழனை மோதப் போகும் வால் நட்சத்திரம் என்ன ஆகும்?*

மேற்கூறிய மூன்று விதங்களில் எதாவது ஒரு விஷயத்தில் அது பாதிக்கப்படும்! இதனால் பூமிக்கு எந்த பாதிப்பும் வராது! வியாழ னுக்கும் வராது!

வியாழ பகவான் நமது பூமியை இது போன்ற வால் நட்சத்திரங் களிலிருந்து காப்பாற்றுகிறார். °°




கோணல் வட்டத்தடம் "ஹேலி" வால் நட்சத்திரத்தினுடையது. 75 வருடத்திற்கு ஒருமுறை சூரியனைச் சுற்றுகிறது. அடுத்தமுறை அது நமக்குத் தெரியும் காலம் ஜுலை 2061.

# சர்வ தேசங்கள் பிரமிக்கும் ஓடு களம்!

❒ இப்பொழுது பிரம்மாண்டமான நேரு ஸ்டேடியம் ஒரு காலத்தில் குளமாகக் காட்சியளித்தது. சென்னை நகர சபையின் வேண்டுகோளுக்கிணங்க அதனை விளையாட்டு மைதானமாக உருவாக்கித் தந்தவர் சென்னை மாகாணக் கல்லூரி உடற்பயிற்சி ஆசிரியர் பி.ஆர். சுப்பிரமணியம். ஏழே மாதங்களில் சொர்க்கபுரிபோல் அழகான நவீன ஸ்டேடியமாக உருவாக்க வழிவகுத்தவர் தமிழக முதல்வர் ஜெயலலிதா. தற்சமயம் அந்த ஸ்டேடியத்தின் ஓடு களத்தில் செயற்கை இழை பொருத்தப் பட்டது. அதற்கு 2 கோடி ரூபாய் ஆயிற்று. சர்வதேச தரத்தில் உருவான ஓடு களத்தில் சர்வதேச ஓட்டப் பந்தயமும் 33ஆவது தேசிய தடகளப் போட்டியும் இணைந்து நடந்தன. முப்பதுக்கும் மேற்பட்ட தேசங்களிலிருந்து 75க்கு மேற்பட்ட ஓட்டக் கலைஞர்களும் 750 இந்திய ஓட்டக் கலைஞர்களும் இந்தப் போட்டிகளில் பங்கேற்றனர்!

❒ சீனாவில் நீண்ட தூர ஓட்ட வீராங்கனைகளுக்குக் கடுமையான பயிற்சிகளைக் கொடுத்து உலக அரங்கில் அரங்கேற்றுகிறார் மாஜுன்ரன். இவர் பயிற்சிக்குத் தேர்ந்தெடுப்பது கிராமப்புறப் பெண்மணிகளைத்தான். அவர்களது தாய்மார்கள் கனத்த கூடைகளைத் தலையில் சுமந்து இருபது மைல்களுக்கு மேலுள்ள சந்தைக்கு நடப்பது வழக்கமாயிற்று! 1500 மீட்டர் ஓட்டப் பந்தயத்தில் உலகப்புகழ் பெற்ற க்யூ யுன்சியா ஒரு தொழிலாளியின் புதல்வியே.' தமிழகத்திலும் இப்படி எத்தனையோ இரத்தினங்கள் மறைந்துள்ளன. அவற்றை வெளிக்கொணர்வது யாரோ?



## • குண்டுமணி —

❒ பட்டிமன்ற விற்பன்னர்கள் சுதா சேஷய்யன், ராஜகோபாலன், கவிஞர் இளந்தேவன், தொலைக் காட்சி செய்தி வாசிப்பாளர்கள் சந்தியா ராஜகோபாலன், ஃபாத்திமா பாபு என்று பலர் முதல் நாள் கலை நிகழ்ச்சிகளைப் பற்றி விமர்சனம் செய்தனர்.

2500 மாணவர்களின் 'வணக்கம்' வரவேற்பு, பள்ளி மாணவர்களின் வண்ணக் கொடி ஊர்வலம், குஜராத் பாங்க்ரா நடனங்கள் கண்ணுக்கு விருந்து. இவை அனைத்தும் எங்கோ மாயாபுரியிலிருக்கிறோமோ என்ற ஐயத்தைக் கிளப்பியது.

❒ பிரத்தியேக மேடையில் 45 அடி உயரத்தில் வரலாற்றுமிக்க ஜோதி சுடர்விட்டு எரிந்து கொண்டிருந்தது! போலீஸ் இன்ஸ்பெக்டர் சோமசுந்தரம் தலைமையில் மோட்டார் சைக்கிள் வீரர்களின் வீரதீர சாகசங்கள் அனைவரையும் கவர்ந்தன. எகிப்து கோபுரம் போல் மாணவர்களின் உடற்பயிற்சிகள் விருந்தாக அமைந்தன.

❒ மதுரை ஆலைத் தொழிலாளி கண்ணனின் புதல்வி சோலைமதிக்குப் பயிற்சித் தேர்வில், சாதனை படைத்திருந்தும் இறுதி ஓட்டத்தில் ஓட இயலாதது துரதிர்ஷ்டம்! இவளது பயிற்சியாளர் பாட்ரிக்: சிறுமி சோலைமதி மதுரை ஓசிபிஎம் பள்ளியில் 10ஆவது வகுப்பு மாணவி. எத்தனை ஆவலோடு தலைநகருக்கு அவள் ஓடி வந்தாளோ?

❒ அந்நிய மண்ணின் உலகச் சாம்பியன்கள் கானாவைச் சேர்ந்த சலாம் காரிபா, பஹாமாஸ் வீராங்கனை பாலின் டேவிஸ், ரஷ்ய நாட்டு ஒலிம்பிக் சாம்பியன் எலீனா ரோமனோவா, கென்யாவின் மாலக்வென், ஷாட்புட் உலக சாம்பியன் கென்ட்லார்சன் தங்கம் சூடியவர்களில் முக்கியமானவர்கள்.

❒ நேரு ஸ்டேடியத்தில் பெண்களுக்கான சாம்பியன் விருது இரயில்வே பெண் குழுவினருக்கும், ஆடவர் சாம்பியன் விருது இராணுவக் குழுவினருக்கும், ஒட்டுமொத்த சாம்பியன் விருது இரயில்வேக்குமே கிடைத்தன. தமிழக முதல்வரிடமிருந்து மூன்றே கால் லட்சம் ரூபாய் சிறப்புச் சாதனை படைத்தவர்களுக்கு விநியோகிக்கப்பட்டன. ஷைனி வில்சனுக்குச் சென்னையில குடியேற ஒரு லட்சம் ரூபாய் விசேஷமாக வழங்கப்பட்டது!

❒ தமிழகத்துக்கு 1995ஆம் ஆண்டு 'சாப்' விளையாட்டுப் போட்டிகள் நடத்தும் உரிமை வழங்கப்பட்டுள்ளது. சர்வதேச அளவில் நீச்சல் குளம், உள் அரங்கம், சைக்கிள் வெலடிரோம், ஆன்டிரோடர்ப் ஹாக்கி மைதானம், நவீன டென்னிஸ் மைதானம் ஆகியவை விரைவில் உருவாக்கத் தீர்மானித்துள்ளார் தமிழக முதல்வர். சென்னை சர்வதேச விளையாட்டுகளைத் தரமாக நடத்தும் வசதிகளைப் பெற்று உலக அரங்கில் ஒரு கேந்திரமாகத் திகழும் நன்னாளை எதிர்பார்ப்போமாக.

# உங்கள் ராசி பலன்

**15-3-1994** முதல்
**13-4-1994** வரை

## வித்வான். வே. லட்சுமணன்

|  |  |  |  |
|---|---|---|---|
| சூரி சுக் |  | கேது |  |
| செ, புத சனி | கிரக நிலை |  |  |
|  |  |  |  |
|  | ராகு | குரு (வ) |  |

### கிரக மாறுதல்

27-3-1994 முதல் மேஷ-சுக்கிரன். 5-4-1994 முதல் மீன-புதன். 6-4-1994 முதல் மீன-செவ்வாய்.

### கிரக பாதசாரம்

சூரியன் - பூரட்டாதி 4. சந்திரன் - அசுவினி 1. செவ்வாய் - சதயம் 2. புதன் அவிட்டம் 3. குரு - விசாகம் 1 (வக்ரி) சுக்கிரன் - உத்திரட்டாதி 4. சனி - சதயம் 2. ராகு - அனுஷம் 1. கேது - கிருத்திகை 3.

**மேஷம்** : *(அசுவினி, பரணி, கிருத்திகை 1ஆம் பாதம் முடிய)*

குரு, செவ்வாய், சனி ஆகியோரது சஞ்சாரம் திருப்திகரமாக இருப்பதால் உங்கள் புத்திசாலித் தனமும், செயல் திறமையும் வெளிப்படும். எடுத்த காரியங்களில் வெற்றி பெறுவீர்கள். நல்லோர் நேசம் கிட்டும். நற்பணிகளில் ஈடுபாடு கூடும். பொருளா தார நிலை உயரும். திடீர்ப் பொருள் வரவும் கூடிவரும். ஸ்பெகுலேஷன், கொடுக்கல்-வாங்கல் இனங்கள் லாபம் தரும். பொறியியல், சட்டம், காவல், இராணுவம் போன்ற துறைகளைச் சேர்ந்தவர்கள் வெற்றி நடைபோடுவார்கள். நிலம், மனை, வீடு, வாகனங்களால் அனுகூலம் உண் டாகும். தொழிலாளர்களும், விவசாயிகளும் தங்கள் நோக்கம் நிறைவேறப் பெறுவார்கள். வியாபாரம் வளர்ச்சி பெறும். மக்களால் பெற்றோருக்கும், பெற்றோரால் மக்களுக்கும் நன்மைகள் உண்டாகும்.

உடன்பிறந்தவர்கள் உங்களுக்குப் பக்கபலமாக விளங்குவார்கள். வழக்கு, விவகாரங்களில் நல்ல திருப்பத்தைக் காண்பீர்கள். எதிர்ப்புகள் என்பவை அகலும். போட்டிப் பந்தயங்களில் வெற்றி கிட்டும். எழுத்தாளர்களும், பத்திரிகையாளர்களும் முன் னணிக்கு உயருவார்கள். சினிமா, சங்கீதம் போன்ற கலைத்துறையினருக்கு வெற்றி வாய்ப்புகள் அதி கரிக்கும். கணவன், மனைவியிடையே களிப்புறவு கூடும். கூட்டுத் தொழில் லாபம் தரும். ஏப்ரல் மாதத் தொடக்கத்திலிருந்து செலவுகள் சற்று அதிகரிக்கும். உடல் நலனில் கவனம் தேவைப் படும். வீண்சண்டை, சச்சரவுகளில் பிரவேசிக்க லாகாது. வியாபாரிகள், இயந்திரப் பணியாளர்கள் ஆகியோர் பொறுப்புடன் காரியமாற்றுவது அவசிய மாகும். ராகு, கேது பிரீதி செய்வது நல்லது. மார்ச் 15,16,18,19,22,23,26,27,29 ஏப்ரல் 2,5,8,9,10,12 தேதிகள் சிறப்பானவை. வடகிழக்கு, மேற்குத் திசைகள் அனுகூலமானவை. துலா, கும்ப ராசிக் காரர்கள் உதவுவார்கள். 3,6,8,9 எண்கள் அதிர்ஷ்டமானவை.

**ரிஷபம்** : *(கிருத்திகை 2ஆம் பாதம் முதல், ரோகிணி, மிருகசீரிஷம் 2ஆம் பாதம் முடிய)*

ராசிநாதன் பலம் பெற்று உலவுவதாலும், 10இல் உள்ள கிரகங்கள் அனுகூலமாகச் சஞ்சரிப்பதாலும் உங்கள் மனதில் துணிவும், தன்னம்பிக்கையும் பிறக்கும். தோற்றப்பொலிவு கூடும். எடுத்த காரியங்களை எப்பாடுபட்டாவது நிறைவேற்றி வருவீர்கள். எதிர்ப்புகள் என்பவை குறையும். வியா பாரம் அபிவிருத்தி அடையும். தொழிலாளர்களது கோரிக்கை நிறைவேறும். விவசாயிகள் தங்கள் எண்ணம் ஈடேறப் பெறுவார்கள். பொறியியல் சட்டம், காவல், இராணுவம் போன்ற துறைகளைச் சேர்ந்தவர்கள் சாதனை படைப்பார்கள். அரசுப் பணியாளர்களுக்கும், அரசியல் வாதிகளுக்கும் செழிப்பான சூழ்நிலை உருவாகும். மாணவர்கள் மந்தநிலை விலகப் பெறுவார்கள். புதிய ஆடை, அணிமணிகள், அலங்காரப்பொருட்களின் சேர்க்கை நிகழும்.

கேளிக்கை, விநோதங்களில் பங்கேற்பீர்கள். நிலபுலங்களால் ஆதாயம் கிடைத்துவரும். பெற்றோரால் நலம் உண்டாகும். மருத்துவம், இரசாயனம், விஞ்ஞானம் போன்ற துறைகளைச் சேர்ந்தவர்கள் வளர்ச்சி காண்பார்கள். நிர்வாகத் துறைகளைச் சேர்ந்தவர்களுக்கு வரவேற்பு அதி கரிக்கும். சினிமா, சங்கீதம் போன்ற கலைத் துறைகளைச் சேர்ந்தவர்கள் உற்சாகம் கூடப் பெறுவார்கள். மாதர்களது குறிக்கோள் நிறை வேறும். குரு 6இல் உலவினாலும் வக்கிரநிலையில்

இருப்பதால் அவரால் அதிகம் சங்கடம் ஏற்படாது. பொருள் வரவும் செலவும் சமமாகவே இருந்து வரும். ஏப்ரல் மாதத் தொடக்கத்திலிருந்து வெற்றி வாய்ப்புகள் அதிகரிக்கும். முக்கியமான ஓரிரு எண்ணங்களும் ஈடேறும். ராகு, கேதுக்களின் சஞ்சாரம் திருப்திகரமாக இல்லாததால் சர்ப்பசாந்தி செய்வது நல்லது. வீண் அலைச்சலைத் தவிர்ப்பது அவசியமாகும். மார்ச் 15,16,18,19,22,23,26,27,29,30,31 ஏப்ரல் 5,8,9,10,12 தேதிகள் அனுகூலமானவை. தென்கிழக்கு, கிழக்குத் திசைகள் அனுகூலமானவை. கும்ப, மீன ராசிக்காரர்கள் உதவுவார்கள். 1,6,9 எண்கள் அதிர்ஷ்டமானவை.

**மிதுனம்** : *(மிருகசீரிஷம் 3ஆம் பாதம் முதல், திருவாதிரை, புனர்பூசம் 3ஆம் பாதம் முடிய)*

சூரியன், குரு ஆகியோருடைய அனுகூலமான சஞ்சாரம் காரணமாக உங்கள் ஆற்றல் வெளிப்படும். மதிவளம் கூடும். செயற்கரிய சாதனைகளைச் செய்து மற்றையோரின் பாராட்டுகளுக்கு உரியவர்களாவீர்கள். முயற்சிகள் பலன் அளிக்கும். எழுத்தாளர்களுக்கும், பத்திரிகையாளர்களுக்கும் உற்சாகமான சூழ்நிலை உருவாகும். சினிமா, சங்கீதம் போன்ற கலைத்துறைகளைச் சேர்ந்தவர்கள் வெற்றி நடைபோடுவார்கள். அலுவலகங்களில் பணிபுரிபவர்களுக்கு மதிப்பு உயரும். மருத்துவம், இரசாயனம், விஞ்ஞானம் போன்ற துறைகள் ஆக்கம் தரும். உடன் பிறந்தவர்கள் ஓரளவு உதவுவார்கள். மக்கள் நலம் மகிழ்ச்சி தரும். மக்களால் ஓரிரு காரியங்கள் ஈடேறப் பெறுவீர்கள்.

வெளிநாட்டுத் தொடர்பு ஆக்கம் தரும். ஆசிரியர்கள், பேராசிரியர்கள், சட்ட வல்லுநர்கள், ஆகியோர் தங்கள் நிலை உயரப் பெறுவார்கள். அரசியல்வாதிகளும், அரசுப்பணியாளர்களும் தங்கள் குறிக்கோள் நிறைவேறப் பெறுவார்கள். 27ஆம் தேதி முதல் கலைத்துறையினருக்கு வெற்றி வாய்ப்புகள் மேலும் கூடும். மாதர்களது நலம் திருப்திகரமாக இருந்துவரும். வாழ்க்கைத் துணைவரால் அனுகூலம் உண்டாகும். வியாபாரிகள் பொறுப்புணர்ந்து காரியமாற்றினால் வளர்ச்சி காணலாம். ஏப்ரல் 6ஆம் தேதி முதல் பொறியியல் சட்டம், காவல், இராணுவம் போன்ற துறைகளைச் சேர்ந்தவர்கள் வெளிச்சமான பாதையைக் காண்பார்கள். எதிர்ப்புகள் என்பவை அகலும். துணிச்சலான காரியங்களில் ஈடுபாடு கூடப் பெறுவீர்கள். மார்ச் 15,16,18,19,22,23,26,27,29,30,31 ஏப்ரல் 2,8,9,10,12 தேதிகள் சிறப்பானவை. வடகிழக்கு, கிழக்குத் திசைகள் அனுகூலமானவை. துலா, மீன ராசிக்காரர்கள் உதவுவார்கள். 1,3,4,6 எண்கள் அதிர்ஷ்டமானவை.

**கடகம்** : *(புனர்பூசம் 4ஆம் பாதம் முதல், பூசம், ஆயில்யம் முடிய)*

கோசாரப்படி, பெரும்பாலான கிரகங்கள் அனுகூலமான நிலையில் சஞ்சரிக்காததால் விசேடமான நன்மைகளை நீங்கள் இந்த நேரத்தில் எதிர்பார்க்க இயலாது. நூதனமான முயற்சிகளை ஒத்திப் போடுவது நல்லது. மாமூலான காரியங்களில்கூட அதிகம் அக்கறையுடன் ஈடுபடுவது அவசியமாகும். வீண் அலைச்சலைக் குறைத்துக் கொள்வது நல்லது. பயணத்தின்போது பாதுகாப்புத் தேவை. உடல்நலனில் அக்கறை செலுத்த வேண்டிவரும். பேச்சில் சூடான வார்த்தைகளை உதிர்க்காமல் இருப்பது நல்லது. பெரியவர்களின் மனம் புண்படும்படி நடக்கலாகாது. தீயவர்களின் தொடர்பை விட்டு விலகுவதன் மூலம் சங்கடங்களுக்கு ஆட்படாமல் தப்பலாம். மனதில் குழப்பம் அகன்று தெளிவு காண இறைவழிபாட்டில் கவனத்தைச் செலுத்துவது நல்லது.

பொருள்வரவு சீராகவே இருந்துவரும். எதிர்பாராத செலவுகள் அவ்வப்போது ஏற்படும். வழக்கு, வியாஜ்ஜியங்களில் அனுகூலமான போக்கைக் காண்பது அரிதாகும். வீண்சண்டை, சச்சரவுகளில் ஈடுபட வேண்டாம். சினிமா, சங்கீதம் போன்ற கலைத்துறைகளைச் சேர்ந்தவர்கள் ஓரளவு வளர்ச்சி காண்பார்கள். பெண்களுக்கு ஓரிரு எண்ணங்கள் ஈடேறும். மாணவர்கள் படிப்பில் முழுமையான அக்கறை செலுத்தினால் ஓரளவு வளர்ச்சி காணலாம். மக்களாலும், உடன்பிறந்தவர்களாலும் ஓரிரு சோதனைகள் ஏற்படும். கணவன், மனைவி உறவு நிலை ஒருநாள் போல் மறுநாளிராது. உங்கள் ஜனனகால ஜாதகப்படி தற்சமயம் யோக பலம் உள்ள தசை, புக்தி, அந்தரங்கள் நடைபெறுமானால் சங்கடங்கள் என்பவை குறையும். மார்ச் 15,16,18,19,22,23,26,27,29,30,31 ஏப்ரல் 2,9,10,12 தேதிகள் சுமாரானவை. வடமேற்கு, தென்கிழக்குத் திசைகள் நலம் தரும். மீன, ரிஷப ராசிக்காரர்கள் உதவுவார்கள். 6,7 எண்கள் அதிர்ஷ்டமானவை.

**சிம்மம்** : *(மகம், பூரம், உத்திரம் 1ஆம் பாதம் முடிய)*

முக்கியமான கிரகங்கள் அனுகூலமான நிலையில் சஞ்சரிக்காததால் உங்கள் தேக ஆரோக்கியம் சீராக இராது. அலைச்சல் அதிகரிக்கும், மனத்தில் கவலைகள் குடிகொள்ளும். எடுத்த காரியத்தை நிறைவேற்ற அரும்பாடுபட வேண்டிவரும். அரசு விவகாரங்களில் அனுகூலமான போக்கைக் காண்பது அரிது. அந்தஸ்தும், மதிப்பும் சாதாரணமாகவே காணப்படும். மக்கள் நலம் கவனிக்கப்பட வேண்டிவரும். கணவன், மனைவி இடையே சலசலப்புகள் கூடும். சுமுகமாகப் பழகிவருவது அவசியமாகும். கூட்டாகத் தொழில் செய்பவர்கள் பங்குதாரர்களிடம் பக்குவமாகப் பழகிவருவது அவசியமாகும். பயணத்தைத் தவிர்ப்பது நல்லது. எக்காரியத்திலும் பதற்றத்திற்கு இடம் தராமல் பொறுமையுடன் ஈடுபட்டால் விபத்துக்கு ஆளாகாமல் தப்பலாம்.

தொழிலாளர்களும், விவசாயிகளும், உத்தியோகஸ்தர்களும், வியாபாரிகளும் தங்கள் கடமைகளைச் சரிவர ஆற்றிவந்தால் சங்கடங்களுக்கு ஆட்படாமல் தங்களைக் காத்துக் கொள்ளலாம். தீயோர் தொடர்பு கூடாது. நல்லவர்களின் நட்புறவை நாடிப் பெற்று, அவர்களின் அறிவுரைகளின்படி நடந்து வருவது நல்லது. அதன்மூலம் நலம் கூட வழி பிறக்கும். பேச்சில் கடுமையைக் குறைத்து இனிமை

## மணமகன் தேவை

தெலுங்கு வைதிகி பாரத்வாஜம் பரணி B.Sc., B.Ed., 30/155/1300 ஆசிரியை பெண்ணிற்கு பட்டதாரி நல்ல வேலையில் உள்ள மணமகன் தேவை. (2301) ஸ்வயம்வராலயா, 18, ஸ்டேஷன் ரோடு, மேற்கு மாம்பலம், சென்னை - 33.

வடமாள் ஸ்ரீவத்ஸ புனர்பூசம் B. Com. ICWA (Inter) 22/162/2750 Bank employed பெண்ணிற்கு well qualified well employed வரன் தேவை. (2302) ஸ்வயம் வராலயா, 18, ஸ்டேஷன் ரோடு, மேற்கு மாம்பலம், சென்னை - 33.

வடமாள் ஸங்கிருதி பூராடம் M.Sc., M.Phil 24/160 பெண்ணிற்கு well qualified/ employed வரன் தேவை. (2307) ஸ்வயம் வராலயா, 7-ஏ, சாந்தி விஹார் காம்ப் ளக்ஸ், லஸ், சென்னை - 4.

வடமாள் கௌசிகம் மூலம் B.Com. (M.Com) 21/157 பெண்ணிற்கு Professional வரன் தேவை. (2309) ஸ்வயம்வரா லயா, 18, ஸ்டேஷன் ரோடு, மேற்கு மாம்பலம், சென்னை - 33.

மாத்வாகன்னடா வஷிஸ்டா ஆயில்யம் M.Sc., PGDCA 23/158 பெண் ணிற்கு PG/CA decently employed வரன் தேவை. (2303) ஸ்வயம்வராலயா, 18, ஸ்டேஷன் ரோடு, மேற்கு மாம்பலம், சென்னை - 33.

மூலக நாடு கௌண்டின்யம் பூராடம் B.Com., 31/160 பெண்ணிற்கு educated/well employed வரன் தேவை. (2304) ஸ்வயம்வராலயா, 18, ஸ்டேஷன் ரோடு, மேற்கு மாம்பலம், சென்னை - 33.

வடகலை ஸ்ரீவத்ஸ பூரட்டாதி M.Ed., Ph.D 34/165 பெண்ணிற்கு Professionals Well placed வரன் தேவை. (2306) ஸ்வயம்வரா லயா, 7-ஏ, சாந்தி விஹார் காம்ப் ளக்ஸ், லஸ், சென்னை - 4.

ப்ரகசரணம் காஸ்ய புனர்பூசம் ACA ICWA Dip. in Journalism 25/158/6000 Dy. Manager பெண்ணிற்கு Engr/Professionals வரன் தேவை. (2308) ஸ்வயம்வரா லயா, 18, ஸ்டேஷன் ரோடு, மேற்கு மாம்பலம், சென்னை - 33.

வடமாள் நைத்ருப காஸ்யப உத்திரம் Doing M.L. 24/155 Legal Officer பெண்ணிற்கு PG/Professional வரன் தேவை. (2313) ஸ்வயம்வராலயா, 7-ஏ, சாந்தி விஹார் காம்ப்ளக்ஸ், லஸ், சென்னை - 4.

வடமாள் கௌண்டின்ய உத்திரம் M.Com B.Ed., 27/158/3000 Lecturer Bombay பெண்ணிற்கு Professionally qualified வரன் தேவை. (2316) ஸ்வயம்வராலயா, 18, ஸ்டேஷன் ரோடு, மேற்கு மாம்பலம், சென்னை - 33.

நியோகி பிராமின் பாரத்வாஜம் ரோகிணி M.A. 23/160 பெண்ணிற்கு ஏற்ற வரன் தேவை. (2312) ஸ்வயம்வரா லயா, 7-ஏ, சாந்தி விஹார் காம்ப் ளக்ஸ், லஸ், சென்னை - 4.

வடகலை பாரத்வாஜம் கேட்டை M.Sc., 24/162 பெண்ணிற்கு Well Qualified Employed வரன் தேவை. (2327) ஸ்வயம் வராலயா, 18, ஸ்டேஷன் ரோடு, மேற்கு மாம்பலம், சென்னை - 33.

பிரகசரணம் ஸ்ரீவத்ஸ கார்த்திகை M.Sc., 24/162/2000 Pvt. Co., பெண்ணிற்கு தகுந்த வரன் தேவை. (2330) ஸ்வயம் வராலயா, 18, ஸ்டேஷன் ரோடு, மேற்கு மாம்பலம், சென்னை - 33.

தென்கலை வாதூல கேட்டை M.Sc., (Comp. Science) 23/160 பெண்ணிற்கு ஏற்ற வரன் தேவை. (2333) ஸ்வயம் வராலயா, 18, ஸ்டேஷன் ரோடு, மேற்கு மாம்பலம், சென்னை - 33.

தென்கலை ஹரித கேட்டை +2 (Doing M.A.) 26/160 பெண்ணிற்கு ஏற்ற வரன் தேவை. (2341) ஸ்வயம்வராலயா, 18, ஸ்டேஷன் ரோடு, மேற்கு மாம்பலம், சென்னை - 33.

மாத்வா வசிஷ்டா புஷ்யா (B.A.) UNX-C 23/162 பெண்ணிற்கு Well settled வரன் தேவை. (2339) ஸ்வயம்வரா ல்யா, 18, ஸ்டேஷன் ரோடு, மேற்கு மாம்பலம், சென்னை - 33.

வடமாள் கௌண்டின்யம் மிருக சீர்ஷம் B.Sc., M.A. 29/155/4500 Grindlays Bank பெண்ணிற்கு Professionally Qualified வரன் தேவை. (2318) ஸ்வயம்வராலயா, 18, ஸ்டேஷன் ரோடு, மேற்கு மாம்பலம், சென்னை - 33.

வடமாள் பாரத்வாஜம் உத்திரட் டாதி B. Com., C.A. 27/158 Pvt. Company பெண்ணிற்கு Professionally Qualified வரன் தேவை. (2320) ஸ்வயம்வராலயா, 7-ஏ, சாந்தி விஹார் காம்ப்ளக்ஸ், லஸ், சென்னை - 4.

## மணமகள் தேவை

வடமாள் பாரத்வாஜம் ரேவதி ACA, AICWA, ACS 27/175 Practising Chartered Accountant வரனுக்கு பட்டதாரி பெண் தேவை. (2299) ஸ்வயம்வராலயா, 18, ஸ்டேஷன் ரோடு, மேற்கு மாம்பலம், சென்னை - 33.

வடமாள் வாதூல உத்திரம் +2 DCA 27/160/3000 Air Force வரனுக்கு பட்டதாரி வேலைக்குச் செல்லாத மணமகள் தேவை. (2300) ஸ்வயம்வராலயா, 18, ஸ்டேஷன் ரோடு, மேற்கு மாம்பலம், சென்னை - 33.

வடமாள் கௌசிகம் அவிட்டம் B.Sc., PGDCA 32/160/5000 PVT Pune வரனுக்கு பட்டதாரி வேலைக்குச் செல்லும்/செல் லாத பெண் தேவை. (2311) ஸ்வயம் வராலயா, 7-ஏ, சாந்தி விஹார் காம்ப் ளக்ஸ், லஸ், சென்னை - 4.



வடகலை ஷடமர்ஷணம் புனர்பூசம் B.Com 34/163/3100 Private Co., வரனுக்கு பட்டதாரி வேலைக்குச் செல்லும் பெண் தேவை. (2314) ஸ்வயம் வராலயா, 7-ஏ, சாந்தி விஹார் காம்ப் ளக்ஸ், லஸ், சென்னை - 4.

தென்கலை வாதூலம் ஹஸ்தம் B. Tech, MBA 29/170/10,000 Executive Bombay வரனுக்கு PG/Professionals மணமகள் தேவை. (2315) ஸ்வயம்வராலயா, 18, ஸ்டேஷன் ரோடு, மேற்கு மாம்பலம், சென்னை - 33.

ஸ்மார்த்தா 6000 நியோகி கௌசிக பூரம் B.Sc., B.Ed., LLB 31/171/4000 LIC வரனுக்கு ஏற்ற மணமகள் தேவை. (2322) ஸ்வயம்வராலயா, 18, ஸ்டேஷன் ரோடு, மேற்கு மாம்பலம், சென்னை - 33.

தெலுங்காணிப்பு கௌதம கிருத்திகை D.T.T. 29/168/25,000 Abudhabi வரனுக்கு ஏற்ற மணமகள் தேவை. (2328) ஸ்வயம்வராலயா, 18, ஸ்டேஷன் ரோடு, மேற்கு மாம்பலம், சென்னை - 33.

வடமாள் ஆத்ரேய உத்திரட்டாதி B.E. 28/175/65,000 Australia வரனுக்கு Well Qualified மணமகள் தேவை. (2325) ஸ்வயம்வராலயா, 18, ஸ்டேஷன் ரோடு, மேற்கு மாம்பலம், சென்னை - 33.

வடமாள் காசியபா புஷ்யம் B.D.S 25/180 Dental Surgeon வரனுக்கு ஏற்ற மணமகள் தேவை. (2326) ஸ்வயம் வராலயா, 18, ஸ்டேஷன் ரோடு, மேற்கு மாம்பலம், சென்னை - 33.

வடமாள் ஸ்ரீவத்ஸ கிருத்திகை B.Com 31/168/7000 Madras Stock Exchange வரனுக்கு ஏற்ற மணமகள் தேவை. (2334) ஸ்வயம்வராலயா, 18, ஸ்டேஷன் ரோடு, மேற்கு மாம்பலம், சென்னை - 33.

வடகலை ஸ்ரீவத்ஸ பூசம் B.Sc., 30/172 Oriental Insurance Co., High Income வரனுக்கு ஏற்ற மணமகள் தேவை. (2331) ஸ்வயம் வராலயா, 7-ஏ, சாந்தி விஹார் காம்ப் ளக்ஸ், லஸ், சென்னை - 4.

வடமாள் கர்க உத்திராடம் B.Sc., PGDCA 30/172/3,500 S. Govt. Delhi வரனுக்கு பட்டதாரி பெண் தேவை. (2338) ஸ்வயம்வராலயா, 18, ஸ்டேஷன் ரோடு, மேற்கு மாம்பலம், சென்னை - 33.

யைக் கூட்டிக் கொள்வது அவசியமாகும். தந்தை நலன் கவனிக்கப்பட வேண்டிவரும். பெற்றோரால் அனுகூலம் பெற வாய்ப்புக் குறைவு. கலைஞர்கள் ஓரளவு வளர்ச்சி காண்பார்கள். பொறியியல், சட்டம், காவல், இராணுவம் போன்ற துறைகளைச் சேர்ந்தவர்கள் அகலக் கால் வைக்கவேண்டாம். இறைவழிபாட்டில் தொடர்ந்து ஈடுபடுவது நல்லது. மார்ச் 15,16,18,19,22,23,26,27,29,30,31 ஏப்ரல் 2,5,12 தேதிகள் சுமாரானவை. தென்கிழக்கு, வடமேற்குத் திசைகள் அனுகூலமானவை. மேஷ, ரிஷப ராசிக் காரர்கள் உதவுவார்கள். 6,7 எண்கள் அதிர்ஷ்டமானவை.

---

**கன்னி** : *(உத்திரம் 2ஆம் பாதம் முதல், ஹஸ்தம், சித்திரை 2ஆம் பாதம் முடிய)*

குரு, சனி, செவ்வாய் ஆகிய முக்கியமான கிரகங்கள் அனுகூலமான நிலையில் சஞ்சரிப்பதால் உங்கள் அபிலாஷைகள் சுலபமாக நிறைவேறும். துணிவோடும், தன்னம்பிக்கையோடும் செயலாற்று வீர்கள். வாக்குவன்மை வெளிப்படும். குடும்பத்தில் குதூகலம் கூடும். பொறியியல், சட்டம், காவல், இராணுவம் போன்ற துறைகளைச் சேர்ந்தவர்கள் முன்னணிக்கு உயருவார்கள். பண நடமாட்டம் திருப்தி தரும். கடன் உபத்திரவம் குறையும். எதிரிகள் விலகிப் போவார்கள். வழக்கு, வியாஜ்ஜியங்களில் அனுகூலமான போக்கைக் காணமுடியும். உத்தியோகஸ்தர்கள் செழிப்பான சூழ்நிலையைக் காண்பார்கள். தொழிலாளர்களது குறிக்கோள் நிறைவேறும். விவசாயிகளுக்கும், ரியல் எஸ்டேட் துறைகளைச் சேர்ந்தவர்களுக்கும் ஆதாயம் கூடும்.

இயந்திரப்பணிகள் லாபம் தரும். ஆசிரியர்களும், பேராசிரியர்களும் தங்கள் மதிப்பு உயரப் பெறுவார்கள். பிற மொழி, மதக்காரர்களது தொடர்பு ஆக்கம் தரும். முக்கியமானவர்கள் உங்கள் வளர்ச்சிக்கு உற்ற துணையாக விளங்குவார்கள். 27ஆம் தேதி முதல் கலைத்துறைகளைச் சேர்ந்தவர்கள் உற்சாகம் கூடப் பெறுவார்கள். வியாபாரிகளுக்கு விசேடமான வளர்ச்சி இராது. அவர்கள் புதிய துறைகளில் இந்த நேரத்தில் ஈடுபடாமல் இருப்பது நல்லதாகும். வாழ்க்கைத் துணைநலம் ஒருநாள் போல் மறுநாளிராது. கூட்டாகத் தொழில் செய்பவர்கள் பங்குதாரர்களிடம் விழிப்புடன் பழகுவது நல்லது. அலைச்சலைக் குறைத்துக் கொள்வது அவசியம். மார்ச் 18,19,22,23,26,27,29,30,31. ஏப்ரல் 2,5,8,9,10 தேதிகள் சிறப்பானவை. வடகிழக்கு, மேற்குத் திசைகள் அனுகூலமானவை. துலா, மிதுன ராசிக்காரர்கள் உதவுவார்கள்.

---

**துலாம்** : *(சித்திரை 3ஆம் பாதம் முதல், சுவாதி, விசாகம் 3ஆம் பாதம் முடிய)*

6இல் உள்ள சூரியன் உங்கள் ஆற்றலை வெளிப்படுத்துவார். எதிர்ப்புகளைச் சமாளிக்கக் கூடிய சக்தியைப் பெறுவீர்கள். அரசு விவகாரங்கள் ஆக்கம் தரும். நிறுவன, நிர்வாகத்துறைகளைச் சேர்ந்தவர்கள் தங்கள் நிலை உயரப் பெறுவார்கள். எலக்ட்ரானிக், கம்ப்யூட்டர் துறைகளைச் சேர்ந்தவர்கள் ஆதாயம் கூடப் பெறுவார்கள். சினிமா, சங்கீதம் போன்ற கலைத்துறைகளைச் சேர்ந்தவர்கள் பொறுப்புடன் காரியமாற்றினால் வளர்ச்சி காணலாம். அலைச்சல் சற்று அதிகரிக்கும். உடல்நலனில் கவனம் செலுத்திவருவது நல்லது. மனத்தில் ஓரிரு கவலைகள் சூழும். அவற்றைக் குறைத்துக் கொள்ள இறைவழிபாட்டில் கவனம் செலுத்துவது நல்லது. நல்லவர்களின் தொடர்பை வலுப்படுத்திக் கொள்வதன் மூலமும், அவர்களின் அறிவுரைகளை மதித்து ஏற்றுக் கொள்வதன் மூலமும் சங்கடங்களுக்கு ஆட்படாமல் தப்பமுடியும்.

பேச்சில் சூடான வார்த்தைகளை உதிர்க்கலாகாது. பிற மொழி, மதக்காரர்களிடம் அதிகம் நெருக்கம் வேண்டாம். உணவு விஷயத்தில் கட்டுப்பாடு தேவை. குடும்பத்தில் சிறுசிறு பிரச்னைகள் அவ்வப்போது உண்டாகும். பக்குவத்துடன் சமாளிப்பது அவசியம். மக்கள் நலம் கவனிக்கப்பட வேண்டிவரும். கணவன், மனைவியர் உறவு நிலை சீராகவே இருந்துவரும். ஏப்ரல 6ஆம் தேதி முதல் செவ்வாய் பலம் கூடுவதால் சங்கடங்கள் என்பவை குறைய ஆரம்பிக்கும். இயந்திரப் பணியாளர்களும், இஞ்சினீயர்களும் வெளிச்சமான பாதையைக் காண்பார்கள். நிலபுலங்களால் ஆதாயம் பெறச் சந்தர்ப்பம் கூடிவரும். தெய்வப் பணிகளிலும், தருமப்பணிகளிலும் ஈடுபாடு உள்ளவர்கள் மனத்தெளிவு பெறுவார்கள். மார்ச் 15,16,22,23,26,27,29,30,31 ஏப்ரல் 2,5,8,9,10,12 தேதிகள் சிறப்பானவை. கீழ்த்திசை நலம் தரும். விருச்சிக, மிதுன ராசிக்காரர்கள் உதவுவார்கள். 1,5,8 எண்கள் நலம் தரும்.

---

**விருச்சிகம்** : *(விசாகம் 4ஆம் பாதம் முதல், அனுஷம், கேட்டை முடிய)*

குரு, சனி, செவ்வாய் ஆகியோரது நிலை திருப்திகரமாக இல்லாததால் நீங்கள் எடுத்த காரியங்களை நிறைவேற்ற அரும்பாடுபட வேண்டிவரும். அங்குமிங்கும் அலைந்து திரிய வேண்டிவரும். உடல் ஆரோக்கியம் சீராக இராது. பொருளாதார நிலை சாதாரணமாகவே காணப்படும். சுபச் செலவுகள் கூடும். ஸ்பெகுலேஷன், கொடுக்கல்-வாங்கல் இனங்களால் அதிகம் அனுகூலத்திற்கு இடமிராது. பயணத்தை ஒத்திப்போடுவது நல்லது. எக்காரியத்திலும் பதற்றத்திற்கு இடம் தராமல் பொறுமையுடன் ஈடுபடுவது அவசியமாகும். நூதன நட்பு வேண்டாம். நிலம், மனை, வீடு, வாகனங்கள் சம்பந்தப்பட்ட இனங்களால் அனுகூலத்திற்கு இடமிராது. வீண் அலைச்சலைத் தவிர்ப்பது நல்லது. கூட்டுத் தொழிலில் கவனம் தேவைப்படும்.

குடும்பத்தில் சிறுசிறு பிரச்னைகள் தலைதூக்கும். பக்குவத்துடன் சமாளிப்பது நல்லது. உற்றார், உறவினரால் ஓரிரு தொல்லைகள் சூழும். மக்களால் செலவுகள் கூடும். சினிமா, சங்கீதம் போன்ற கலைத்துறைகளைச் சேர்ந்தவர்களும், மாதர்களும், சமுதாய நலப்பணியாளர்களும் 26ஆம் தேதி வரையிலும் முன்னேற்றமான சூழ்நிலையைக் காண்பார்கள். அதன்பிறகு சுக்கிர பலம் குறைவதால் ஓரிரு சோதனைகளுக்கு உள்ளாக நேரும். தீயவர்களின் தொடர்பை விட்டு விலகி, நல்லவர்களின்

நட்புறவை வலுப்படுத்திக் கொள்வது நல்லது. அதன்மூலம் சங்கடங்களுக்கு ஆட்படாமல் தப்ப லாம். தெய்வ வழிபாட்டில் ஈடுபடுவதன் மூலம் மனத்தெளிவு பெற முடியும். அரசு விவகாரங்கள் அளவோடு நலம் தரும். நிறுவன, நிர்வாகத் துறைகளைச் சேர்ந்தவர்களுக்கு மாமூலான வளர்ச்சி பாதிக்கப்படாது. மார்ச் 15,16,18,23,26,27,29,30,31 ஏப்ரல் 2,5,8,9,10,12 தேதிகள் சிறப்பானவை. தென் கிழக்கு, கிழக்குத் திசைகள் அனுகூலமானவை. மீன ராசிக்காரர்கள் உதவுவார்கள். 1,6 எண்கள் அதிர்ஷ்டமானவை.

---

தனுசு : *(மூலம், பூராடம், உத்திராடம் 1ஆம் பாதம் முடிய)*

---

குரு, செவ்வாய், சனி ஆகிய முக்கியமான கிர கங்கள் அனுகூலமான நிலையில் சஞ்சரிப்பதால் உங்கள் மனத்தில் துணிவும், தன்னம்பிக்கையும் கூடும். எடுத்த காரியங்கள் வெற்றி பெறும். புத்தி சாலித்தனம் காரணமாக செயற்கரிய சாதனைகளை ஆற்றி, மற்றையோரால் பாராட்டப்படுவீர்கள். இயந்திரப்பணிகள் ஆக்கம் தரும். சட்டம், காவல், இராணுவம் போன்ற துறைகளைச் சேர்ந்தவர்கள் சுபிட்சம் காண்பார்கள். தொழிலாளர்களது நிலை உயரும். விவசாயிகள் தங்கள் குறிக்கோளில் வெற்றி காண்பார்கள். பணவரவு திருப்தி தரும். நண்பர்கள், உற்றார், உறவினர்களால் அனுகூலம் உண்டாகும். கேளிக்கை, உல்லாசங்களில் ஈடுபாடு கூடப் பெறுவீர்கள். பயணம் பயன்படும். கடிதப் போக்குவரத்து நற்செய்தி கொண்டுவரும்.

மனத்திற்கினிய சம்பவங்கள் வாழ்க்கையில் நிகழும். மக்கட்பேறு அல்லது மக்களால் பாக்கியம் பெறுவீர்கள். குடும்பத்தில் குதூகலம் கூடும். எழுத்தாளர்களும், பத்திரிகையாளர்களும் முன்ன ணிக்கு உயருவார்கள். சினிமா, சங்கீதம் போன்ற கலைத்துறைகளைச் சேர்ந்தவர்கள் வெற்றிப் படிகளில் முன்னேறுவார்கள். புதிய ஆடை, அணி மணிகளின் சேர்க்கை நிகழும். நிலம், மனை, வீடு, வாகனங்களால் அனுகூலம் உண்டாகும். ஸ்பெகு லேஷன், கொடுக்கல்-வாங்கல் இனங்கள் லாபம் தரும். நூதனமானவர்கள் உங்களுக்கு உதவ முன் வருவார்கள். அலுவலகங்களில் பணிபுரிபவர்கள், தங்கள் நிலை உயரப் பெறுவார்கள். மாதர்களது எண்ணம் நிறைவேறும். வியாபாரிகள் பொறுப் புடன் காரியமாற்றினால் வளர்ச்சி காணலாம். ஏப்ரல் 6ஆம் தேதி முதல் அலைச்சல் சற்று அதிக ரிக்கும். உஷ்ணாதிக்கம் கூடும். உடல் நலனில் கவ னம் செலுத்துவது நல்லது. மார்ச் 15,16,18,19,26,27, 29,30,31 ஏப்ரல் 2,5,8,9,10,12 தேதிகள் சிறப்பானவை. வடகிழக்கு, தென்கிழக்குத் திசைகள் அனுகூல மானவை. கும்ப, மீன, துலா ராசிக்காரர்கள் உதவுவார்கள். 3,6,7,8,9 எண்கள் அதிர்ஷ்ட மானவை.

---

மகரம் : *(உத்திராடம் 2ஆம் பாதம் முதல், திருவோணம், அவிட்டம் 2ஆம் பாதம் முடிய)*

---

சூரியன், சுக்கிரன், ராகு ஆகியோருடைய அனு கூலமான சஞ்சாரம் காரணமாக உங்கள் ஆற்றல் பிரகாசிக்கும். எதிர்ப்புகளைச் சமாளிக்கக் கூடிய சக்தி உண்டாகும். கடிதப் போக்குவரத்து நற் செய்தி கொண்டு வரும். உடன்பிறந்தவர்கள் உதவு வார்கள். பிற மொழி, மதக்காரர்களாலும் அனு கூலம் உண்டாகும். பொருளாதார நிலை சீராகவே இருந்துவரும். சினிமா, நாடகம், நாட்டியம், சங் கீதம் போன்ற கலைத்துறைகளைச் சேர்ந்தவர்கள் வெற்றி நடைபோடுவார்கள். பெண்களுக்கு உற்சாக மான பாதை புலப்படும். கேளிக்கை, உல்லா சங்களில் ஈடுபாடு கூடப் பெறுவீர்கள். புதிய பொருட்களின் சேர்க்கை நிகழும். அரசுப் பணியாளர்களுக்கும் அரசியல்வாதிகளுக்கும் செழிப் பான சூழ்நிலை உருவாகும். நிர்வாகத்துறைகளைச் சேர்ந்தவர்கள் சுபிட்சம் காண்பார்கள்.

மருத்துவம், இரசாயனம், விஞ்ஞானம் போன்ற இனங்கள் லாபம் தரும். பயணத்தால் பயன் உண்டு என்றாலும் பாதுகாப்புடன் மேற்கொள்வது நல்லது. திரவப் பொருட்கள் ஆதாயம் கொண்டு வரும். ஏற்றுமதி, இறக்குமதி இனங்கள் லாபம் தரும். 2இல் செவ்வாய், சனி ஆகியோர் உலவுவ தால் பேச்சில் நிதானம் தேவை. அதன்மூலம் குடும்பத்திலும், வெளிவட்டாரத்திலும் உங்கள் செல்வாக்கைக் காத்துக் கொள்ளமுடியும். வீண் சண்டை, சச்சரவுகளில் ஈடுபடலாகாது. குருபலம் குறைந்திருப்பதால் அலுவலப் பணியாளர்கள் பொறுப்புடன் காரியமாற்றுவது அவசியமாகும். சுக்கிர பலம் காரணமாக மாமூலான காரியங்கள் சீராகவே நடந்துவரும். ஏப்ரல் 6ஆம் தேதி முதல் செவ்வாய் 3ஆமிடம் மாறுவதால் உங்கள் ஆற்றல் மேலும் கூடும். முக்கியமான ஓரிரு எண்ணங்கள் ஈடேறப் பெறுவீர்கள். துணிச்சலான காரியங்களில் பிரவேசித்து அதில் வெற்றியும் காண்பீர்கள். மார்ச் 15,16,18,19,22,23,27,29,30,31 ஏப்ரல் 2,5,8,9,10,12 தேதிகள் ஓரளவு சிறப்பானவை. தென்கிழக்கு, தென்மேற்கு, கிழக்குத் திசைகள் அனுகூலமானவை. மீன, விருச்சிக ராசிக்காரர்கள் உதவுவார்கள். 1,6 எண்கள் அதிர்ஷ்டமானவை.

---

கும்பம் : *(அவிட்டம் 3ஆம் பாதம் முதல், சதயம், பூரட்டாதி 3ஆம் பாதம் முடிய)*

---

ஜன்ம ராசியில் சனி, செவ்வாய், புதன் ஆகியோர் உலவுவதால் நீங்கள் எக்காரியத்திலும் பதற்றத் திற்கு இடம் தராமல் பொறுமையுடன் ஈடுபடுவது அவசியமாகும். அலட்சியப் போக்குக்கு இடம் தரக் கூடாது. உடல்நலம் கவனிக்கப்பட வேண்டிவரும். வீண் அலைச்சலைத் தவிர்ப்பது நல்லது. எடுத்த காரியங்களை நிறைவேற்ற அரும்பாடுபட வேண்டி வரும். பேச்சில் சூடான வார்த்தைகளை உதிர்க்க லாகாது. பொறியியல், சட்டம், காவல், இராணுவம் போன்ற துறைகளைச் சேர்ந்தவர்கள் அகலக்கால் வைக்க வேண்டாம். தொழிலாளர்களும், விவசாயி களும் கடுமையாகப் பாடுபட்டால்தான் பயன் பெற முடியும். வியாபாரிகள், எழுத்தாளர்கள், பத்திரிகை யாளர்கள் ஆகியோர் நூதனமான துறைகளில் பிரவேசிக்க வேண்டாம்.

குரு, சுக்கிர பலம் காரணமாக மோசமான விளைவுகள் என்று ஏதும் ஏற்படாவண்ணம்

காக்கப்படுவீர்கள். குடும்ப நலம், மக்கள் நலம், வாழ்க்கைத் துணைநலம் யாவும் சீராகவே இருந்துவரும். வெளிநாட்டுத் தொடர்பு லாபம் தரும். திரவப் பொருட்கள் ஆதாயம் கொண்டு வரும். கலைத்துறைகளைச் சேர்ந்தவர்களுக்கு வெற்றி வாய்ப்புகள் கூடும். பண நடமாட்டம் திருப்தி தரும். வங்கிகள், சேமிப்பு நிறுவனங்கள், அரசாங்க கஜானாக்கள் ஆகியவற்றில் பணிபுரிப வர்கள் செழிப்புப் பெறுவார்கள். அலுவலகப் பணியாளர்களுக்கு எண்ணம் ஈடேறும். மக்களால் பெற்றோருக்கும், பெற்றோரால் மக்களுக்கும் அனுகூலங்கள் உண்டாகும். ஆசிரியர்களும், பேரா சிரியர்களும் போற்றப்படுவார்கள். தெய்வப் பணிகள் நிறைவேறும். நல்லவர்களின் தொடர்பால் நலம் பெறுவீர்கள். மார்ச் 15,16,18,19,22,23,29,30,31 ஏப்ரல் 2,5,8,9,10,12 தேதிகள் சிறப்பானவை. வடகிழக்கு, தென்கிழக்குத் திசைகள் நலம் தரும். மீன, துலா ராசிக்காரர்கள் உதவுவார்கள். 3,6 எண்கள் அதிர்ஷ்டமானவை.

**மீனம்** : *(பூரட்டாதி 4ஆம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய)*

குரு, செவ்வாய், சனி ஆகிய முக்கியமான கிர கங்கள் அனுகூலமான நிலையில் சஞ்சரிக்காததால் உங்கள் எண்ணங்கள் ஈடேறத் தடைகளும், குறுக்கீடு களும் உண்டாகும். எதிர்ப்புகளின் கரம் வலு வடையும். மனத்தில் நிம்மதி இராது. அலைச்சலும் உழைப்பும் கூடும். பொருள் வரவைக் காட்டிலும் செலவுகள் அதிகரிக்கும். சிக்கன நடவடிக்கை அவசியம் தேவை. புதிய முயற்சிகளில் ஈடுபட இந்த நேரம் சிறப்புடையதாகாது. மாமூலான காரியங்களிலும்கூட அதிகம் அக்கறை தேவைப் படும். அந்தஸ்தும் மதிப்பும் சாதாரணமாகவே காணப்படும். உடல் நலனில் அக்கறை தேவை. உஷ்ணாதிக்கம் கூடுமாதலால் எச்சரிக்கையுடன் இருப்பது நல்லது. வீண் சண்டை, சச்சரவுகளில் பிரவேசிக்க வேண்டாம். குடும்பநலம் கவனிப்பின் பேரில் சீராக இருந்துவரும். உடன்பிறந்தவர் களுக்கும், உங்களுக்கும் இடையே சிறுசிறு கருத்து வேறுபாடுகள் ஏற்படும். பக்குவத்துடன் சமா ளிப்பது நல்லது.

வழக்கு, வியாஜ்ஜியங்களில் அனுகூலமான போக் கைக் காண்பது அரிது. தொழிலாளர்கள், விவ சாயிகள், உத்தியோகஸ்தர்கள் ஆகியோர் தங்கள் பொறுப்புணர்ந்து கடமையாற்றினால் சோதனை களுக்கு ஆட்படாமல் தப்பலாம். தீயோர் தொடர்பு கூடாது. பெரியவர்களின் மனம் புண்படும்படியான காரியங்களில் ஈடுபடவேண்டாம். பெற்றோர் நலனில் கவனம் தேவைப்படும். மக்களால் எதிர் பார்த்த காரியம் நிறைவேறத் தடை உண்டாகும். ஸ்பெகுலேஷன், கொடுக்கல்-வாங்கல் இனங்களில் ஈடுபடவேண்டாம். சுக்கிரபலம் கூடியிருப்பதால் கலைத்துறையினருக்கு வெற்றி வாய்ப்புகள் கூடும். மாதர்கள் தங்கள் எண்ணம் ஈடேறப் பெறுவார்கள். திரவப்பொருட்கள் லாபம் தரும். புதிய ஆடை, அணிமணிகளின் சேர்க்கைக்கு இடம் உண்டு. உங்கள் ஜனன கால ஜாதகப்படி தற்சமயம் யோக பலம் உள்ள தசை, புக்தி, அந்தரங்கள் நடை பெறுமானால் சங்கடங்கள் என்பவை குறையும். தெய்வ வழிபாட்டில் ஈடுபடுவதன் மூலம் மன அமைதி பெறலாம். மார்ச் 15,16,18,19,22,23,26,27,31 ஏப்ரல் 2,5,8,9,10,12 தேதிகள் ஓரளவு சிறப்பானவை. வடமேற்கு, தென்கிழக்குத் திசைகள் நலம் தரும். மீன, ரிஷப ராசிக்காரர்கள் உதவுவார்கள். 6,7 எண்கள் அதிர்ஷ்டமானவை.


FORM IV [See Rule 8] REGISTRATION OF NEWS PAPERS (CENTRAL RULES 1956

Statement about ownership and other particulars about "AMUDHASURABI"

| | | |
|---|---|---|
| 1. Place of Publication | : | 145 Linghi Street, Madras - 600 001. |
| 2. Periodicity of the Publication | : | Monthly |
| 3. Printer's Name | : | R. Janarthanan |
| Whether citizen of India | : | Yes, Indian |
| Address | : | M/s. Orr Jay Process<br>43, Laungs Garden Road, Madras - 600 002. |
| 4. Publisher's Name | : | A.V.S. Raja |
| Whether Citizen of India | : | Yes. Indian |
| Address | : | 145, Linghi Street, Madras - 600 001. |
| 5. Editor's Name | : | Vikiraman |
| Whether Citizen of India | : | Yes, Indian |
| Address | : | 2, Jayasankar Street, Madras - 600 033. |
| 6. Name and address of Individual who own the newspaper and partners or share holders holding more than one percen of the total capital | : | Shriram Trust<br>123, Angappa Naicken Street,<br>Madras - 600 001. |

I A.V.S. Raja hereby declare that the particulars given above are true to the best of my knowledge and belief.

Madras [Sd.] A.V.S. Raja

Date : 1.3.94 on behalf of Shriram Trust, Publisher.

# கேசட் அலமாரி

## அருள் தரும் அபிராமி

அகிலமெல்லாம் ஆட்டி வைக்கும் அன்னை அபிராமியின் புகழ் பாடும் பாடல்களின் தொகுப்பு இந்த கேசட். அருள் தரும் அபிராமி, ஆடி வெள்ளி, புத்தம் புது மலர், படியேறி வந்து, அகத்தினில், தேர் அசைய, தெய்வ மணம், பொய் சுகம், நன்னெறி, எனக்கும் உனக்கும் ஆகிய இனிமையான பக்திப் பாடல்களை எம்.எஸ். விஸ்வநாதனின் இனிய இசையில் பம்பாய் எஸ். ஜெயஸ்ரீ பாடியுள்ளார். செம்பனார் கோயில் சண்முகம் இந்தப் பாடல்களை எழுதியிருக்கிறார். அன்னையின் அருள் தேடும் பக்தர்கள் அனைவரும் கேட்க வேண்டிய பாடல்களின் தொகுப்பு இது.

## அன்றும் – இன்றும் – என்றும்

தமிழ்த் திரையுலகின் புகழ் பெற்ற பழைய பாடல்களின் அரிய தொகுப்பு இது. பிரபல பாடகி பி. சுசிலா பாடியுள்ள 12 பாடல்கள் இந்த கேசட்டில் அடங்கியுள்ளன. தேசுலாவுதே, காட்டுராணி, சொட்டு சொட்டு, சின்ன சின்ன கண்ணிலே, மலர்க்கொடி நானே, இரவுக்கு ஆயிரம், தென்றல் உறங்கிய, கொஞ்சி கொஞ்சி பேசி, வாடிக்கை, கண்கள் இரண்டும், கண்களின் வார்த்தைகள், காவேரி ஓரம் – என்ற இந்தப் பாடல்கள் கேட்பவர் மனதை உருக்கும் வகையில் – மயக்கும் விதமாக – கம்ப்யூட்டரைஸ்டு ஆர்க்கெஸ்ட்ரா மூலம் – அற்புதமாகப் பின்னணி இசை சேர்க்கப்பட்டுள்ளது. பழைய பாடல்கள். ரசிகர்கள் விரும்பி வாங்க வேண்டிய கேசட்.

## உள்ளம் ரெண்டும் ஒன்று

இந்த இசை நாடாவில் பிரபலப் பின்னணி பாடகி ஜிக்கி பாடிய 12 பாடல்கள் இடம் பெற்றுள்ளன. சொக்கா போட்ட நவாபு, செந்தமிழ் நாட்டு சோலையிலே, இருவிழி பருகும், வாசமிகும் மலர், எண்ணம் இனிப்பதேனோ, உள்ளம் ரெண்டும் ஒன்று, கல்யாண ஊர்வலம், திரை போட்டு, கொஞ்சுமொழி பெண்களுக்கு, ஏகாந்தமாம், ஒருமுறைதான் வரும், ராஜசேகரா... போன்ற இனிமையான பழைய பாடல்களை மீண்டும் ஜிக்கி – கிருஷ்ணராஜ், சண்முகசுந்தரம், அசோக் சந்திரசேகர், ராமகிருஷ்ணா ஆகியோருடன் இணைந்து பாடி அருமையான இசை விருந்தை வழங்கியிருக்கிறார். டி. செல்வகுமாரின் கம்ப்யூட்டரைஸ்டு ஆர்க்கெஸ்ட்ராவில் பாடல்கள் மனதைக் கவர்கின்றன.

## உலவும் தென்றல்

இந்தப் பாடல் கேசட்டில் மனதைக் கவரும் இனிமையான 12 பாடல்கள் உள்ளன. விண்ணோடும் முகிலோடும், ராஜா மகள், புதுப்பெண்ணின் மனதை, ஓ பக்... பக்..., கோடை மறைந்தால், ஆளை ஆளை, துள்ளாத மனமும், கண்ணாலே பேசி பேசி, ஆசையே அலை போலே, மின்னல் போலே ஆகும், பளிங்கினால் ஒரு மாளிகை, மேலே பறக்கும் ராக்கெட், ஆகிய இந்தப் பாடல்கள் பழைய மெட்டுக்களின் தரம் குறையாமல்– பி. சுசிலா, அசோக், சுனந்தா, எம்.எஸ். ராஜேஸ்வரி, கிருஷ்ணராஜ், சுபா, சுரேஷ், கைலாஷ், ஜிக்கி, பி.பி. சீனிவாஸ், டி.எல். தியாகராஜன், ஜி. ராஜசேகர், எல். ஆர். ஈஸ்வரி, ஜமுனா ராணி, ஏ. சுந்தர்ராஜன் ஆகியோரால் மிகவும் அருமையாகப் பாடப்பட்டுள்ளன. மேற்கண்ட நான்கு கேசட்டுகளும்

(வெளியீடு : எச்.எம்.வி. 6பி, நுங்கம்பாக்கம் ஹைரோடு, சென்னை – 600 034. ஒரு கேசட்டின் விலை : ரூ. 29.00)

## இராம நாடகக் கீர்த்தனை (2 பாகங்கள்)

இராமபிரானின் திவ்ய சரித்திரத்தை வாரியார் சுவாமிகள் இசையுடன் பாடி நமக்கு இந்த கேசட் மூலம் அளித்துள்ளார். அருணாசலக் கவிராயர் இயற்றிய இந்த அருமையான இராம நாடகக் கீர்த்தனைகள் வாரியாரின் வெண்கலக் குரலால் பாடப்பட்டு நமது உள்ளத்தைக் கொள்ளை கொள்கின்றன.

(வெளியீடு : ஆனந்தா கேசட்ஸ். விலை : ரூ. 54.00)

## ஆண்டாள் கல்யாணம்

சூடிக் கொடுத்த சுடர்க் கொடி என்று புகழப் பெறும் கோதை "ஆண்டாளின் திருமணம்" இந்த கேசட்டில் மிகவும் அற்புதமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. உபன்யாசச் சக்கரவர்த்தி டி.எஸ். பாலகிருஷ்ண சாஸ்திரிகள் அருமையான முறையில் தெளிவாக – கேட்பவர்கள் நெக்குருகிப் போகும் வண்ணம் ஆண்டாள் கல்யாணத்தை விவரித்துள்ளார்.

(வெளியீடு : ஆனந்தா கேசட்ஸ் 107, சிங்கண்ண செட்டி தெரு, சென்னை – 2. விலை : ரூ. 32.00)

மதிப்பீடு :
அறந்தாங்கி சங்கர்



டாக்டர் கி. வேங்கடசுப்பிரமணியன்

# திருக்குறளில் மானேஜ்மெண்ட்

இன்று உலகெங்கும் துன்பம், யாவருக்கும் துன்பம், எவருக்கும் துன்பம். காரண காரியமில்லாது துன்பம். என் அருமை நண்பர் ஒருவர் பல்கலைக்கழகத்திலே ஒரு நிர்வாக இயல் பேராசிரியர். அவர் அன்று ஓர் உண்மையைச் சொன்னார். "காலையில் இருந்ததுபோல் - மாலையில் விலைவாசிகள் இல்லை". கடுகு முதல் பெட்ரோல் வரை" திடீர், திடீரென முன்னறிவிப்பின்றி விலையில் ஏற்றம் காண்கின்றன. எனவே இத் துன்பத்தை - இப்படி ஏற்படும் பல துன்பங்களை எப்படி சமாளிப்பது என்று கண்டுபிடித்தலே இன்றைய நிர்வாக இயலின் முதல் பணி" என்றார்.

சற்று விளக்கமாகக் கூறுங்களேன் என்று நான் கேட்டதற்கு பேராசிரியர் ராவ் அவர்கள் (பங்களூர்) தன் துன்பப் புராணத்தை (அல்லது அசோக வனக் காவியம் என்று கூறலாம்) விவரித்தார்.

ஒரு நிர்வாகம் தனது சோப்புகளை இந்த விலையில் விற்கலாம் என்று திட்டமிட்டு, அதன்படி இலாபக் கணக்கைப்போட்டு விளம்பரம் செய்கிறது.

இன்று நம்மை சுவர்க்கபுரிக்கே கொண்டு செல்ல, பல வனிதையர்கள் பல சோப்புகளின் மாண்புகளை தினம் தினம் நமக்கு 'தூர்தர்ஷன்' மூலம் தெரிவிப்பதால் ஒவ்வொரு சோப் தயாரிப்பாளரும் "ஒரு குறிப்பிட்ட லாபத்துக்கு மேல் வைக்க முடியாது. எனவே மற்றைய சோப்புகளின் மத்தியில் தனது சோப்பின் உயர்வை நிலை நிறுத்தப் பல வழிகளில் முயன்று ஒரு விலையை நிர்ணயிக்கிறார்கள். ஆனால் திடீரென்று எண்ணெய் விலை உயர்த்தப்பட்டால் (சோப் என்பது எண்ணெயிலிருந்து தயாரிக்கப்படும் ஒரு பொருள்) நிர்ணயித்த பழைய விலையை என்ன செய்வது? அதை உயர்த்த வேண்டும். இல்லையெனில் கம்பெனியை சோப் போட்டுக் கழுவி மூட வேண்டும். இம் மாதிரித் துன்பம் வந்தால் கலங்காது வேறு வழிகளைக் (Rationalisation) காண வேண்டும் என்றார்.

"We should do this with a
Smile in this gloom"

என்றார் பேராசிரியர் ராவ் அவர்கள்.

ஆம் டயர் கம்பெனி ஒரு விலையைக் கூறுகிறது. திடீரென ரப்பர் விலையை உயர்த்திவிட்டால் டயர்கள் உருளாது. தயாரிப்பாளர்கள் உருண்டு விடுவார்கள். மனோதைரியம் தேவை இந் நேரங்களில். அதைத் தான் "With a Smile" என்றார் பேராசிரியர்.

இப் பேராசிரியருக்கும் பேராசிரியரான வள்ளுவப் பெருந்தகை அன்றே கூறினார்.

"இடுக்கண் வருங்கால் நகுக -
அதனை
அடுத்தூர்வது அஃதொப்பது இல்"
(621)

நன்றாகக் கவனியுங்கள்! துன்பம் வந்தகாலை மகிழ்க, மலர்க, ஏனெனில் துன்பத்தை நெருங்கி அடித்து விரட்ட உங்கள் மகிழ்ச்சியை விடப் பெரிய ஆயுதமே கிடையாது.

நெப்போலியன் வாழ்க்கையில் ஒரு சம்பவம்.

ஆஸ்டர் லீட்ஸ் சண்டையில் சரிவு. எதிரிகள் முன்னேற ஆரம்பிக்கிறார்கள். எல்லா வீரர்களும் தளபதி நெப்போலியனையே பார்த்துக் கொண்டிருக்கிறார்கள்.

மாவீரன் (உண்மையிலேயே மாவீரன், வெறும் பட்டமல்ல) நெப்போலியன் என்ன செய்தான்? அழுதானா, உழுதானா, கவலை கொண்டானா, கவன்றானா - அல்ல, அல்ல; குதிரையின் மீதிருந்து முன்னேறி வாளை உயர்த்தி "வெற்றி, வெற்றி" என்று கூறித் தாவினான். அவன் படைவீரர்கள் அனைவரும் தளபதி கொடுத்த



ஊக்கத்தில் 'வெற்றி வெற்றி' என்ற பெரு முழக்கத்துடன் திடீரென முன்னேறினர். எதிரிப்படை நாசமாகியது. தோல்வி முகத்தில் நெப்போலியனின் அறைகூவல் "வெற்றி முரசு", இவை "வெற்றிச் செல்வியை" அவனுக்கு அன்று அளித்தன.

இதுதான் வெற்றியின் சூட்சுமம். பத்து வருடம் அமித லாபத்தில் ஓடிக் கொண்டிருக்கும் ஒரு நிறுவனம், பதினோராவது வருடத்தில் கொஞ்சம் சரிந்தால், அதுபற்றி, இத்துன்பம் பற்றித் தளராது, புன்சிரிப்புடன் முன்னேறுபவனே நல்ல நிர்வாகி. சிறிது சரிந்த பைசா கோபுரம் அப்படியே பல நூற்றாண்டுகள் முழுதும் சரியாமல் இல்லையா? சரிவின்போது மனம் தளர்ந்தால் பைசா கோபுரம் கீழே முழுதும் விழுந்துவிடும். அதைத் தூக்கி நிறுத்தும் மாமந்திரம் எது?

"இடுக்கண் வருங்கால் நகுக" என்பதே அது. ⚘

"இடுக்கண் வருங்கால் நகுக"...

# நாணயம்



நேர்மை, நாணயம், உழைப்பு செழிக்கவும் உங்கள் பொருளாதாரம் கொழிக்கவும் வழிகாட்டும் பகுதி.

## பரஸ்பர நிதிகளில் முதலீடு செய்யலாமா?

எஸ். இராஜரத்தினம்

'மியூச்சுவல் ஃபண்ட்' என்றழைக்கப்படும் பரஸ்பர நிதி பற்றிய அறிவிப்புகள் தொடர்ந்து பத்திரிகைகளில் வந்த வண்ணம் இருக்கின்றன. அவைகளில் பல வெளிநாட்டு நிறுவனங்களுடன் தொடர்புடையன. சமீப காலத்தில் புதிய ஷேர் வெளியீடுகளுக்குக் குறைந்தபட்சம் ரூபாய் 5,000க்குக் குறையாமல் விண்ணப்பம் செய்ய வேண்டுமென்ற விதிமுறையை, பங்கு மார்க்கெட்டைக் கட்டுப்படுத்தும் 'செபி' (Securities and Exchange Board of India SEBI) என்ற அமைப்பு கொண்டு வந்திருப்பதால் சிறு சேமிப்பாளர்கள் இதில் அதிகமாகப் பங்கெடுத்துக் கொள்ள முடியவில்லை. இந்த விதிக்கு கூறப்பட்டுள்ள காரணமே இப்போது பரஸ்பர நிதிகள் மூலம் குறைந்த பட்சம் ரூபாய் 1000க்கு முதலீடு செய்வதற்கு வசதி இருப்பதால், ரூபாய் 5,000க்குக் குறைவான விண்ணப்பங்கள் ஏற்றுக் கொள்ளத் தேவையில்லை எனத் தீர்மானிக்கப்பட்டுள்ளது என்று ஒரு விளக்கம் அளிக்கப்பட்டு இருக்கிறது.

### பரஸ்பர நிதிகளால் நன்மை

இந்த நிதிகளின் நோக்கம் சேமிப்பாளர்களிடமிருந்து பங்குகள் மூலம் பெறப்படும் பணத்தை அவர்கள் அனுபவசாலிகளின் திறமையைப் பயன்படுத்தி பங்குகளின் தராதரங்களை அறிந்து வாங்குவதனால் விலை ஏற்றத் தாழ்வுகள் குறைவாகவே இருக்கும். நிதிகள் பரவலாக பல பங்குகளை வாங்குகிறார்கள். அதனால் சேமிப்பாளர்களுக்கு ஒரளவு தாங்களே முதலீடு செய்யும்போது ஏற்படும் அபாயம் பரவலாகிறது. அதனால் ஒரு சில தனிப்பட்ட பங்குகளின் வீழ்ச்சியினால் அவர்கள் நட்டப்பட வேண்டிய அவசியம் இல்லாது இருக்கிறது.

### நிதிகளின் வகைகள்

நிதிகளில் இரு வகைகள் உள்ளன. ஒன்று திறந்த நிதி முறை; மற்றது வரையறுக்கப்பட்ட நிதிமுறை. முதலாவது வகையில் பங்கு வாங்குவோர் அதை நிதியிடமே திரும்பக் கொடுப்பதற்கோ, எந்த நேரத்திலும் நிதியிடமிருந்து புதிய பங்குகளையோ அல்லது முன்னரே வெளியிட்டபின் வாங்கிய பங்குகளையோ பெற முடியும். அந்த நிதிகளின் பங்குகளில் அன்றாட தன் மதிப்பை (net asset value) வைத்து ஒரு பங்கின் விலை நிர்ணயிக்கப்படுகிறது. இதனால் ஏற்படும் பயன், அந்தப் பங்குகளை எளிதில் பணமாக்கவோ, எந்த நேரத்திலும் புதிதாகப் பெறவோ முடியும்.

இரண்டாவது வகைப் பங்குகளில் ஒருவர் முதல் நிலைச் சந்தையில் வெளியிடும் சமயத்தில் பெறமுடியும். மூன்று வருடங்களுக்குப் பின்னர் அது முடிவு பெறலாம். நிதிகள் அவைகளை வாங்கவோ விற்கவோ செய்வது இல்லை. ஆனால் அவைகளை பங்கு மார்க்கெட்டில் வாங்கவோ விற்கவோ முடியும்.

முதல் வகைப் பங்குகளுக்கு இப்போது யூனிட் டிரஸ்ட் ஆஃப் இந்தியா வழங்கி வரும் பங்குகளையும், இரண்டாவது வகைக்கு வரிச்சலுகையுடன் இப்போது வெளிவரும் பரஸ்பர நிதிப் பங்குகளையும் ஒப்பிடலாம்.

### நிதிகளுக்குள்ள வசதிகள்

புதிய வெளியீடுகள் வெளிவருவதற்கு முன்னரே நிதிகள் பெற முடியும். பலருடைய சேமிப்புகளைச் சேர்ப்பதனால் இவர்கள் மொத்தமாக முதலீடு செய்யும்போது குறைவான விலைக்குக் கூடப் பெறமுடியும். பல பரஸ்பர நிதிகள் கம்பெனிப் பங்குகளில் முதலீடு செய்வதால், இதுவரை மார்க்கெட்டில் ஏற்ற இறக்கத்தை ஏற்படுத்தி அதை ஒரு சூதாட்டக் களமாகப் பயன்படுத்துவோரின் பலம் நிச்சயம் குறையும். பங்குகள் மட்டுமல்லாமல் சில வங்கிகளின் கடன் பத்திரங்கள் போன்ற குறைந்த கால முதலீடுகளின் நிதிதங்கள் உபரி பணத்தைப் பயன்படுத்துவதால், பங்கு மார்க்கெட்டில் வாங்குவதற்குச்சரியான பங்குகள் இல்லாதபோது கூட ஒரளவு அவைகளில் இலாபம் ஈட்டமுடியும்.

### வளரும் வாய்ப்புகள்

மேல்நாடுகளில் குறிப்பிட்ட தொழில்களில் மட்டுமே முதலீடு செய்யக் கூடிய பரஸ்பர நிதிகள் உள்ளன. உதாரணமாக மோட்டார் வாகன தொழில்களில் மட்டுமோ அல்லது மின் தொழில்களில் மட்டுமோ அல்லது பெண்களால் மட்டுமே நடத்தப்படும் அல்லது பெண்களுக்கு வேலை வாய்ப்பு அளிக்கும் நிதிகளில் மட்டுமே முதலீடு செய்யும் பரஸ்பர நிதிகள் சில உள்ளன. நம் நாட்டில் இந்த அளவிற்கு இந்த பரஸ்பர நிதித்திட்டம் விரிவடையவில்லை. ஆயினும், வெளிநாட்டு நிதி நிறுவனங்களின் கவனம் நமது பங்கு மார்க்கெட்டின் மீது திரும்பி யிருப்பதாலும், நமது பங்குகள் இப்போது வெளிநாட்டில் உள்ள பங்கு மார்க்கெட்டுகளில் பதிவு செய்ய ஆரம்பித்துவிட்டன என்பதாலும், வருங்காலத்தில் நமது அரசின்

தாராளமய பொருளாதார நோக்கி னால் (Liberalisation) ஏற்றுமதிகள் அதிகரிக்க வாய்ப்பு இருப்பத னாலும், இந்தியாவில் பல பன்னாட்டு நிறுவனங்கள் தங்கள் முதலீடுகளைச் செய்ய இருப்பத னாலும், தவிர்க்க முடியாத விலை வாசி ஏற்றத்தினாலும் பங்குகளின் விலை மேலும் அதிகரிக்கவே செய் யும் என்பது பலரது நம்பிக்கை. இதனால் பரஸ்பர நிதிகள் திறமை யாகச் செயல்படும்போது நல்ல வாய்ப்பு உள்ளதாகப் பலர் நினைக்கின்றனர்.

## பரஸ்பர நிதிகளுக்குள்ள கட்டுப்பாடுகள்

தாராளமய பொருளாதார நோக்கு நமது அரசுக்கு தற்போது இருந்தாலும்கூட நிதிகளுக்குரிய உரிமைகளை ஓரளவு தளர்த்தி சிறு சேமிப்பாளர்களுக்கு நட்டம் ஏற் படாதவண்ணம் 'செபி' பல விதி முறைகளைக் கொண்டு வந்திருக் கிறது. அவைகளில் சில :

1. இந்திய அறக்கட்டளைகள் சட்டத்தின் கீழ் (Indian Trusts Act) தர்மகர்தாக்களின் கடமைகள் நிதி களின் இயக்குநர்களுக்கும் உண்டு. அந்தக் கடமைகளை மீறுபவர் களுக்கு அந்த சட்டத்தை அமுல் படுத்துபவர்களால் ஏற்படும் விளைவுகளை இந்த நடத்துனர் களும் சந்திக்க வேண்டிவரும்.

2. இந்த நிறுவனங்களுக்குள்ள சொத்துகளை நிர்வகிக்க ஒரு தனி கம்பெனி நிறுவப்பட வேண்டும். அந்தக் கம்பெனி களில் நல்ல கௌரவமும் தொழில் அனுபவமும் வாய்ந்தவர்கள் இருக்கவேண்டும் என்பது ஒரு விதி. நிர்வாக இயக்குநர் குழுவில் 80% பொது மனிதர்களாக இருக்க வேண்டும்.

3. இந்த கம்பெனிகளுக்கு ரூபாய் 5 கோடி நிகரச் சொத்து இருக்க வேண்டும். இதன் மூலமும் பங்குதாரர்களிடமிருந்து ரூபாய் 20 / 50 கோடிக்குக் குறையாமல் பெறப்படும் முத லுடன் குறைந்தபட்சம் தேவையான பொருள் வசதியுடன் அவைகள் இயங்க வாய்ப்பு ஏற்படுகிறது.

4. இந்த நிதிகளும் கம்பெனி களும் வேறு எந்த வகையான வியாபாரத்தையோ தொழிலை யோ நடத்தக்கூடாது.

5. இவைகள் யாருக்கும் கடன் அளிக்கக் கூடாது.

6. ஒரு தனிப்பட்ட கம்பெனி யில் இந்த நிதிக்குரிய சொத்து களில் 5 சதவீதமோ அல்லது எந்தக் கம்பெனியில் அந்த நிதி முதலீடு செய்கிறதோ அந்தக் கம்பெனியின் செலுத்தப்பட்ட மூலதனத்தில் 5 சதவீதத்திற்கு மேலோ முதலீடு செய்யக்கூடாது. இதனால் நிதியின் பணம் ஒரே இடத்தில் சென்றடைவது தவிர்க் கப்படுகிறது.

7. நிதிகள் வாங்கும் அல்லது விற்கும் பங்குகள் உடனுக்குடன் டெலிவரி எடுக்கப்படவேண்டும்.

8. நிதி வைத்திருக்கும் சொத்து களின் நிகர மதிப்பு வாரத்திற்கு ஒரு முறை வெளியிட்டு பிரசுரிக் கப்பட வேண்டும்.

9. இலாபத்தில் பங்குதாரர் களுக்கு 90% வருடாவருடம் விநி யோகிக்கப்பட வேண்டும்.

எந்தவிதமான முறையில் நிதி யின் கணக்குகள் வைத்திருக்கப்பட வேண்டும், எவ்வாறு ஆண்டுக் கணக்குகள் வெளியிடப்பட வேண் டும், எவ்வாறு விளம்பரம் இருக்க வேண்டும் என்பவைகளையும் 'செபி' நிர்ணயிக்கிறது. நிர்வாகத் தினர் கட்டுப்பாடுகளைக் கடைப் பிடிக்காவிட்டால் அவர்களுக்குத் தகுந்த தண்டனை உண்டு.

## வருமான வரியும் பரஸ்பர நிதியும்

பரஸ்பர நிதிகளுக்கு வருமான வரியிலிருந்து விலக்கு அளிக்கப்பட் டிருக்கிறது. பங்குதாரர்களுக்குக் கிடைக்கும் இந்த இலாபம் 80-L பிரிவின் கீழ் ஏனைய வரி விலக்குக்குட்பட்ட வருமானத்துடன் ரூபாய் 10,000 வரை வரிக்குட்படாது ஆயினும் ரூபாய் 2,500க்கு மேற்பட்ட வருமானத்திற்கு பிரிவு 194-F இன் படி வரிக்கழிவு உண்டு. ஆயினும் வரம்பிற்கு உட்பட்ட வருமானம் உள்ளவர்கள் அதற்குரிய பாரத்தை முன்கூட்டியே அனுப்பி னால் இந்த வரிக்கழிவைத் தவிர்க்கலாம். ஒருசில அங்கீகரிக் கப்பட்ட பரஸ்பர நிதிகளில் போடும் முதலீடுகளுக்கு 20% பிரிவு 80இன் கீழ் வரித்தள்ளுபடி கிடைக் கிறது. ஆனால் இத்தகைய நிதி களின் எண்ணிக்கை மிகச்சில. வரிச்சலுகை உள்ள முதலீட்டின் உச்சவரம்பு ரூபாய் 10,000 மட்டுமே.

பங்கு வருமானத்திற்கு ஓரளவு வரிச்சலுகை இருப்பினும் இந்த பங்குகளையே விற்கும்போது கிடைக்கும் மூலதன இலாபம் வரியிலிருந்துத் தப்ப முடியாது. மூன்று வருடங்களுக்குள் பங்கு களை விற்றால் இலாபம் குறைந்த கால மூலதன இலாபமாக கணக் கிடப்படுகிறது. இந்த இலாபம் இதர வருமானங்களைப்போலவே வரிக்கு உட்படும். மூன்று வருடங் களுக்கு மேற்பட்டால் நீண்டகால மூலதன இலாபம் ஆகும். அப் போது 20% வரி மட்டுமே. அத் துடன் நீண்டகால இலாபத்தைக் கணக்கிடும் போது அகவிலையேற் றத்தை சமன் செய்யும் நோக்குடன் அரசிதழில் (Gazette) அறிவிக்கப் பட்ட கிராக்கிப்படி கணக்கில் வாங்கிய விலையை அதிகப்படி எடுத்துக் கொள்வதால் நீண்டகால இலாபம் குறைவாகவே கணக்கிடப் படுகிறது.

## பரஸ்பர நிதிகளின் வருங்கால நிலை

இதுவரை இந்த பரஸ்பர நிதிகள் அரசு, அரசைச் சார்ந்த பொது நிறுவனங்களாக மட்டுமே இருந்து வந்தன. இப்போது நம் நாட்டுத் தனியார் நிறுவனங்கள் வெளிநாட்டு நிறுவனங்களுடன் சேர்ந்து பல பரஸ்பர பங்குகளை வெளியிட்டிருக்கின்றன. அவை கள் நல்ல வெற்றியைப் பெற்று வருகின்றன. வருங்காலத்தில் இன்னும் பல பரஸ்பர நிதிகளை பொதுச் சந்தையில் எதிர்ப்பார்க்க லாம். அவைகளிடையே ஏற்படும் போட்டியினால் நிர்வாகத் திறமை வளரும். இந்த பரஸ்பர நிதிகளி னால் பங்கு மார்க்கெட்டுகளும் ஓரளவு சீர் அடையலாம். இத் தகைய பரஸ்பர நிதிகளின் மூலம் தொழில்களுக்கு முதல் கணிச மான அளவில் கிடைக்கும் என்ப தால் வருங்காலத்தில் தொழில் வளம், வேலைவாய்ப்பு, உற்பத்தி ஆகியவை பெருகி மக்களின் வாழ்க்கைத்தரம் உயரவும் விலை வாசிகள் கட்டுப்படவும் சாத்தியக் கூறுகள் உள்ளன. இவை நமது எதிர்பார்ப்பு. இது சரியா என் பதைக் காலம்தான் சொல்ல வேண்டும். ○

# தோல் பொருட்கள் தயாரிப்புத் துறை

தோல் பொருட்கள் தயாரிப்புத் துறை மிகப் பழைமையான, அதே சமயத்தில் மிக முக்கியத்துவம் வாய்ந்த ஒரு துறையாகும். தமிழகத்தைப் பொறுத்தவரை ஜவுளித்துறை மற்றும் இன்ஜினியரிங் பொருட்கள் ஏற்றுமதி இவை இரண்டையும் மிஞ்சும் வண்ணம் தோலாடைகள், ஷூக்கள், ஷூ அப்பர்கள் போன்றவற்றின் ஏற்றுமதி முதலிடத்தை வகிக்கிறது. தோல் பொருட்களின் ஏற்றுமதியில் சென்னை ஒரு பிரதான நகரமாக உருவாகி வருகிறது. நாட்டில் அமைந்துள்ள தோல் பதனிடும் தொழிற்சாலைகளில் 70 சதவிகிதம் தமிழ்நாட்டில் அமைந்துள்ளது. இதன் காரணமாகத் தோல் பதனிடும் தொழிலில் நமது மாநிலமே முதலிடம் வகிக்கிறது. சில வருடங்களுக்கு முன்புகூட தமிழ் நாட்டிலிருந்து தோல் பொருட்களின் ஏற்றுமதி நாட்டின் மொத்த ஏற்றுமதியில் 80 சதவிகிதமாக இருந்தது. தற்போது இது 46 சதவிகிதமாகக் குறைந்துவிட்டது. பதனிடப்பட்டத் தோல் ஏற்றுமதிக்கான சலுகைகளை அரசு முதலில் குறைத்துப் பின்னர் 1986 இல் முழுவதுமாக விலக்கிக் கொள்ளவே இவ்வாறு நேர்ந்தது.

தமிழகத்திலிருந்து தோல் பொருட்கள் ஏற்றுமதியை எடுத்துக் காட்டும் விவரம் :

| வருடம் | இந்தியா முழுவதும் | தமிழகம் மட்டும் | தமிழகத்தின் பங்கு (%) |
|---|---|---|---|
| | (மில்லியன்களில்) | | |
| 1979–80 | 4253.83 | 3064.71 | 72.05 |
| 1984–85 | 5847.51 | 3447.25 | 58.95 |
| 1991–92 | 32147.14 | 14769.94 | 45.94 |

தமிழகத்தில் தோல் பொருட்கள் தயாரிக்கும் தொழில் முற்றிலும் சிறு தொழில் துறையின் வசமே உள்ளது. மேலும் தோல் பதனிடப்படத் தேவையான தோலில் 12 சதவிகிதம் மட்டுமே தமிழகத்தில் கிடைக்கிறது. மீதமுள்ளவை வெளிமாநிலங்களில் இருந்து வரவேண்டி இருப்பதால் உற்பத்திச் செலவு கருதி தோல் பொருட்கள் தயாரிக்கும் இடத்திலேயே இவற்றை நிறுவுவதால் தமிழகம் பின்னுக்குத் தள்ளப்பட்டுள்ளது. தமிழகத்தில் 577 தோல் பதனிடும் தொழிற்சாலைகள் உள்ளன.

சென்னை – 113, வாணியம்பா 101, ராணிப்பேட்டை – 94, ஆம்பூ 74, மற்றவை – 195. (திண்டுக்க திருச்சி முதலியன).

இவற்றில் 63% சிறுதொ பிரிவைச் சார்ந்தவை. நாட்ட தோல் பொருட்கள் தயாரிப் ஈடுபட்டுள்ள பணியாளர்களில் சதவிகிதம் தமிழகத்தில் உ னர். உத்தரப்பிரதேசம் மற் மேற்கு வங்காளம் அடு இடத்தை பிடிக்கின்றது. தே சம்பந்தப்பட்ட பல்வேறு பொ கள் தயாரிப்பும், அவை அ துள்ள இடம், வேலை செய் பணியாளர்கள் பற்றிய ரங்கள்:

| தயாரிப்பு | இடம் | தொழிற் கூடங்கள் | பணி யாள |
|---|---|---|---|
| ஷூக்கள் மற்றும் ஷூ அப்பர்கள் | சென்னை, ஆம்பூர், இராணிப்பேட்டை, திண்டுக்கல், வாணியம்பாடி, திண்டிவனம். | 133 | 280 |
| தோல் பொருட்கள் (மணிபர்ஸ், பெல்ட், போன்றவை) | சென்னை | 75 | 350 |
| தோல் பதனிடுதல் | சென்னை, இராணிப் பேட்டை, ஈரோடு, வாணியம்பாடி, திண்டுக்கல், ஆம்பூர், திருச்சி, பேரணாம்பட்டு | 577 | 333 |
| தோல் ஆடைகள் | சென்னை | 250 | 800 |
| மொத்தம் | | 1035 | 728 |

தோல்பொருட்கள் சம்பந் பட்டத் தயாரிப்புகளை கண்கா யாக நடத்தி ஆண்டுதோறும் செ நாடு மற்றும் இந்திய தொழி பர்கள் மற்றும் வியாபாரப்

மூகர்களை சென்னைக்கு வர வழைக்கிறார்கள். இது நிரந்தர மாக்கப்பட்டு குளிர்பதன வசதி செய்யப்பட்ட பெரிய கட்டடங் களில் கண்காட்சியாக வைக்க ஏற்பாடு செய்யப்படவேண்டும். சிறுதொழில் துவங்க நிதியுதவி, தொடர்ந்து மின்சாரம், அரசின் இடைவிடா ஆதரவு இருந்தா லொழிய இத்தொழில் முன்னே றாது. மேலும் இவை அமைந் துள்ள ஊர்களில் முறையான அமைப்பாக இவற்றை நிறுவி கழிவு நீர் சுத்தப்படுத்த நவீன இயந்திரங்கள் நிறுவப்பட வேண் டும். தோல் பதனிடும் இடத்தின் அருகே தோல்பொருட்கள் தயாரிக் கவும் தொழிற்கூடங்கள் நிறுவப்பட வேண்டும். இத்துறை மிகவும் பழைமையானது என்பதால் இது நவீனமயமாக்கப்படுவது அவசிய மாகும்.

தோல் பொருட்கள், ஷூக்கள் தயாரிப்பில் பொதுமக்களுக்குப் பங்குகள் வழங்கிய தமிழக நிறு வனங்களும் அவற்றின் செயல் பாடுகள் பற்றியும் கீழே தரப்பட் டுள்ளன.

பெரிய அளவில் பங்கு மூலதனம் திரட்டினாலும் ஏற்று மதி ஆர்டர்கள் தொடர்ந்து கிடைப்பதில்லை என்பதால் சுமா ரான முடிவுகளே இதுவரை வெளிவந்துள்ளன. இத்துறை முக்கியத்துவம் பெறும் பட்சத்தில் தமிழகம் தலைநிமிர்ந்து நிற்க ஒரு பெரிய வாய்ப்புள்ளது என்பது நிச்சயம்.

| நிறுவனத்தின் பெயர் | விற்பனை 31.3.93 முடிய (கோடிகளில்) | நிகர லாபம் | பங்கு முலதனம் (கோடிகளில்) |
|---|---|---|---|
| 1. கார்டன் உட்ராப் | 17.93 | 50 லட்சம் | 3.93 |
| 2. ராம் லெதர் எக்ஸ்போர்ட்ஸ் | 1.67 | 75 லட்சம் | 4.60 |
| 3. என்.பி.புட்வேர் | 1.50 | 4 லட்சம் | 1.50 |
| 4. செந்தூர் ஷூஸ் | 1.24 | நஷ்டம் | 3.45 |
| 5. ஷ்ருஷ்டி ஷூஸ் | 0.37 | நஷ்டம் | 5.40 |

## நோவா எலக்ட்ரோ மாக்னடிக்ஸ் லிட்

நோவா எலக்ட்ரோ மாக்ன டிக்ஸ் லிட். தனது உற்பத்தித் திறனை விரிவுபடுத்தியுள்ளது. தற்போது 144 இலட்சம் வீடியோ காசட்டுகளை ஏற்றுமதிக்காக தயாரிக்கும் இந்நிறுவனம் விரிவு படுத்திய பிறகு 474 இலட்சம் வீடியோ காசட்டுகள் தயாரித்து உலக அரங்கில் அதிக அளவு வீடியோ காசட் தயாரிக்கும் நிறு வனங்களுள் ஒன்றாக அமையும். ஏற்றுமதியாகும் காசட்களின் மதிப்பு உள்நாட்டு விலையில் ரூ. 4.50 கோடி மதிப்புள்ளதாகும். ஐரோப்பா, வளைகுடா நாடுகள் உட்பட 26 நாடுகளில் NEML காசட்டுகள் பிரபலமடைந்துள் ளன. 1993-ஆம் ஆண்டு கணக்கு முடிவில் ரூ. 820 லட்சம் நிகர லாபமும், செப்டம்பர் 93 முடி வடைந்த அரையாண்டில் ரூ. 2411 லட்சம் நிகர லாபமும் அடைந்துள்ளது. இது ஒரு Nova-RG குரூப் நிறுவனமாகும்.




## ரஜினி சூப்பர் நெல்லிக்காய் துண்டுகள்

எல்லா வயதினரும் சுவைத்து மகிழ வைட்டமின் சி சத்து நிறைந்த ரஜினி சூப்பர் நெல்லிக்காய் துண்டுகளை அறிமுகப்படுத்தி யுள்ளது, நேச்சர் கேர் புரொ டக்ட்ஸ் லிமிடெட்.

தன் படங்களில் 'ர' (ஆர்) எழுத்தை முதலாவதாகக் கொண்டு புதுமுகங்களை அறி முகப்படுத்தும் இயக்குநர் பாரதி ராஜா 'ரஜினி சூப்பர் நெல்லிக் காய்' பாக்கெட்டினை அறிமுகப் படுத்தினார்.

அறிமுக விழாவில் நடிகர் ராஜா, சின்னி ஜெயந்த், நடிகை சிந்துஜா, மோகனா மற்றும் பலர் கலந்துகொண்டனர்.

நேச்சர் கேர் புரொடக்ட்ஸ் லிமிடெட்டின் நிர்வாக இயக்குநர் சி.கே. குமாரவேலு அனைவரை யும் வரவேற்றார்.

கையடக்க பாக்கெட்டின் விலை ரூ. 1.25. 100 கிராம் டப்பா வின் விலை ரூ. 15.50. தமிழக, ஆந்திர மாநிலங்களில் எல்லா கடைகளிலும் ரஜினி சூப்பர் நெல் லிக்காய் துண்டுகள் கிடைக்கும்.

நாகு

# பிஸினஸ் பெருக்கும் பிளாஸ்டிக் மணி

## நிறுவன நியூஸ்




'**பி**ளாஸ்டிக் மணி' என்று நாசூக்காக அழைக்கப்படும் கடன் அட்டைகளை (Credit cards) வழங்காத வங்கிகளே இல்லை. இவ்வங்கிகள் மேலும் மேலும் கூடுதல் வசதிகளைக் கொண்ட கடன் அட்டைகளை வழங்கி நமது பல செலவுகளை, கையில் காலணா காசு இல்லாத போதும் செய்து கொள்ள உதவுகிறார்கள். இந்தக் கடன் அட்டைகளின் அறிமுகம் சில வகைகளில் ஏற்றுக் கொள்ளக் கூடியதாக இருந்தாலும், கட்டுப்பாடில்லாமல் செலவு செய்யவும் தூண்டுகோலாக இருந்து விடுகிறது என்பது சிலரது கருத்து.

சமீபகாலமாக வங்கிகள் மட்டுமல்லாது சில வியாபார நிறுவனங்களும்கூடக் கடன் அட்டைகளைப் போன்ற சலுகை அட்டைகளை வழங்கி வருகின்றன. கடன் அட்டைகளைப் போலல்லாமல் இந்தச் சலுகை அட்டைகளைக் கொண்டு, தோன்றிய பொருளை தோன்றிய இடத்தில் பெறமுடியாது. மாறாகக் குறிப்பிட்ட பொருளை, அறிமுகப்படுத்தும் நிறுவனத்தில் மட்டுமே, சலுகை விலையில் மட்டுமே (கடன் அல்ல) பெறமுடியும்.



### ஸ்டாண்டர்டு சார்டர்டு வங்கியின் எக்ஸிகியூடிவ் கார்டு

**ஆ**ண்டு வருமானம் ரூபாய் 90,000 பெறுபவர்களுக்கான கடன் அட்டை. நுழைவுத் தொகையாக ரூபாய் 200ம் ஆண்டுத் தொகையாக ரூபாய் 900ம் வசூலிக்கப்படுகிறது. சுமார் 40,000 ஹோட்டல்கள், கடைகள், ரெஸ்டாரண்ட்டுகளில் உபயோகிக்கக்கூடியது. இந்த அட்டை வைத்திருப்பவர்களுக்கு 'பிஸினஸ் டுடே' ஆங்கில இதழ் அனுப்பி வைக்கப்படுகிறது. ரூபாய் 8,000 வரை மாதம் ஒன்றுக்குத் தொகையாகப் பெற்றுக் கொள்ளும் வசதி கொண்டது. மருத்துவமனைகளில் தேவைப்படும்போது படுக்கை வசதியும், ஏனைய அனைத்து மருத்துவ வசதிகளில் தள்ளுபடியும் இந்த அட்டை உரிமையாளர்கள் பெறலாம். இவற்றிற்கு மேலாக விபத்துக் காப்பீட்டுத் தொகையாக ரூபாய் 8 லட்சம் இந்த அட்டை உரிமையாளருக்கும், ரூபாய் 2.5 லட்சம் அடுத்து உறவினருக்கும் வழங்கப்படுகிறது.

ஸ்டாண்டர்டு சார்டர்டு வங்கி, 'கோல்டு ஸ்டாண்டர்டு' எனும் பெயரில் மேலும் உயரிய வசதிகளைக் கொண்ட கடன் அட்டையையும் வழங்குகிறது. இதைப் பெற ஆண்டு வருமானம் ரூ. 1,20,000 ஆக இருக்க வேண்டும்.



### மதுரை வங்கியின் ப்ளூ சிப் மற்றும் ப்ளூ லைன் கார்டுகள்

**ப்ளூசிப் கார்டு :** வியாபாரிகளுக்கான கரண்ட் அக்கௌண்ட் கார்டு. இந்தக் கார்டு வழங்கப்பட குறைந்த பட்சம் ரூபாய் 2 லட்சம் கணக்கில் வைத்திருக்க வேண்டும். இந்தக் கார்டு வைத்திருப்பவர்களுக்கு வங்கி சேவைகளுக்கான தொகையில் 50 சதவிகிதத்திற்கும் மேலான தள்ளுபடி கொடுக்கப்படுகிறது. அதாவது டிமாண்ட் டிராஃப்ட், மெயில் டிரான்ஸ்பர்கள், காசோலைப் பரிமாற்றம் போன்றவற்றுக்காக வசூலிக்கப்படும் தொகையில் இந்தத் தள்ளுபடி செய்யப்படுகிறது.

இந்தக் கார்டுதாரர்கள், இந்தியாவெங்கிலும் உள்ள மதுரை வங்கியின் எந்தக் கிளைகளிலும் ரூபாய் 25,000இல் இருந்து ரூபாய் 50,000 வரை பணம் பெற்றுக் கொள்ளலாம். இவர்களுக்கு விபத்துகால இன்ஷூரன்ஸ் தொகையாக ரூபாய் 1 லட்சத்தில் இருந்து ரூபாய் 2 லட்சம் வரை வழங்கப்படுகிறது. இவை தவிர, பாதுகாப்புப் பெட்டகம் வழங்குவதில் முன்னுரிமை அளிக்கப்படுவதோடு, 'கீ டெபாசிட்டும்' வசூலிக்கப்படுவதில்லை.

**ப்ளூ லைன் கார்டு :** ரூபாய் 50,000 வரை சாதாரண சேமிப்புக் கணக்கில் வைத்திருப்பவர்களுக்கு இந்தக் கார்டு வழங்கப்படுகிறது. எல்லா வங்கிகளையும் போல 5 சதவிகித வட்டியுடன் ப்ளூ சிப் கார்டுக்கு உண்டான அனைத்துக் கூடுதல் வசதிகளும் உண்டு. ஆனால் பணமாக ரூபாய் 25,000 வரை மட்டுமே பெற்றுக் கொள்ள முடியும். சேமிப்புக் கணக்கில் ஒரு லட்சம் வைத்திருந்தால், ரூபாய் 50,000 வரை தொகை எந்த கிளையிலும் பெறலாம்.



### காஞ்சன மஹாலின் கோல்டு கிளப் கார்டு

**செ**ன்னை தியாகராய நகரில் அமைக்கப்பட்டுள்ள தங்க நகைகளுக்கான ஷோரூம் காஞ்சன மஹால். விரைவில் பெண்களுக்கான அனைத்து துணி மணி வகைகளையும் குறிப்பாகப் பட்டு வகைகளையும் கொண்ட ஷோரூமாக மாறவிருக்கிறது.

இந்நிறுவனம் 'கோல்டு கிளப் கார்டு' என்ற பெயரில் சலுகை அட்டை ஒன்றினை அறிமுகப் படுத்தியுள்ளது. ரூபாய் 10,000

மதிப்புள்ள தங்க நகைகளை வாங்கும் அனைத்துத் தரப்பினருக்கும் இந்தக் கார்டு வழங்கப்படுகிறது. இந்தக் கார்டு பெற்றவர்கள் வாழ்நாள் முழுவதும் காஞ்சனமஹாலில் வாங்கப்படும் தங்க நகைகளுக்கு 1 சதவிகித தள்ளுபடி பெற இயலும். ரூபாய் 10,000ற்கும் மேலான மதிப்புள்ள நகைகளை வாங்குபவர்களுக்கு 2 சதவிகிதத் தள்ளுபடி கொண்ட மற்றுமொரு சலுகை அட்டையும் வழங்கப்படுகிறது.

பெயருடன், அவரவர் தொழிலுக்கேற்ப வரிசைப்படுத்தப்பட்டு அதற்கான சங்கேத எழுத்துகளும் (Code letters) பொறிக்கப்பட்டுள்ள இந்த 'கோல்டு கார்டு' இதுவரை சுமார் 2337 பேருக்கு வழங்கப்பட்டுள்ளது.

இந்தக் கார்டுகளை உபயோகிப்பதன் மூலம் சலுகை பெறலாமே தவிர, கடன் வசதி வழங்கப்படுவதில்லை.



## காவினி ஃபிஷரீஸ் லிமிடெட்

கல்கத்தாவில் பிரபலமான காவினி குருப் நிறுவனம், 'காவினி ஃபிஷரீஸ்' என்ற பெயரில் தனது வர்த்தகத்தை உலகளவில் பெருக்க முடிவு செய்துள்ளது. அதற்காக இறால் மீன் உற்பத்தி - ஏற்றுமதியில் தனது ஈடுபாட்டைச் செலுத்தியுள்ளது.

50 கோடி ரூபாயில் இறால் மீன் பண்ணை மற்றும் பதப்படுத்தும் தொழிற்சாலை, ஆழ் கடல் மீன் பிடிக்கும் திட்டம் போன்ற திட்டங்களைத் தீட்டியுள்ளது.

இறால் மீன் ஏற்றுமதியில் முதலிடம் வகிக்கும் சிங்கப்பூரைச் சேர்ந்த ஏசியா பசிபிக் சீ ஃபுட்ஸ் நிறுவனத்துடன் தொழில்நுட்பம், முதலீடு வகைகளுக்காகவும், நவீன முறையில் இறால் மீன்களை வளர்க்கும் நுணுக்கங்களுக்காகவும் சிங்கப்பூர் மோனோடெக் நிறுவனத்துடன் ஒப்பந்தம் செய்து கொண்டுள்ளது

வேகமாக வளர்ந்து வரும் காவினி குருப் நிறுவனத்தின் தலைவர் பாசு புவல்கா, ஏசியா பசிபிக் சீ ஃபுட்ஸ் நிறுவனத்தின் நிர்வாக இயக்குநர் டி. ரவீந்திரனுடனும், மோனோடெக் நிறுவனத் தலைவர் ராண்டலிடமும் செய்து கொண்டுள்ள இந்த ஒப்பந்தத்தின் மூலம் இந்தியா இறால் மீன் ஏற்றுமதியில் 1993-94 ஆண்டில் ரூ. 2000 கோடியை எட்டப் போகிறது. •

## விதான் சூப்பர் மார்க்கெட் வழங்கும் பிரீமியம் ஷாப்பர்ஸ் கார்டு

சென்னை மயிலாப்பூரில் இயங்கிவரும் மாபெரும் சூப்பர் மார்க்கெட் விதான். மளிகை சாமான்கள், நவீனப் பொருட்கள், ஆடை ஆபரணங்கள், காலணி வகைகள் என்று ஒரு குடும்பத்திற்கு வேண்டிய அனைத்துப் பொருட்களையும் ஒரே கூரையின் கீழ் பெறக்கூடிய வகையில் அமைக்கப்பட்டுள்ள இந்நிறுவனம் வாடிக்கையாளர்களைக் கவரும் வகையில், மாதந்தோறும் தவறாமல் பொருட்கள் வாங்கும் வாடிக்கையாளர்களுக்கு என பிரீமியம் ஷாப்பர்ஸ் கார்டினை வழங்குகிறது.

மாதாமாதம் நாம் பொருள்கள் வாங்கும் ஒரு குறிப்பிட்ட தொகைக்குச் சரியான தொகையை முன்பணமாகக் கொடுத்து விட வேண்டும். மாதா மாதம் பணம் கொடுத்துப் பொருள்கள் பெற்றுக் கொள்ள வேண்டும். முன்பணம் கொடுத்த தேதியிலிருந்து ஓராண்டு முடிவில் முன்பணத்தில் 50 சதவிகிதத்திற்கு பரிசுக் கூப்பன்கள் வழங்கப்படும். இந்தக் கூப்பன்களை விதான் சூப்பர் மார்க்கெட்டின் எந்தக் கிளையிலும் காண்பித்து நமக்குத் தேவையானப் பொருளை இலவசமாகப் பெறலாம். கடன் வசதியோ, சலுகை விலைக் குறைப்போ இந்த அட்டையின் மூலம் பெறமுடியாது. ஆனால் நமக்குத் தேவையான மாதாந்தர பொருட்களை வீட்டிலேயே பெற்றுக் கொள்ளலாம்.

இவ்வாறு கடன் அட்டைகளும், சலுகை அட்டைகளும் நிறுவனங்கள் வழங்குவதும், ஆர்வமுடன் பொதுமக்கள் பெறுவதும் இன்று நாகரிகமாகவே கருதப்படுகிறது. கிரெடிட் கார்டு வைத்திருப்பது Status Symbol ஆகக்கூட மாறிக் கொண்டு வருகிறது.



## ஸ்ரீ குமரன் ஸ்டோர்ஸ் வழங்கும் ஸ்ரீ குமரன் பிளாட்டினம் கார்டு

திருமணப் பட்டுப் புடைவைகளுக்குப் பெயர் பெற்ற ஸ்ரீ குமரன் ஸ்டோர்ஸ் அறிமுகப்படுத்தியுள்ளது ஸ்ரீ குமரன் பிளாட்டினம் கார்டு. கடன் வசதி அல்லாத, 5 சதவிகித தள்ளுபடி மட்டுமே கொண்டது இந்தக் கார்டு.

ரூபாய் 3000த்தை ஐந்து வருடங்களுக்கு இந்நிறுவனத்தில் ஃபிக்சட் டெபாசிட்டாகப் போட்டு வைக்க வேண்டும். டெபாசிட்தாரர்களுக்கு பிளாட்டினம் கார்டும், பாஸ்புத்தகமும், ரசீதும் கொடுக்கப்படுகிறது. இந்த ஐந்து வருடங்களில் ஓர் ஆண்டிற்கு ரூபாய் 75,000க்கு மிகாமல் துணிமணிகள் எடுத்துக் கொள்ளலாம். மொத்தத் தொகையில் 5% தள்ளுபடி செய்யப்படுகிறது. ஐந்தாண்டு முடிவில் டெபாசிட் தொகை, வாங்கிய துணிமணிகளின் விலையில் சரி செய்து கொள்ளப்படுகிறது. இரண்டு பேர் பெயர்களில் இந்தக் கார்டைப் பெறலாம் என்றாலும் முதல் விண்ணப்பதாரர் பெயர் மட்டுமே கார்டில் பொறிக்கப்படுகிறது.

இத்திட்டம் அறிமுகப்படுத்தப்பட்டுள்ள மிகக் குறுகிய காலத்திற்குள் சுமார் 700 சலுகை அட்டைகள் வழங்கப்பட்டுவிட்டன.

திருமணம் மற்றும் வைபவங்களுக்கு அடிக்கடி துணிமணி எடுக்க வேண்டிவரும் அவசியம் உள்ளவர்களுக்கு இத்திட்டம் நன்கு பயன் அளிக்கும்.



சென்னை - 2இல் உள்ள ஆர்.ஜே. பிராசஸ் ஆஃப்செட் அச்சகத்தில் அச்சிட்டவர் : ஆர். ஜனார்த்தனன். ஸ்ரீராம் டிரஸ்ட், சென்னை - 600 001 சார்பில் வெளியிட்டவர் : ஏ.வி.எஸ். ராஜா. ஆசிரியர் - கலைமாமணி விக்கிரமன். நிர்வாக அலுவலகம், 145, லிங்கச் செட்டி தெரு, தொலைபேசி : 5228545, 510535. ஆண்டுச் சந்தா ரூ. 72
...பெ.எண் : 5043, சென்னை - 600 001.